# ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமி சரித்திரம்



# ஸ்ரீ ராகவேந்திர சுவாமி சரித்திரம்

(மந்திராலயத்தில் வாழும் முனிவர்)



ஆசிரியர்

**ஸ்ரீ குருராவ் கலம்தானி**

தமிழாக்கம் :— அறிவு கமலாபுரம்

**ஏ.எம். கறடி & சன்ஸ்**

பப்ளிஷர்ஸ் அண்டு புக்செல்லர்ஸ்

ஸ்டேஷன் ரோடு, ஹூப்ளி (கருநாடகம்)

பொருளடக்கம்

பிற்சேர்க்கை :

தொடக்கவுரை

சமயங்கள் பலவும்' முக்தி பெற எளிய வழிகளை காட்டும் வேதங்கள், ஷம்ருதங்கள் ஷிருதங்கள் தோன்றிய இந்த பாரத புண்ணிய பூமியில் கங்கை, யமுனை, கோதாவரி, சரஸ்வதி, நர்மதை, தபதி, சிந்து காவேரி, போன்ற புண்ணிய நதிகள் பல ஓடுகின்றன தியானம் செய்தலையே தொழிலாகக் கொண்ட முக்காலும் அறியவல்ல சக்தி படைத்த ரிஷிகள் பலர் வாழ்ந்தனர். மக்கள் நல்வழி நடந்து உயர்வடையும் பொருட்டு ஸ்ரீ ஹரிஹரர் போன்ற பல கடவுள்களும் தேவதைகளும் அவாதாரம் எடுத்த இடம் இப்பாரதம்

இப்போது நடக்கின்ற கலியுகத்தில் ஸ்ரீ ஹரி அவதாரம் எடுக்கப் போவதில்லை. அவர் மற்ற தெய்வங்களை இவ்வுலகிற்கு அனுப்பி மக்கள் கடவுள் மீது கொண்டுள்ள பயத்தையும் அடிமை தன்மையும் நீக்கி அருளுவார், அப்படி அனுப்பியவர்களுள் ஒருவர் ஸ்ரீ வாயு பகவான் ஆவார். இவர் பாரதம் முழுவதும், என்றும் நிலைத்து நிற்கும்படியாக ஸ்ரீ ஹரியின் வல்லமையை எடுத்துரைத்த ஸ்ரீ மாதவாச்சாரியார் ஆவார். ஸ்ரீ மதவருக்குப் பிறகு வந்த பெருமுனிவர்களில் மந்திராலயத்தை சேர்ந்த ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் ஒருவர். இவர் சத்திய லோகத்து சங்கு கர்ணனின் அவதாரமாகும். ஸ்ரீ பிரம்மாவின் சாபத்தினால் கிருத யுகந்தில் ஆட்சி புரிந்த இரணிய கசிபுவின் மகனாக ஸ்ரீ பிரகலாத ராஜபவாக பிறப்பெடுத்தார். அந்த கிருத யுக பிரகலாதன் கலியுகத்தில் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளாக பிறவியெடுத்துள்ளார்:

ஸ்ரீ பிரகலாதனுடைய காலம் முதல் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் காலம் வரையில் கர்மதேவதையான சங்கு கர்ணன் அனிஷ்ட புண்ணியங்களை அளவின்றி குவித்துள்ளார். இப்புண்ணியங்கள் முக்தி பெற இயலாது. உலகியல் சம்பந்தபட்ட, உடல் இண்பகளுக்கு மட்டுமே பயனளிக்கவல்ல தாகையால் அவைகளை அவரை நாடிவரும் பக்தர்களுக்கும் சீடர்களுக்கும் அளித்தபடி துங்கபத்திரை நதிக்கரையில் ஸ்ரீஇராகவேந்திர சுவாமிகள் மடம் என்ற அழைக்கப் படுகிற மந்திராலயத்தில் வாழ்ந்துக்கொண்டிருக்கிருர்

ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் சாதிசமயங்களுக்கு அப்பார்பட்ட கருணை உள்ளம் கொண்டவர். அவரை யார் சென்று வழிபடுகின்ருர்களோ அவர்களுக்கு அவர்கள் எண்ணுகிற நடக்க முடியாத காரியங்கள் கூட நடைபெறும்படி அருளுவார். ஏழைகளுக்கு செல்வம், வேலையில்லாதோருக்கு வேலை, விரும்பியபடி திருமணம் ஆகியன அவரை எண்ணி வழிபடுபவர்களுக்கு நிச்சயம் கிடைக்கும். இவ்வுலகில் யாராலும் குணப்படுத்த முடியாத எந்த நோயையும் குணப்படுத்த வல்லவரும், ஸ்ரீஹரியையும் முக்தியையும் அறிந்து கொள்ள வழிகாட்டுமவரும் அவர் ஒருவரே.

இவர் முற்றும் அறிந்த முக்காலும் தெரிந்த சர்வ ஞானி பாவமற்றவர், தூமையானவர், சாந்தமானவர் மன்னிக்க முடியாத பெருங்க குற்றங்களையும், மன்னிக்கவல்லவர். பக்தர்களின் பாதுகாவலர். நான்கு புருஷோத்திரங்களையும் அளிக்கவல்லவர். எல்லா

நற்குணங்களுக்கும் இருப்பிடமானவர். ஸ்ரீ தீக்காச்சாரியாரின் துவைத மத சித்தாந்தங்களை பிரசித்தி பெற செய்த சாத்வீக கடவுள், ஸ்ரீ ஹரி வாயுவின் சிறந்த பக்தசீடர். அவரிடம் மிகுந்த பற்றுக்கொண்டதன் காரணமாக ஸ்ரீ வாயு அவர் உள்ளத்திலும் வெளியிலும் சூழ்ந்து நிரம்பியுள்ளார். ஸ்ரீ ஹரியும் அவருடைய எல்லா பரிவாரங்களுடன் பிருந்தாவனத்தில் வந்து தங்கியுள்ளார். என்று ஸ்ரீவாயு தாஸர் கூறுகிறுர்.

அப்படிப்பட்ட பெரும் சர்வல்லமை பொருந்திய முனிவருடைய வாழ்க்கையையும், மகிமையையும் உலக சேற்றிலே நெளியும் இந்த அற்ப புழுவாகிய என்னுல் எப்படி சிறப்பாக எழுத முடியும்? இருந்தாலும் அவருடைய க்ஷண தரிசனம் காணும் பொருட்டு அவர் செய்த அற்புதங்களையும் அவருடைய வாழ்க்கையும் எனக்கு தெரிந்த வரையில் அவருடைய அருளால் எழுதியுள்ளேன். பக்தர்கள் படித்து பயனடைவார்களாக.

பம்பாய
ஜனவரி 1972

குருராவ் கலம்தானி

# 1. முன்னுரை

சத்திய லோகத்து சங்கு கர்ணன் என்பவனே கலியுகத்தில் மந்திராலயத்து ஸ்ரீ ராகவேந்திர சுவாமி-களாக அவதரித்தவர், வேறு யாருமல்லர் என்பது நர-சிம்ம புராணத்தில் தெளிவாக கூறப்பட்டுள்ளது. இந்த சங்குகர்ணன் சத்தியலோகத்து பிரம்மக் கடவுளின் ஏவளால் ஆவான் ஒரு சமயம் இவன் பிரம்ம கடவு-ளுக்கு செய்ய வேண்டிய பணியில் எதேச்சையாக சிறிது சோம்பல் காட்டினான். எனவே பிரம்மன் மிகுந்த கோபம் அடைந்தவராக சங்கு கர்ணனை ஓர் நாத்திக வாதியின் மகனாக பிறக்கும்படி சாபமிட்டுவிட்டார்.

அந்த சமயம் கிருதயுகம் நடத்துக்கொண்டி-ருந்தது. பெருங் கொடுங்கோலனாக இரணியகசிபு என்பவன் இவ்வுலகம் முழுவதையும் தன்வசப்படுத் திக் கொண்டு, "தானே கடவுளுக்கு மேலானவன்; தன்னையன்றி வேறு தெய்வங்களை வழிபடலாகாது" என்று கடுமையான ஆணையுடன் ஆண்டுக் கொண் டிருந்தான்.

பிரம்மனால் சபிக்கப்பட்ட சங்குகர்ணன் பூமியில் பிரகலாதன் என்ற பெயரில் இரணிய கசிபுவின் முதல் மகனாகப் பிறந்தான். இந்த பிரகலாதன் ஓர் நாத்திக குணம் கொண்ட தந்தைக்கு மகனாக பிறந்தாலும் தன் னளவில் பிறப்பிலேயே மகாவிஷ்ணுவின் உபாசகனாக இருந்தான். சத்திய லோகத்தில் பிரம்ம தேவனிடம் சேவகம் செய்துக்கொண்டிருந்த காலத்தில் அவன்

பெற்ற அளவிலா சக்தி காரணமாக மூர்க்க குணம் நிறைந்த தந்தையை அவனால் சமாளிக்க முடிந்தது.

அவன் பலமுறை துணிவுடன் மகாவிஷ்ணுவின் மேன்மையையும் வலிமையையும் இரணியகசிபுவுக்கு எடுத்துக்கூறினான். ஆயினும் அதனை ஒப்பாத இரணியனுக்கு மகாவிஷ்ணு தன் வலிமையை உணர்த்தும் பொருட்டு அவ்வரண்மனையிலிருந்த ஒரு பெருந் தூணை பிளந்துக்கொண்டு நரசிம்ம வடிவில் வெளிப் பட்டார்.

இதனை கண்ட இரணியகசிபு உடனே நரசிம்மனை தாக்கினான் ஆனால் இரணிய கசிபு நரசிம்மனால் கொல்லப்பட்டான். பின் நரசிம்மன் இரணியகசிபுவின் அரியாசனத்தில் அமர்ந்து பற்பல பாவ செயல்களால் கலங்கப்பட்ட அந்த அரியாசனத்தை புனிதப்படுத்தினார். பின்னர் பிரகலாதனை அவ்வரியாசனத்தில் அமர்த்தி நாட்டின் உரிமை மிகுந்த மன்னனாக்கி பல்லாண்டு காலம் வாழ்கவென ஆசியருளினார்.

பிரகலாதன் மிகுந்த பக்திமானாகையால் ஸ்ரீ நரசிம்மனின் ஆணைப்படி நாட்டில் பல்லாண்டு காலம் நல்லாட்சி நடத்தி வந்தான். அவனுடைய ஆட்சி காலத்தில் நாட்டுக்கும், நாட்டு மக்களுக்கும் மேலும் மேலும் நன்மைகளையே செய்து சாத்வீகம், அனிஷ்டம் என்ற இருவகையான புண்ணியங்களையும் மலை போல குவித்துக்கொண்டான். ஆனால் அதிஷ்ட புண்ணியங்களை இவ்வுலக இன்பங்களுக்காக செலவிட்டு தீர்த்தாலன்றி முக்தி பெறுதல் இயலாது என்பது விதி காரணம் இந்த அனுஷ்ட புண்ணியம் என்பது இது

வாழ்க்கை (இவ்வுலகம்)யின் அற்ப சந்தோஷங்களுக் காக மட்டுமே பயன்படுமேயல்லாமல் முக்தி பெற பயன்படாது.

ஆகவே பிரகலாதன் தன்னுடைய அனுஷ்ட புண்ணியத்தை கரைத்துக் கொள்வதற்காக துவாபர யுகத்தில் பாலிகன் என்ற அரசனாக மீண்டும் பூமியில் அவதரித்தான். இந்த பாலிக அரசன் ஸ்ரீமன்நாராய ணனின் தீவிரபக்தனாகவும், தீவிர வைஷ்ணவனாகவும் வாழ்ந்தான். அவனுடைய வாழ்நாளிலும் முன் பிறவி யில் குவிந்த அனிஷ்ட புண்ணியங்கள் தீர்வதற்கு பதிலாக மேலும் மேலும் குவிந்தது, அத்துடன் சாத் வீகபுண்ணியமும் சேரலாயிற்று. பின்னொருகாலத்தில் குருஷேத்திர போரின் போது பாலிக மன்னன் கௌர வர்களை சார்ந்திருந்த காரணத்தினால் பீமசேனனால் கொல்லப்பட்டான். (ஸ்ரீ பாரத தாத்பர்ய நிர்ணய)

பிரகலாதன் தன்னுடைய எந்த அனுஷ்ட புண்ணி யத்தை கரைத்துக் கொள்வதற்காக பாலிகனாக பிறந்-தானோ அந்த புண்ணியத்தை தீர்த்துக்கொள்ள முடி யாமல் மேலும் குவித்துக் கொண்டதால் முக்தி கிட்ட வில்லை. எனவே மீண்டும் மண்ணில் பிறக்க வேண் டியதன் அவசியமாயிற்று. அதன்படி கலியுகம் ஏப்பி-ரல் 22 ஆம் தேதி கி.பி. 1447 ஆம் ஆண்டு பாலிகன் விஜயநகர சாம்ராஜ்ஜியத்தில் வைஷியராயரின் குருக் களாக அவதரித்தார். ஸ்ரீ வைஷியராயரின் பிறப்பு வளர்ப்புபற்றி கீழ்கண்டவாறு குறிப்பிடப்படுகின்றன.

அப்பூர் என்ற கிராமத்தின் அருகேயிருந்த மற்-றொரு சிற்றூரில் பிராமான்ய தீர்த்தர் என்ற மாபெறும்

வைஷ்ணவ சன்னியாசி வாழ்ந்து வந்தார். இராமசாரி யார் என்பவருக்கு பல ஆண்டுகளுக்குப் பின்னும் மகப்பேறு கிடைக்காமற் போகவே அவர் பிராமான்ய தீர்த்தரை அணுகி பிள்ளை பேரு கிட்டும்படி அருளிச் செய்மாறு வேண்டிக்கொண்டார், பிராமான்ய தீர்த்தரும் ஆண்மகவு பிறக்க அருளுவதாகவும் ஆனால் அக் குழந்தையை உடனே அவருடைய மடத்திற்கு கொண்டுவந்து கொடுத்துவிட வேண்டும் என்றும் நிபந்தனைவிதித்தார். இராமாச்சாரும்அந்நிபந்தனைக்கு இணங்கவே அவ்வாண்டின் இறுதியிலேயே முனிவ-ரின் ஆசிபடி இரமாச்சாரியாரின் மனைவியார் ஓர் அழகிய ஆண்மகவை ஈன்றெடுத்தார். உடனே அக்குழந்தையை மடத்திற்கு கொண்டு வரப்பட்டு வளர்க்கப்பட்டது.

பிரம்மானந்த தீர்த்தர் அக்குழந்தையை வளர்க்கும் பொருப்பை தாமே மேற்கொண்டு, குழந்தைக்கு எத்திராஜன் என்ற பெயரை சூட்டினார். அக்குழந்தைக்கு ஆறு வயதான போது உபநயணம் செய்து வைத்து, பின் எட்டு வயதான போது சந்நியாச ஆசிரமத்தை வழங்கி வியாசராயர் என்ற பட்டப்பெயரையும் தந்தார். பிரமான்ய தீர்த்தர் தானே வியாசருக்கு த்வைத்த தத்துவத்தை போதித்தார். பின்னர் வியாசராயருக்கு மேலும் கல்வி போதிக்கும் பொருட்டு மூலபகலில் வாழ்ந்து வந்த ஸ்ரீபாதராஜரிடம் அனுப்பி வைத்தார்.

சங்குகர்ணனின் மறுபிறப்பு, ஓர் ஒப்பற்ற தந்தையின் பெற்றகரிய மகன், மாபெரும் முனிவராகிய

பிரமான்ய தீர்த்தரால் வளர்ந்து ஸ்ரீபாதராஜரால் கற்பிக்கப்பட்ட மாணவச்செல்வன், என்ற இத்தகைய பலதகுதிகளை பெற்ற வியாசராயர் த்வைத்த தத்துவத்தில் மிகப்பெரிய மேதாவியாகவும், தலை சிறந்த தவ முனிவராகவும், ஒப்பற்ற கவி ஞானியாகவும் திகழ்ந்து விளங்கினார்.

ஸ்ரீ பிரமான்ய தீர்த்தருக்குப் பிறகு வியாசராயர் கி.பி. 1468 ஆம் ஆண்டு மடத்தின் தலைமை பதவியையும் பொருப்பையும் ஏற்றுக்கொண்டு, இந்தியா முழுவதும் பயணம் மேற்கொண்டார். அவர் தாம் சென்ற இடங்களிலெல்லாம் த்வைத்த தத்துவங்களை தெளிவாக விளக்கிக் கூறி பலரை த்வைத்த மதத்திற்கு மாற்றினார். இதன் விளைவாக அவருக்கு சென்ற இடமெல்லாம் பற்பல பரிசு பொருட்களும், நிலபுலன்களும் பட்டங்களும் பெருமைகளும் மிகுதியாக சேர்ந்தன. அவருடைய காலத்தில்தான் அம்மடம் 'வியாசராய மடம்' என்ற பெயரில் பெருமை பெறலாயிற்று

அவர் வாழ்ந்த காலத்தில் தான் திருப்பதி ஸ்ரீ சீனுவாச பெருமாளின் வழிபாட்டு முறைகளில் ஒழுங்கையும் சட்டதிட்டங்களையும் எற்படுத்தினார். அவர் தீர்த்த யாத்திரையின் போது எங்கெங்கு சென்றாரோ அங்கெல்லாம் ஸ்ரீ மாருதியின் விஹ்ரகத்தை நிறுவினார் ஸ்ரீ வியாசராயர் இவ்வாறு இந்தியாவின் பற்பல இடங்களிலும் சுமார் ஏழுநூற்று முப்பத்தி இரண்டு மாருதி விஹ்ரகங்களை பிரதிருஷ்டை செய்திருக்கிறார். என்று சரித்திரம் கூறுகின்றது.

விஜயநகர சாம்ராச்சியத்தின் பேரரசாக விளங்கிய ஸ்ரீ கிருஷ்ணதேவராயருடைய அரச குருவாக அவர் இருந்த காரணத்தால் நாட்டின் அரசியலாட்சி விஷயங்களில் அவருடைய கை சற்று ஓங்கியதாக விளங்கியது. வைஷ்ணவ மதத்தின் பெருந்துறவியாக அவர் இருந்தபோதிலும், விஜயநகரசாம்ராச்சியத்தின் காப்பாளராகவும் அவர் இறுதிவரை இருந்தார். தமது தொன்னூற்றிரண்டாவது வயதில் ஹம்பிக்கு அருகில் துங்கபத்திரை நதிக்கரையில் நவ பிருந்தாவனத்தில் அவர் அமைதி அடைந்தார்.

அவர் தம்வாழ்வில் த்வைத்த தத்துவம் பற்றி ஏறக் குறைய பன்னிரண்டு நூல்கள் எழுதி ஸ்ரீ மத்துவரின் கருத்துக்களை அழுத்தம் திருத்தமாக வலியுருத் தியுள்ளார்.

கன்னட கவிஞர்களின் மூலம் கன்னட மொழியில் தெய்வீக பாடல்களை இயற்றி பாடச்செய்தது அவருடைய பல செயல்களில் முக்கியமான ஒன்றுகும். ஸ்ரீ வியாசராயரே பிறவி கவிஞராகையால் கன்னடமொழியில் ஸ்ரீ ஹரி, வாயு போன்ற பற்பல கடவுள்களை பற்றி பக்தி பாடல்களை இயற்றி பூஜைக்குப்பிறகு அவற்றை பாடியும் வந்தார். ஸ்ரீ வாதிராஜர் (கன்னட கவிஞர் என்றும் இவரை அழைப்பார்) போன்ற பல ஹரிதாசருடைய பெருமக்களையும், மற்ற இறைவனின் அடியார்களையும் சந்தித்து அழைத்து ஓர் ‘தாசக்கூட்டம்’ என்ற இறையடியார்களின் இயக்கத்தையே ஏற்படுத்தினர்.

ஸ்ரீ வியாசராயர் சன்னியாசத்தை மேற்கொண்டு எண்பத்தி ஐந்து வயது வரை இடைவிடாமல்

தொடர்ச்சியாக ஸ்ரீ ராமரை வழிப்பட்டும் அவருக்கு மனதிருப்தி ஏற்பட வில்லை. அவர் தம் இறுதி காலத்தில் தாம் மீண்டும் இவ்வுலகிலேயே பிறந்து ஸ்ரீ மூல ராமரை தம் மனம் நிறைய வாழ்த்தி வழிப்பட்டு திருப்திபெற விரும்புவதாகக் கூறினர். எனவே அவர் ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள் என்ற பெயரால் கி.பி. 1598 ஆம் ஆண்டு இம்மண்ணில் அவதரித்து இவ்வுலகம் என்றுமே கண்டிராத பெரும் வாழும் முனிவராக (The Greatest Living Saint) உலகம் முழுவதும் அறிந்தவராக திகழ்ந்து கொண்டிருக்கிருர்.

கிருதயுகத்தில் இம்மண்ணில் அவதரித்த சங்குகர்ணன் கலியுகம் வரை நான்கு யுகங்களாக இங்கேயே கழிக்கநேர்ந்தது. தற்போது அவரே மந்திரலயத்தில் ஸ்ரீ ராகவேந்திர சுவாமி என்ற பெயரில் அமர்ந்துக் கொண்டு தம்முடைய அவதார காலங்களில் சேகரித்த அனுஷ்ட புண்ணியத்தை கரைத்துக் கொண்டிருக்கிருர். அவரே கூறியுள்ளபடி அவர் இப்பூமியில் இந்த பிருந்தாவனத்தில் எழுநூறு ஆண்டுகள் வாழ்ந்திருந்து தாம் சேகரித்த அனுஷ்ட புண்ணியங்களை எல்லாம் தம்மை வழிபடுபவர்களுக்கெல்லாம் வழங்கி தீர்த்து விட்டு இவ்வுலக துயரங்களினின்று விடுப்பட்டு பின்னர் வீடுபேற்றை அடைவார்.

ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் உயிருடன் பிருந்தாவனத்தில் அமர்ந்து முன்னூறு ஆண்டுகள் கழிந்து விட்டன. மக்கள் அவரை வழிப்பட்டு பயன் பெறுவதற்காக இன்னும் நானூறு ஆண்டுகள் நம் முன் காத்துக் கிடக்கின்றன.

எனவே, பிருந்தாவனம் சென்று அவரை வழிபட்டு தத்தம் சக்திக்கேற்ப அவருக்கு சேவைகள் செய்து அவருடைய அருளாசிகளை பெற்று உய்வது இறைவழி பாட்டில் நம்பிக்கை கொண்ட ஒவ்வொருவருடைய கடமையாகும்.

## 2. பிறப்பு

கி.பி. 16ஆம் நூற்றுண்டிற்கு முன் ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள் பூர்வீகத்தைப் பற்றி சரியாகபுலப்படவில்லை. ஆனுல் அவருடைய குடும்பம் தோன்றிய இடம் கர்நாடக மாநிலம் என்பதும், வைஷ்ணவ பிராமண குலத்தை சேர்ந்த குடும்பம் என்பது தெளிவு.

பதினுரும் நூற்றுண்டின் துவக்கத்தில் (1519 – 1530 கி.பி.) வேதங்களையும் சாஸ்திரங்களையும் நன்கு கற்று தத்துவத்தில் ஆழ்ந்த தேர்ச்சி பெற்ற கிருஷ்ணபட்டர் என்ற பிராமண பெரியவர் வாழ்ந்து வந்தார். அவர் சிறந்த இசை மேதையும் ஆவார் வீணை மீட்டுவதில் ஈடு இணையற்றவர் அதோடு விஜயநகர பேரரசின் ஆஸ்தான கவியாகவும் அப் பேரரசை நிறுவிய பேரரசர் கிருஷ்ணதேவராயரின் வீணை ஆசிரியராகவும் விளங்கினுர்.

அவருக்கு பிறகு அவருடைய மகனுக கனக சால பட்டரும் தந்தையை போலவே இலக்கிய கவிஞராகவும், அரசவை புலவராகவும் இருந்தார். கனகசால பட்டரும் வேதவேதாந்தங்களிலும் வீணை வாசிப்பதிலும் கைதேர்ந்தவராக விளங்கினுர்.

இந்த இனிமையான வாழ்க்கையின் பொழுது, அவருக்கு ஓர் அழகான ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு திம்மண்ணபட்டர் என்று பெயரிட்டனர் திம்மண்ண பட்டரும் த்வைத சித்தாந்தத்திலும், வீணை வாசிப்பதிலும், நன்கு கற்று தேர்தான். இறைவனருளால் இனிமை நிறைந்த மென்மையான பாடல் பாடுவதற்கு ஏற்ற குரல் வண்மையும் பெற்றிருந்தான்.

திம்மண்ண பட்டர் திருமண வயதை அடைந்த போது ;அவருடைய குலத்தை சேர்ந்த கோப்பம்மா என்ற அழகான பெண்ணை மணந்துக்கொண்டார். சில ஆண்டுகளில்கோப்பம்மா போதிய இடைவெளிக்கு பிறகு குருராஜ் என்ற ஆண் குழந்தையும், வெங்கம்மா என்ற பெண் குழந்தையையும் ஈன்றெடுத்தாள். துரதிஷ்ட வசமாக முன்னோர்களைபோல திம்மண்ண பட்டருக்கு அரசவையில் எந்தவித பதவியும் கிடைக்கவில்லை.

ஏனென்றல், அந்த சமையத்தில் இரக்ல தங்கடி என்ற முகமதியர்களுக்கும் இந்துக்களுக்கும் நடந்த பெரும் போரே காரணமாகும். அப்போரில் இந்துக்கள் மிகக் கேவலாமாக தாக்கப்பட்டு தோற்கடிக்கப்பட்டனர். முகமதியர்கள் இரவு பகலாக தொடர்ந்து ஆறு மாதங்கள் விஜய நகரை கொள்ளையிட்டும், விளையுயர்ந்த அழகிய மாடமாளிகைகளையும், கோயில்களையும் தீயிட்டுக் கொளுத்தியும் வந்தனர் அப்போது பல மனிதர்களை இரக்கமின்றி கொலை செய்தனர். செல்வங்களை கொள்ளையிட்டுச்சென்றனர் . கண்ணில் பட்ட பெண்களையெல்லாம் ஏன் வயது வரா

பெண்களையும் வயதான கிழவிகளையும் கூட கற்பழித்து சித்திரவதை படுத்தினா.

எனவே இந்துக்கள் அவர்களை காத்துக் கொள் தற்காக மனைவி மக்களுடன் கிடைத்த செல்வங்களில் எவ்வளவு எடுத்துச்செல்ல முடியுமோ அவ்வளவை யும் எடுத்துக்கொண்டு விஜய நகரை விட்டே வெளி யேறினர். திம்மண்ணு பட்டரும் மனைவி கோப்பம் மாவையும், குழந்தைகள் வெங்கம்மாவையும் குரு ராஜுவையும் அழைத்துக்கொண்டு தந்தை தாத்தா ஆகியோர்களால் சேர்த்து வைக்கப்பட்ட முத்துக்கள் இரத்தினங்கள், தங்கம் விலையுயர்ந்த ஆடைகள் முதலியவைகளை எடுத்துக்கொண்டு தென்திசை சென்று இந்துக்களின் நாடாகிய தஞ்சையை அடைந்தனர்.

தஞ்சை நாட்டில் கஞ்சிபூருக்கு அருகில் புவனகிரி என்ற அழகான நல்ல கிராமம் ஒன்று உள்ளது அங்கே குடும்பத்தோடு திம்மண்ணு பட்டர் குடியேறினார். அங்கே அவர்களுக்கு அமைதியும் பாதுகாப்பும் கிடைத் தாலும் வருமானத்திற்கு வழியில்லாமல் இருந்தது, விஜய நகரிலிருந்து கொண்டு வந்திருந்த பொருள்களை தினமும் கொஞ்சம் கொஞ்சமாக செலவு செய்து குடும் பத்தை நடத்த வேண்டியதாயிற்று. ஆனால் எவ்வ ளவு காலத்திற்கு இப்படியே செலவு செய்து கொண்டி ருக்கமுடியும்? இப்படியாக பத்து ஆண்டுகள் கழிந்தன செலவுகள் அதிகமாயிருந்தனவே தவிர வருவாய்க்கு வழியில்லாதிருந்தது.

மகள் வெங்கம்மா திருமணபருவத்தை எய்தபோது திம்மண்ணுபட்டர் நல்ல பொருத்தமான மணமகனை தேர்ந்தெடுத்து திருமணமும் செய்து வைத்தார். இதனாலும் அதிக பொருட் செலவு ஏற்பட்டது. எப்படியோ மகளுக்கு செய்ய வேண்டிய கடமை முடிந்தது, அவளும் கணவனுடன் புக்ககம் சென்று விட்டாள். இப்போது குடும்பத்தில் குருராஜ் மட்டுமே தனித்திருந்தான்.

நாட்கள் நகர நகர வறுமையும் மெல்ல மெல்ல அவர்கள் குடும்பத்தை கவ்விக்கொண்டது. விஜய நகரத்திலிருந்து கொண்டுவந்திருந்த அனைத்து செல்வங்களும் தீர்ந்து விட்டன. ஒவ்வொரு நாளையும் கழிப்பதென்பது பெரும் பிரச்சனையாகிவிட்டது திம்மண்ணுபட்டருக்கு. திம்மண்ணு பட்டர் வீணை வாசிப்பதில் திறமை மிக்கவராதலால் சில மாணவர்களை தேடி பிடித்து வீணை ஆசிரியராக வேலை செய்தாலும், அதனால் கிடைத்த வருமானம் குடும்பம் நடத்த போதுமானதாக இல்லை.

இந்த சமையத்தில், குருராஜ் வளர்ந்து பெரியவனானதும் உபநயனம் செய்து வைத்தார். பின் கல்வி கற்கும் பொருட்டு வீட்டை விட்டு குருகுலம் செல்ல வேண்டியதாயிற்று. இதனால் வீட்டில் குழந்தைகளே இல்லாமல் வெறிச்சோடிகிடந்தது. குருராஜுக்குப் பிறகு குழந்தை ஏதும் பிறக்கவில்லை, திம்மண்ணு பட்டருக்கு. எனவே கணவன் மனைவி இருவருமே மிக்க கவலை கொண்டனர், இருவரும் ஓர் ஆண் குழந்தை வேண்டி ஆண்டவனை வழிப்பட்டனர். குருராஜ் குருகுல வாசம சென்று விட்டதால்

குழந்தை ஒன்று இருந்தால் ஆறுதலாக இருக்குமல்லவா ? ஆனல் பிரார்த்தனைக்கு பலனே கிட்டவில்லை. ஆகவே அவர்கள் திருப்பதி சென்று ஒரு நல்ல மகனை ஆகக் கூடிய குழந்தைக்கு அருள வேண்டி ஸ்ரீ சீனுவாச பெருமானை வணங்கி சேவை செய்ய முடிவு செய்தனர். திம்மண்ணு பட்டர் ஏழையாதலாலும் வருமானத்திற்கு வழியில்லாமையாலும் மேலும் மேலும் துன்பத்தில் உழலுவதை காட்டிலும் ஒரேடியாக புவனகிரியை விட்டு திருப்பதி போய்விடுவது என்று தீர்மானித்துக்கொண்டனர். கோப்பம்மா வீட்டிலிருந்த மிச்சமீதி பொருள்களை மூட்டையாக கட்டிக்கொண்டு பயணத்திற்கு தயாரானள்.

திம்மண்ணு பட்டர் மனைவி மகனுடனும் திருப்பதி வந்து அங்கேயே நிரந்தரமாக குடியமர்ந்தார். உடலாலும் உள்ளத்தாலும் ஸ்ரீ சீனிவாச பெருமானுக்கு சேவை செய்தபடி இன்னொரு மகன் வேண்டி தியானித்தார். கோப்பம்மாவும் கணவனை போலவே உடலாலும் உள்ளத்தாலும் சீனிவாச பெருமானுக்கு தொண்டு செய்தாள் என்று கூறத் தேவையில்லை.

இப்படியாக ஒராண்டு கழித்து ஒரு நாள் முற்காலை பொழுது ஸ்ரீனிவாச பெருமான் திம்மண்ணு பட்டரின் கனவில் தோன்றி,

''ஓ!.... நல்ல பிராமணனே, உனக்கு மகன் பிறக்க அருளுகிறேன். உனக்கு பிறக்கும் அந்த மகன் ஈடு இணை யில்லாத ஹரிபக்தனாகவும், தகுதிக்கு மிஞ்சிய கல்விமானகவும், உலகில் கற்பனைக்கெட்டாத மெச்சத்

தக்கவனுகவும் விளங்குவான். உன்னுடைய கிராமத்திற்கு செல்வாயாக" என்று அருளிமறைந்தார்.

திம்மண்ணு பட்டர் உடனே விழித்துக் கொண்டு தான் கண்டதுகனவு என்று உணர்ந்தார்.மகிழ்ச்சியில் மனைவியை அழைத்தார். முழு கனவு பற்றி விளக்கமாக விரித்தார். கோப்பம்மா அது கேட்டு ஆனந்த கண்ணீர் உகுந்தாள். துள்ளி குதித்தாள். திம்மண்ணு பட்டரும் மகிழ்ச்சியால் துள்ளினுர். பின் இருவரும் ஸ்ரீ சீனுவாச பெருமானுக்கு பூஜையிட்டு பல முறை வணங்கி பின் புவனகிரிக்குத் திரும்பினுர்.

அதே ஆண்டில் கோப்பம்மா கருவுற்று (கி.பி. 1598இல்) அழகான ஓர் ஆண் மகவை ஈன்றெடுத்தாள். திறமை மிக்க அந்த குழந்தையின் முகத்தை பார்த்தபோதெல்லாம் திம்மண்ணு பட்டருக்கு சந்தோஷம் கரை புரண்டு ஓடியது. திருப்பதி வெங்டேசுவரர் நினைவாக, அக்குழந்கைக்கு வெங்கடேசன் என்று பெயரிட்டார். உதிக்கும் ஆதவனைபோல் அக்குழந்தை பிரகாசமாக வளர்ந்து வந்தது.

நாட்கள், மாதங்கள், ஆண்டுகள் உருண்டோடின. குருராஜ் குருகுல கல்வியை முடித்துக்கொண்டு வாலிப முறுக்கோடு வீடு திரும்பினுன் திம்மண்ணு பட்டர் தமது குமாரனுக்கு பொருத்தமான பெண்ணைப் பார்த்து மணம் செய்து வைத்தார்.

அதற்கு பிறகு திம்மண்ணு பட்டர் சில ஆண்டுகளே வாழ்ந்தார். அவருடைய கடமைகளை முடிந்துக் கொண்டு ஒரு நாள் இவ்வுலகை விட்டு இறைவனடி

எய்தினர். இதுவே பெரும் வேதனையை தந்தது அவர்களுடைய குடும்பத்திற்கு குருராஜ் இளைஞன், புது மணம் புரிந்து கொண்டவன். வீட்டிலும் எதுவுமில்லை வருமானத்திற்கான வழியும் இல்லாதிருந்தது. தாய், மனைவி, இளைய சகோதரனுடன் ஒரு வேளை சோற்றுக்கு பெரும்போராட்டமே நடத்த வேண்டியதாயிற்று வாழ்வேண்டிய துணிவை இழந்தான். கொடுமை தாங்க முடியாமல் அழுதான். முடிவாக தன்னை தானே தேற்றிக் கொண்டு எந்த கஷ்டங்களையும் எதிர் கொள்ள இதயத்தை கல்லாக்கிக் கொண்டான் இருந்தாலும் சம்பாதிக்கும் வழியை அவனுல் கண்டு பிடிக்கமுடியவில்லை. இளைய சகோதரனுக்கு கல்வி கற்பிக்கவேண்டுமே என்ற கவலை அவனை சித்தரவதை செய்தது. முடிவில் மைத்துனர் லட்சுமிநாராயண ஆச்சாரியாரிடம் வேணடிக் கேட்டு வெங்கடேசனின் படிப்புக்கு வழி செய்து விட்டார்.

ஸ்ரீ லட்சுமி நாராயணன் சிறுவன் வெங்கடேசனை தன்னுடன் தனது சொந்த ஊரான மதுரைக்கு அழைத்துச் சென்று விடுவதில் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார்.

# 3. கல்வி

திம்மண்ண பட்டர் காலமான சரியான ஆண்டும் நாளும் தெளிவாக தெரியவில்லை. ஆனால் வெங்கடேஷ் தம் தந்தையிட மிருந்து கன்னடத்தில் படிக்கவும் எழு தவும் அறிந்துக் கொண்டானென்பதும், அவர் இவ னுக்கு உபநயனம் செய்து வைத்தார் என்பது உறுதி யாகத் தெரிகிறது. இதனால் திம்மண்ண பட்டர் கால மானபோது வெங்கடேஷனின் வயது ஏறத்தாழ ஆறு அல்லது ஏழு இருக்க கூடும்.

நிற்க இலக்ஷ்மி நாராயண ஆச்சாரியார் வெங்க டேசனை தம் வீட்டிற்கு அழைத்து வந்த போது அவர் மனைவி வெங்கம்மா மிகவும் பேருவுவகை கொண்டாள். இலக்ஷ்மி நாராயண ஆச்சாரியரும் அவரது மனைவியும் வெங்கடேசனை தம் சொந்த குழந்தைகளுள் ஒருவனை போலவே அன்புடனும் ஆதரவுடனும் நடத்தலாயினர்.

லட்சுமி நாராயண ஆச்சாரியார் தாமாகவே ஆசியரியர் நிலையிலிருந்து வெங்கடேசனுக்கு சமஸ் கிருத அகராதி முதலாக சமஸ்கிருதத்தில் பேரிலக்கி யங்கள் வரை அனைத்தையும் கற்பித்தார். நாளடை வில் வெங்கடேசன் லட்சுமி நாராயண ஆச்சாருடைய பயிற்சியின் காரணமாக இலக்கணம், காவியம், மீமா மிசை, தர்க்கம், அர்த்த சாஸ்திரம் முதலியவற்றில் மிகுந்த தேர்ச்சி பெற்று விளங்கினான். அதோடு சமஸ்

கிருநத்தில் உள்ள அனைத்து இலக்கியங்கள், கவிதைகள், நாடகங்கள் முதலியவற்றையும் கற்று தேர்ந்தான்.

வெங்கடேசன் மிகுந்த அறிவாளியாகவும், மேதையாகவும் எந்த பெரிய விஷயத்தையும் குறுகிய காலத்தில் புரிந்து கொள்ளும் திறமை உள்ளவனாகவும் விளங்கினான். லட்சுமிநாராயண ஆச்சாரியார் வெங்கடேசனுக்கு தமக்குத் தெரிந்த அனைத்தையும் கற்பித் போதிலும் அவருக்கு முழுமையான திருப்தி ஏற்படவில்லை. சிறிய பயனாக இருந்த போதிலும் மாதவ சித்தாந்தம் அதிலும் குறிப்பாக ஸ்ரீ ராமன் நியாய சுதா என்ற கல்வியில் கற்பதற்கான தகுதியும் ஆற்றலும் வெங்கடேசனுடைய பேரறிவுற்கு இருந்தது.

அக்காலத்தில் கும்பகோணத்தில் சுதீந்திர தீர்த்தர் (1614—1721) என்ற வைஷ்ணவ சன்னியாசி வாழ்ந்து வந்தார். அவர் ஸ்ரீ மாதாநந்த தீர்த்தரின் நேர் வழி வந்த பெரியார். ஸ்ரீ இராமன் நியாய சுதாவையும் ஸ்ரீ மாதவ சித்தந்தங்கள் முழுவதையும் கற்பிக்கும் திறமையுள்ளவராக அக் காலத்தில் அவர் மட்டுமே விளங்கினார். ஸ்ரீ லட்சுமி நாராயண ஆச்சாரியாரும் அவருயை மைத்துனரான குருராஜ ஆச்சாரியாரும் தமக்குள் கலந்து ஆலோசித்து வெங்கடேசனுக்கு மேலும் சிறந்த கல்வியறிவை அளிக்கும் பொருட்டு அவனை சுதீந்திர தீர்த்தரிடம் அழைத்துச் சென்று அறிமுகம் செய்து வைத்து மடத்திலேயே தங்கி கல்வி பயில தேவையான ஏற்பாடுகளையும் செய்தனர்.

ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் சிறுவன் வெங்கடேசனை தலை முதல் பாதம் வரை உற்று நோக்கினார். அச்சிறுவனிடம் அவர் என்ன கண்டாரோ? அது இறைவனுக்குத் தான் தெரியும். தயக்கம் ஏதுமின்றி தமக்குத் தெரிந்த அனைத்தையும் அவனுக்குக் கற்பிப்பதாக உறுதியளித்தார். இதனை கேட்ட லட்சுமிநாராயண ஆச்சாரியார் பேருவகை கொண்டார். பின்னர் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தரிடம் வெங்கடேசனிடமும் விடை பெற்றுக்கொண்டு திரும்பினார்.

அனாதையான வெங்கடேசன் ஏழ்மையிலும் ஏழ்மையானவனாகவும் கூச்சசுபாவம்நிறைந்தமிகுந்த அடக்கமுள்ளவனாகவும் இருந்தான். இருப்பினும் அவனிடம் கல்விச்செல்வம் மிகுந்து விளங்கியதால் அவனுடைய ஆசிரியரான சுதீந்திர தீர்த்தரே அவன் மிகுந்த அன்பும் மரியாதையும் செலுத்தினார்.

ஸ்ரீசுதீந்திரதீர்த்தரிடம் கல்வி கற்றவர்களுள் வெங்கடேசனும் ஒருவன். ஆனால் மற்ற மாணவர்கள் இவனை போல ஏழ்மையாக இல்லாமல் மெலும் பணக்காரர்களாகவும் பலர் நடுத்தர நிலையிலும் இருந்தனர் வெங்கடேசன் மட்டுமே பொருளாதார நிலையில் மிகவும் பின் தங்கியவனாக இருந்தான்.

வெங்கடேசனை தவிர மற்ற மாணவர்கள் பொழுது போக்க வகுப்பிற்குச் சென்றார்களே தவிர கல்வியறிவை பெரும் நோக்கத்திற்காக இல்லை வெங்கடேசன் மடடுமே கல்வி கற்கும் குறிக்கோளோடு இருந்தான், அவனுடைய ஆசிரியருக்கு இவ்வுண்மை

தெரியுமாதலால் வகுப்பு நேரங்களில் அவனிடம் சிறப்பான அக்கரை செலுத்தி பாடங்களை போதித்தார்.

அக்காலத்தில் மாணக்கர்கள் எந்த ஆசிரியர்களிடம் கல்வி பயிலுகிறுர்களோ அவருடனேயே இருந்து கல்வி உணவு உறையுள் அனைத்தும் பெறுவது வழக்கமாக இருந்தது எனவே ஸ்ரீ சுதீந்திர தீர்த்தருடைய மடத்தில் பல மாணவர்கள் தங்கி கல்வி கற்று வந்தனர்.

வெங்கடேசன் பணக்காரனுக இல்லாததாலும் மற்ற மாணவர்களை போல மந்த புத்தி உள்ளவனுகவோ இல்லாததாலும் இயற்கையாகவே மற்ற உடன் பயிலுபவர்களுடன் நட்பு ஏற்படாமல் போயிற்று வெங்கடேசனுக்கு. மாருக, வெங்கடேசன் கூர்மையான அறிவு பெற்றிருந்த காரணத்திற்காக மற்றவர்கள் அவனை வெறுத்தனர். இநத காரணத்திஞல் குருகுலத்து அன்ருட நடவடிக்கைகளில் மற்ற மாணவர்களுடைய தோழமையும் கூட்டும் அவனுக்குக் கிடைக்கவில்லை.

இரவு நேரங்களில் உறங்கும் போதுகூட மற்ற மாணவர்கள் அனைவரும் வெங்கடேசனை தீண்டத்தாகாதவனைப் போல் தனியான ஒரு பாழடைந்த மண்டபத்தில் ஒதுக்கி வைத்து விடடு தாங்கள் மடடும் ஓரிடத்தில் உறங்கினர். ஆனுல் வெங்கடேசனுக்கு இதுவே வரப்பிரசாதமாயிற்று. ஏனெனில் தினமும் அனைவரும் உறங்கிய பிறகு வெங்கடேசன் மட்டும் தனியாக கொஞ்சம் வைக்கோல்களை சேகரித்து

கொளுத்தி அதனால் உண்டாகிய வெளிச்சத்தில் அன்றன்று ஆசிரியரால் நடத்தப்பட்ட பாடங்களை குறிப்பெடுக்க அவ்வமைதியான நேரத்தை பயன்படுத்திக் கொண்டமையே 'இரவு எழுத்து, படிப்பு, வேலை முடிந்த பிறகு உறங்குவதற்கு ஒரு கிழிந்த பாயைத் தவிர அவனிடம் வேறேதுமிருக்கவில்லை. குளிருக்கு போர்த்திக் கொள்ள கட்டிருந்த வேட்டியே பயன் படுத்திக் கொண்டான். வகுப்பு நேரங்களில் வெங்கடேசன் தங்கள் முன் நிற்பதைக் கூட விரும்பாதவர்களாக அவனைப் பற்றி அவர்களுடைய குருவிடம் இல்லாததும் பொல்லாததையும் புனைத்து கோள் மூட்டுவது வழக்கமாக இருந்தது அவனுடைய சக மாணவர்களுக்கு குருக்களுக்கு வெங்கடேசனின் உண்மையான இயல்பு தெறியுமாதலால் மற்ற மாணவர்களின் பொயுரைக்கு செவி மடுக்கவில்லை.

ஒரு நாள் குருக்கள் ஸ்ரீ ராமன் நியாய சுதாவை போதிப்பதற்குப் பாடமாக எடுத்துக் கொண்டார். அப்பாடம் புரிய வைப்பதற்கு, புரிந்துக் கொள்வதற்கும் மிக்வும் கடினமானதாகையால் மற்ற பாடங்களை விட அப்பாடத்தை புரியவைக்க தன் முழு அறிவையும் பயன் படுத்தி பெருமுயற்சி எடுத்துக் கொண்டார்.

ஒரு நாள் ஆசிரியர் சுதாவின் செய்யுள்களுக்கு பொருள் உறைத்துக் கொண்டிருந்தபோது ஒரு பிரச்சனைக்குரிய பகுதி வந்தபோது அதற்கு சரியான விளக்கம் கொடுக்கமுடியாமல் சற்றுத் திணறினர். எனவே அன்றைய பாடத்தை அத்துடன் முடித்துக்

கொண்டு மறு நாள் விளக்கமளிப்பதாகச் கூறிச் சென்றார்.

அன்றிரவே அவர் தம்முடைய மாணக்கர்கள் எங்கே எவ்வறோ உறங்குகின்றனர் என்பதனை கண்டறிய ஆவல் கொண்டவராய் படுக்கையை விட்டெழுந்து விளக்குடன் ஒரு வேலையாளையும் உடன் அழைத்துக்கொண்டு மாணவர்களின் இருப்பிடத்திற்கு வந்து சேர்ந்தார். எல்லாமாணவர்களும் அங்கு உறங்கிக் கொண்டு இருந்ததை கண்டபோதிலும் வெங்கடேசன் மட்டும் அங்கு இல்லாததை அம் மங்கிய ஒளியிலும் அவரால் அறிய முடிந்தது. அவர் சுற்றும் முற்றும் கூர்ந்து நோக்கிய போது சற்று தொலைவில் யாரோ உறங்கிக் கொண்டிருப்பதை கண்டு அருகில் சென்று பார்த்த போது, குளிரில் நடுங்கியபடி அப்பாழ் மண்டபத்தில் வெங்கடேசன் உறங்கிக் கொண்டிருப்பதை அவரால் அறிய முடிந்தது. அவனுடைய தலைமாட்டிற்கு அருகே வைக்கோலால் எரிக்கப் பட்ட சாம்பல் சுவியலும் ஒரு சிறு குறிப்பேடும் இருக்கக் கண்டார்.

குருக்கள் அக்குறிப்பேட்டை எடுத்து அந்த மங்கிய ஒளியில் புரட்டிப்பார்த்த போது அவை அன்றுடம் அவரால் நடத்தப்பட்ட பாடங்களின் விமர்சனக் குறிப்பாக இருக்கக் கண்டு இறுதி பக்கத்தை புரட்டி படித்துப் பார்த்தபோது அவர் பேராச்சிரியமும் பேருவுவகையும் ஒருங்கே கொண்டார். ஏனெனில் எந்த பாடத்தை நடத்துவதற்கு அவர் அன்று காலையில் திணறினரோ அந்த பாடத்தின் மிகத்தெளிவான எளிதாகப் புரிந்து

கொள்ளும்படியான விளக்க உரையாக அது இருந்தமையால் தான்.

இவ்வளவு பெரிய மேதாவி தனக்கு சீடனாக வந்து வாய்த்துள்ளதால் உண்டான ஆனந்தத்தாலும் இச்சிறந்த ஞானி குளிரில் நடுங்கியபடி இப்பாழ் மண்பத்தில் உறங்க நேர்ந்ததே என்ற வருத்தத்தாலும் அவர் கண்கள் நீரை சிந்தின. அவர் தாம் போர்த்திருந்த சால்வையை ஏடுத்து வெங்கடேசன் மீது மிகுத்த ஆதரவோடு போர்த்திவிட்டு அவனுடைய குறிப்பேட்டுடன் தம் படுக்கைக்கு திரும்பினார்.

மறு நாள் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் தம் வகுப்பிற்கு வந்து அமர்ந்த போது வெங்கடேசனைத்தவிர மற்ற எல்லா மாணவர்களும் வந்திருப்பதை கண்டார் எனவே அவர் வெங்கடேசனின் வருகைக்காக அமைதியாகக் காத்திருந்தார்.

இரவு விளக்கக் குறிப்பு எழுதியதன் காரணமாக வெகு நேரம் கழித்து உறங்கிய வெங்கடேசன் சூரியனின் செங்கதிர்கள் அவன் போர்த்திருந்த போர்வையூடே புகுந்து அவனது உடம்பை சுட்ட போதுதான் விழித்தெழுந்தான். அவன் மீது தங்கச் சரிகையால் நெய்யப்பட்ட விலையுயர்ந்த கம்பிளிப் போர்வை - அதுவும் அவனுடைய குருக்களுடைய போர்வை - இருப்பதைக்கண்டு அதிர்ச்சிக்குள்ளானான். அம் மடத்தை விட்டு அவனை வெளியேற்றுவதற்கான நோக்கத்துடன் அவனுடைய வகுப்பு மாணவர்கள்

செய்த இழிச்செயலாக அவனுக்கு தோன்றியது அது. தலையணை பக்கமிருந்த நோட்டு புத்தகமும் இல்லாம லிருக்கவே அவன் மிகுந்த வேதனைக்குள்ளானன்.

இருக்கையை விட்டெழுந்து போர்வையுடன் குருவை நோக்கி ஓடினன். அவர் முன் மண்டியிட்டு "ஐயா நான் ஏதும் குற்றம் செய்திலேன், உங்கள் போர்வையை நான் திருடவில்லை. யாரோ துர்குணம் கொண்டவாகள் எடுத்து வந்து என் மீது போட்டு பழி சுமத்தியுருக்கிருர்கள். எனக்கு ஒன்றுமே தெரியா தய்யா என்னுடைய குறிப்பேடு கூட காணாமல் போய் விட்டது. என் மீது பழி சுமத்த எண்ணி இக்காரியத் தை செய்தவன் ஒரு வேளை என் குறிப்பேட்டையும் எடுத்துச் சென்றிருக்கலாம்....," என்று சொன்னபடி அழுகையை அடக்கமுடியாமல் வாய்விட்டுக் கதறி ஞன்.

குரு ஆதரவாக அவனை எழுந்திருக்க கூறினர், பின், நன்று குழந்தாய் நீ ஏதுமறியாதவனென்று யாமறிவோம்; உன்னுடைய விளக்கக் குறிப்பேடு பத் திரமாகத்தான் உள்ளது. அந்த போர்வையை இங்கே வைத்து விட்டு காலை கடன்களை விரைவாக முடித்துக் கொண்டு வா, உனக்காக நாங்கள் காத்திருப்போம் .... என்ருர்.

வெங்கடேசன் காலைக் கடன்களை விரைவாக முடித் துக்கொண்டு வந்து குரு வணக்கம் செய்தான், வகுப்பு துவங்கியது. குரு ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் வெங்கடேசனு

டைய விளக்க குறிப்பேட்டை எடுத்து வகுப்பு மாணவர்கள் அனைவருக்கும் காண்பித்து முதல் நாள் வகுப்பில் அரைக்குறையாக முடிக்கப்பட்ட கடினமான பாடத்தின் விளக்கத்தை அக்குறிப்பேட்டிலிருந்து படித்து காண்பித்தார். பிறகு வகுப்பு மாணவர்களிடம் இச்சிறுவனை பாருங்கள்! இவன் அனைத்தையும் அறிந்தவனைப்போல காண்கின்றான். அவன் எழுதிய சுதாவின் விளக்கங்கள் புதுமலரின் நறுமணம் போல பரிமளிக்கிறது. இந்த விளக்கவுரை மிகவும் எளிமையானதாகவும் கவர்ச்சியானதாகவும் இருக்கிறது. பாடங்கள் நடக்க நடக்க இதற்கான விளக்க உரையை தொடர்ந்து எழும் படி இச்சிறுவனை நாம் கேட்டுக் கொள்வோம். இந்த விலைமதிப்பற்ற நூலை இன்றிலிருந்து "பரிமளம்" என்பதாகவும் இச்சிறுவன் வெங்கடேசனை பரிமளச்சாரியார் என்றும் அழைப்போமாக ஒன்று கூறியவாறு அங்கு வைக்கப்பட்டிருந்த அவருடைய விலையுயர்ந்த சால்வையை எடுத்து சிறுவன் வெங்கடேசனுக்கு பெருமகிழ்சியுடன் போர்த்தினார்.

குரு ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் அவருக்குத் தெரிந்த அனைத்து தத்துவங்களையும் மனப்பூர்வமாக வெங்கடேசனுக்கு கற்றுத்தந்தார். அவனை ஒரு தலை சிறந்த த்வைத்த சித்தாந்தி யாக்கினார். குருகுலக் கல்வி முடிந்த பிறகு பரிமளாச்சாரியார் குருக்களின் ஆதரவு மிக்க ஆசிகளுடனும் அன்பு பரிசுகளுடனும் புவனகிரிக்குச் சென்றார்.

த்வைத்த தத்துவத்தில் சிறந்தவனுகவும், குருக்களின் ஆசிகளுடன் பரிமளாச்சாரியார் என்ற பட்ட பெயருடனும் புவனகிரியில் உள்ள அண்ணன் விட்டிற்கு வந்த போது குருராஜ் ஆச்சாரியார் அன்பு பொங்க வரவேற்று அவருக்குத் தெரிந்த வீணை கலையை வெங்கடேசனுக்குக் கற்றுத்தந்தார். மிகக் குறைந்த காலத்தில் வீணை மீட்டுவதில் தலை சிறந்த நிபுணனானான்.

வெங்கடேசன் இளமையாக இருந்த போதிலும் திருமணவயதை எட்டிருந்தமையால் குருராஜ ஆச்சாரியாா சீறும் சிறப்பும் மிகுந்த குடும்பத்திலிருந்து சரஸ்வதி தேவி என்கில பெண்ணை மணம் செய்து வைத்தார் (கி.பி. 1613). வெங்கண்ணுச்சாரியார் இப்படியாக கிரகஸ்தாசரமம் என்ற நிலை எய்தி கடமையுணர்வு மிக்க அழகான மனைவியுடன் சில காலம் இல்லற வாழ்க்கையை நடத்தினார்.

# 4. அக்னி சூத்திரம்

வெங்கண்ணாச்சாரியார் குருகுல வாழ்க்கையை முடித்துக் கொண்டு தமையனார் குருராஜ ஆச்சாரியாருடன் வாழ நேர்ந்த போது, அவர் மிக குறைந்த வருவாயில் போதிய வசதிகளின்றி வாழ்க்கை நடத்துவதை அறிந்தார். வெங்கண்ணாச்சாரியாரும் மனைவியுடன் அவர்களுடன் வாழ நேர்ந்ததால் குடும்பக் கஷ்டம் இன்னும் மிகையானது அச்சிறிய நகரில் வருவாய்க்கு வழியேதும் இல்லாதிருந்தது. எனவே தமையனாரின் மனம் புண்படாதவாறு அந்த வீட்டை விட்டு, ஏன் அந்நகரை விட்டே வெளியேறி சுயமாக வாழ்க்கைநடத்த விரும்பினார் வெங்கண்ணாச்சாரியார்.

ஒருநாள் வெங்கண்ணாச்சாரியார் தமையனாரிடம் மனைவியை அழைத்துச் சென்று சுதீந்திர தீர்த்தருக்கு அறிமுகம் செய்வித்து ஆசி பெற விரும்புவதாகக் கூறினார். குருராஜ ஆச்சாரியாரும் ஒப்புதல் தந்து இருவரையும் கும்பகோணம் அனுப்பிவைத்தார்.

சுதீந்திர தீர்த்தர் வெங்கண்ணாச்சாரியாரையும் அவர் மனைவியையும் மகிழ்ச்சியுடன் வரவேற்று ஆசீர்வதித்து பின் சிறுது காலம் மடத்திலேயே தங்கியிருக்கும்படி கேட்டுக்கொண்டார். சில நாட்கள் கடந்த பிறகு, சுதீந்திர தீர்த்தர் மடத்திலிருந்த சீடர்களுடன் ஸ்தல யாத்திரை மேற்கொண்டார். வெங்கண்ணாச்சாரியாரும் மனைவியுடன் அவரை தொடர்ந்தார் என்பதை சொல்ல வேண்டியதில்லை.

அக்காலங்களில் அதிபதியோ, கல்வி கேள்விக-ளில் புலமை பெற்ற தலைசிறந்த பேரறிஞரோ யாத்திரை மேற்கொண்டு தங்கு மிடங்களில், அப்பகுதியை சேர்ந்த வேறு ஒருமதத்தையோ, சாதியையோ, அல்லது கருத்து மாறுபாடு கொண்ட அறிஞரோ அவர்களை வலிய வாதத்திற்கு அழைப்பது வழக்கமாயிருந்தது. அவ்வாறு "சுதீந்தீர தீர்த்தர் மன்னார்குடி என்ற நகரில் தங்க நேர்ந்த போது, அந்நகரில் வசித்து வந்த இலக்கணத்தில் மிக்க தேர்ச்சி பெற்ற ஓர் அத்வைத பேரறிஞர் சுதீந்திர தீர்த்தருடைய மடத்திற்கு வந்து மகா பாஷியத்திற்கு விரிவுரை நிகழ்த்தும்படி கேட்டுக் கொண்டார். அதற்கு சுதீந்திரரும் இணக்கம் தெரிவித்தார்.

அதன் படி அந்நகரில் உள்ள ஒருகோயில் பெரு மண்டபத்தில் கூட்டத்திற்கான ஏற்பாடும் செய்தனர் சுதீந்திரரும் அவரது சீடர்களும் ஓர் புறமும், அந்நகர் இலக்கண வாதியும் அவரை சார்ந்தவர்களும் எதிர் புறமும் அமர்ந்து விவாதத்தை துவக்கினர்.

இருசாரருக்குமிடையே வாக்கு வாதம் கடுமை-யாகவும் காரசாரமாகவும் நடந்துக் கொண்டிருந்தது. வாதத்தினிடையே போட்டியை முன்னின்று நடத்த வாய்ப்பளிக்கும்படி வெங்கண்ணாச்சாரியார் கேட்டுக் கொண்டதன் பேரில் வெங்கண்ணாசசாரியாரின் திறமையை நன்கு அறிந்திருந்த சுதீந்திர தீர்த்தரும் அவருடைய வேண்டுதலுக்கு அனுமதியளித்தார். இப்படிபட்ட சொற்போரில் கலந்துக் கொள்வது வெங்

கண்ணுசசாரியாருக்கு இதுவே முதல் முறையாக இருந்தாலும் மிக்க சிறந்த தெளிவான வாதத்தினுல் வெகு விரைவிலேயே அவ்விலக்கண வாதியைவெற்றி யும் கொண்டார்.

வெங்கண்ணுகசாரியார் மகாபாஷியத்தை த்வைத்த முறையில் வாதிட்ட விரிவுரை மிகப் பொருத்தமானது என அந்த த்வைத்த அறிஞரும் ஒப்புக்கொண்டார். சுதீந்திர தீர்த்தரும் மகாபஷியத்திற்கு மிகச்சரியான விமர்சனங்களைத் தந்து பிரதிவாதியை மேலும் தொடர்ந்து வாதமிட முடியாமல் திணரச்செய்த வெங் கண்ணுவின் மிகசசிறந்த வாத திறமையை பெரிதும் பாராட்டினுர். அம்மகா சபையிலேயே அனைவர் முன் நிலையிலும் வெங்கண்ணுச்சாரியாருக்கு மகாபாஷிய ஆச்சாரியார் என்ற விருந்தையும் அளித்து கௌரவித் தார்.

பின்னர். சுதீந்திரர் மன்னுர்குடியிலிருந்து புறப் பட்டு தஞ்சையை அடைந்தார். தஞ்சையிலும் அப்போது அத்வைத சித்தாந்தத்தில் தேர்ந்த அறி ஞர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தரிடம் தாமாகவே வலய வந்து, 'தந்துவ மசி' என்ற சூத்திரத்தின் பொருள் பற்றி த்வைத்த சித்தாந்த முறைப்படி நிரூபணத்துடன் விளக்கிக் காட்ட முடியுமா ? என்று சவால் விட்டதோடு மட்டு மன்றி அவரோடு விவாதிக்கவும் அழைத்தார்.

இம்முறை வெங்கண்ணுச்சாரியாரே குருவின் ஆசிகளோடு மிகவும் உற்சாகத்தோடு வாதிட முன்

வந்தார் தத்துவமசி என்ற சூத்திரத்தின் பொருள் பற்றிய அவ்விவாதம் பல நாட்கள் தொடர்ந்து நடந்தது. எதிராளியான அந்த அத்வைத அறிஞர் கல்வியறிவில் மிகச் சிறந்தவராக விளங்கிய போதிலும், அவரை வெங்கண்ணாச்சாரியார் மிகச்சூட்டிகையோடு தக்க சமையங்களிலெல்லாம் கேள்விக்கணையால் மடக்கித்திணரச் செய்வதில் வல்லவராக இருந்த காரணத்தால் அவரை எளிதில் வெல்ல முடிந்தது இறுதியில் தோல்வி கண்ட அந்த அத்வைத அறிஞர் த்வைந்த சித்தாந்த முறைப்படி தந்துவமசியின் விமர்சனம் சரியானதென்று ஒப்புக்கொண்டார்.

இந் நிகழ்சசிக்கு பிறகு வெங்கண்ணாச்சாரியார் அம்மடத்திற்கு பெருநிதியம்போலவும் ஸ்ரீசுதீந்திரரின் வலக்கையாகவும் திகழ்ந்தார். ஏறக்குறையாக இதே சமையத்தில் தான் சரஸ்வதி தேவியாரும் கருவுற்றிருக்க வேண்டும். எனவே தான் வெங்கண்ணாச்சாரியார் இனியும் மடத்தில் தங்கிருப்பது நல்லதல்ல என்று கருதியவராய், ஸ்ரீசுதீந்திர தீர்த்தரிடம் தற்போது சென்று மினைவின் பிரசவத்திற்குப் பின் திரும்பி வருவதாக விடைப் பெற்றுக் கொண்டு மடத்தை விட்டு வெயேறினர்.

மடத்தைவிட்டு வெளியேறிய பிறகு தான் வெங்கண்ணாச்சாரியாருக்கு உண்மையான உலகத்தை அறியும் வாய்ப்பு கிட்டியது. அதற்குப் பிறகு வெங்கண்ணாச்சாரியார் எங்கே எப்படி வாழ்க்கை நடத்தினர் என்பது சரிவரத் தெரியவில்லை. ஆனல் கொடிய

வருமை நோயால் மிகவும் துண்பப் பட்டார் என்பது மட்டும் தெளிவு.

கல்வியின் பல துறைகளிலும் அவர் சிறந்த ஞானியாக விளங்கிய போதிலும் அவரிடம் கல்வி கற்க வோ ஏன் வீணை கற்றுக்கொள்ளக்கூட எவரும் முன் வரவில்லை. அவர் ஒரு சாதாரண கிரகஸ்தாசரம் பிரமணரைப்போல கருதப்பட்டார். எப்பொழுதேனும் அவருக்குக் கிடைத்து வந்த பிச்சை இருவரின் ஒரு வேளை உணவிற்க்குக் கூட போதுமான தாக இருக்க வில்லை. பத்து மாதம் நிறை வெய்தியபோது சரஸ்வதி தேவியார் பேருவுவகை எய்துப்படியாக ஓர் அழகிய ஆண்மகவை ஈன்றெடுத்தாள். வெங்கண்ணச்சாரி யாருக்கு இளமையில் உணவு உடை கல்வி அனைத் தையும் தந்து வளர்த்த மைத்துனரின் நினைவாக லட்சுமிநாராயணன் என்று பெயர்சூட்டினர். குழந்தை வளர வளர அவர்களது குடும்பத்தில் வருமையும் சேர்ந்தே வளர்ந்தது

வாரத்தில் இரண்டு மூன்று நாட்கள் உண்ண உணவின்றி நீரைமட்டுமே பருகி வாழவேண்டிருந்தது குழந்தைக்கு ஒரு வேளை பால் வாங்கக் கூட முடியாத வறுமையில் வாடினர் இவ்வாறு சில ஆண்டுகள் கழிநதன. "அவருக் ஏன் இந்நிலை ?" இவ்வினை அன்று எழுந்தது இன்றும் எழுகிறது.

வெங்கண்ணச்சாரியர் பெருமை மிகுந்த நல்ல உயர்ந்த குடும்பத்தில் பிறந்த தூய பிராமணர். ஈடு

இணையில்லாத தத்துவபேரறிஞர். வீணை மீட்டுவதில் வாணிக்கு நிகரானவர் தாம் கற்றதை பிறருக்கு கற்பிப்பதில் அறிய திறமை வாய்ந்தவர். அனைத்திற்கும் மேலாக ஸ்ரீசுதீந்திர தீர்த்தரின் பரிவும் பாசமும், பக்கபலமும் அவருக்கு என்றும் இருந்து வந்தது. அவ்வாறு இருந்த போதிலும் வாழ்க்கையில் அன்றாட அடிப்படைத் தேவைகளைக் கூட பூர்த்தி செய்து கொள் முடியாத நிலை ஏன் ?

தத்துவப்படி பார்த்தால் அவர் அவ்வாறு இருந்தது தான் சரி. புராணங்களை நாம் ஊன்றி கவனித்தால் ஓர் உண்மை புலப்படும். மகா முனிவர்களான வசிஸ்டர், கௌதமர், பரத்துவாசர் போன்றோர் வாழ்க்கையின் எல்லா உலகியல் வசதிகளையும் துறந்து, வீடு தேடிவந்த அதிர்ஷ்டத்தையும் புறக்கணித்து முரட்டுத் தனமான ஆடைகளை அணிந்து பச்சையிலைகள், காய்கறிகள், பழங்கள் முதலியவற்றை உண்டு எளிய வாழ்க்கை நடத்தினார்கள் என்பது தெளிவு. அவர்களுக்கு சக்ஷாத்காரம் எனப்படும் இறைவனை உணரும் பேரின்ப நிலையே குறிக்கோளாக இருந்தமையால் இத்துன்பங்களை ஒரு பொருட்டாகக் கருதவேயில்லை.

எந்த பிரகலாதனை காக்க நரசிம்ம அவதாரம் கொண்டு இறைவன் தூணை பிளந்து வந்தாரோ அந்த பிரகலாதனின் மறு அவதாரமான இந்த வெங்கிண்ணாச்சாரியாரும் மேலே குறிப்பிட்ட முனிவர்களை போல வருமை துண்பத்தில் உலகியல் வசதிகளை புறக்கணிக்கும் அளவிற்கு மணபக்குவமடைந்தார். சுக

போக தேவைகளைப்பற்றி கவலை படாமல் நரசிம்மனை வழிப்பட்டுக் கொண்டு தம்மை மறந்து சமாதி நிலையில் வெங்கண்ணாச்சாரியார் இருந்து வந்தார் என்பது தெளிவு.

பசியும் தாகமும் உலகம் தோன்றிய முதல் இன்று வரை உயிரினங்களுக்கு எதிரிகளாக இருந்து வருகின்றன. வெங்கண்ணாச்சாரியாரின் குடும்பம் இவ் விதிக்கு விலக்கானவர்கள் அல்லர். இவ்வாறு வாழ்க்கையில் வெறுப்படைந்த நிலையில் அவர் வாழுங்கால் அருகேயிருந்த ஒரு கிராமத்தின் மிராசுதாரர் ஒரு வாரகாலத்திற்கு தொடர்ந்து பெரிய அளவில் சமாராதனை ஒன்று நடத்த விரும்பி சுற்றும் முற்றும் உள்ள கிராமங்களில் வசித்து வந்த அந்தணர்களுக்குக் கலந்துக் கொள்ளும்படி அழைப்பு விட்டிருப்பதாக விழுந்த அச்செய்தி வெங்கண்ணாச்சாரியாருக்குத் தேனாக இனித்தது.

மனைவியின்வற்புறுத்தலின் காரணமாக அச்சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் சமாராதனையில் கலந்து கொண்டு வயிறார உண்டு களிக்க தீர்மானித்தார். மிராசுதாரர் நடத்திய அச் சமாராதனை உண்மையிலேயே மிகப் பெரியதுதான் ஆடவரும் பெண்டிரும் குழந்தைகளுமாக நூற்றுக்கும் மேம்பட்டவர் அங்கே திரண்டிருந்தனர். ஹோமம், ஹவனம், பூஜை முதலியன மிகவும் ஆடம்பரமாக நடந்துக் கொண்டிருந்தது சமாராதனை தலைமையேற்று நடத்திய புரோகிதர் ஒருவர் துணை புரோகிதர்களுடன் அங்குமிங்குமாக

ஓடியாடியபடி நிகழ்ச்சிகளை மேற்பாரவையிட்டுக் கொண்டிருந்தார். அப்போது. தடித்த உடம்போடு வறுமை களை தொணிக்கும் முகத்துடன் கிழந்த ஆடைகளை அணிந்து கொண்டிருந்த வெங்கண்ணாச் சாரியார் மனைவி மகனுடன் அப்பெரிய வீட்டின் ஒரு மூலையில் உட்கார்ந்திருப்பதை பார்த்த தலைமை புரோகிதர்.,

"ஏ... பிரமணனே! வேலையேதும் செய்யாமல் ஏனிங்கே கைகட்டிக்கொண்டு உடகார்ந்திருக்கிறாய்? தெண்ட போஜணத்திற்காக இங்கே வந்தாய்? இந்தா அங்கே உள்ள இந்த சந்தனக்கட்டைகளை சந்தனக் கல்லில் முடிந்தவரை அறைத்து சந்தனக் குழம்பாக்கு, என்று அன்பும் கனிவுமில்லாமல் வேலைக்காரனை போல கட்டளையிட்டு சென்றார்.

வெங்கண்ணாச்சாரியார் மிகுவும் மனம் நொந்து வருந்தினர் "கடவுளே .... இது என்ன சோதனை? இத்தகைய சுடு சொற்களை கேட்கவும் இத்தகைய பேரவமானத்தை சந்திக்கவும் என் முன் பிறவியில் நான் என்ன பாவம் செய்தேனோ? இன்றிருந்து நாளை யழியும் இவ்வுடலின் பொருட்டு ஒரு கவளம் உணவிற் காக வந்ததற்காக இவ்வளவு பெரிய தண்டனையை அனிக்க வேண்டுமா? நன்று.... நன்று.... என்று புலம் பிய வாறு தேம்பித் தேம்பி அழுதவர், அதனால் ஏற்பட்ட விரக்தி காரணமாக மனதை தேற்றிக் கொண்டு அங்கு கி..ந்த சந்தனக்கட்டையை கையி லேந்தி அக்னி சூத்திரத்தை உச்சரித்தவாறு சந்தனப்

முழுவதையும் அறைத்து முடித்தார். சந்தனம் வெண்ணெய்போல திரண்டு சித்தமாயிருந்தது.

ஹோமம், ஹவனம் பூஜை அனைத்தும் முடிந்த பின் உணவு வழங்குவதற்கான ஏற்பாடுகளும் நடைப் பெறலாயின, அதற்கு முன் தலைமை புரோகிதர் அனை வருக்கும் தீர்த்தமும் சந்தனமும் வழங்கினர், அனைவ ரும் சந்தனத்தை அவரவர் உடம்பின் மீது பூசிக்கொண் டமாத்திரத்திலேயே ஏதோ பெரும் நெருப்பு பிழம்பிற் குள் அகப்பட்டுக் கொண்டவர்கள் போல துடியாய் துடித்தனர். இதைக் கண்ட மிராசுதாரரும் புரோகி தரும் மிகவும் கலவரமடைந்தனர். தண்ணென இருக்க வேண்டிய சந்தனம் தணலாய் எரிச்சலூட்டக் காரணம் யாது ? இம்மாற்றம் எவ்வாறு நிகழ்ந்திருக்கக் கூடும் அவர்களுக்கு விளங்கவேயில்லை. சந்தணத்தை குழைத்து உடம்பில் பூசிக் கொண்டவர்களனைவரும் " அய்யோ நெருப்பு சுடுகிறதே ... என்று கத்தியமு வதைக் கண்ட மிராசுதரார் பின்னல் நிகழயிருக்கும் ஏதோ ஒரு கெட்ட நிகழ்ச்சிக்கான கெட்ட சகுணமாக இதை கருதியதால் நடு நடுங்கி போனதோடு மட்டு மல்லாமல் இக்குழப்பத்திற்குத் தலைமை புரோகிதரே என்று குற்றம்சாட்டி வெகுண்டெழுந்து அவரை வாய் க்கு வந்தபடி திட்டினர்.

எந்த சந்தணத்தை உடம்பில் பூசிக்கொண்டதும் இத்தகைய அவலமும் ஏற்படலாயினவோ அச்சந்த ணத்தை அறைத்த பிராமணன் தான் இதற்கெல்லாம் காரணமாயிருக்கக்கூடும் என்று அத்தலைமை புரோ

கிதரின் நினைவில் பொறித்தட்டியதால் மிராசு தாரரை அழைத்துக் கொண்டு வெங்கண்ணாச்சாரி யாரை அணுகி கைக்கட்டிப் பணிவாக அவரிடம் "தாங்கள் யார்? தாங்கள் யாது செய்தீர்கள் ?" என்று கூறியருளுமாறு கேட்டுக் கொண்டார்.

வெங்கண்ணாச்சாரியாரும் சற்று நேரத்திற்கு முன் புரோகிதர் அவருக்களித்த அவமானத்தின் விளைவுதானெனக் கூறினார். மிராசுதாரர் உடனே வெங்கண்ணாச்சாரியாரின் காலில் விழுந்து புரோகிதர் பொருட்டு தம்மை மன்னிக்கும் படி கேட்டுக்கொண் டார்.

வெங்கண்ணாச்சாரியார் இயல்பாகவே மிகவும் கருணை உள்ளம் கொண்டவராகையால் தமக்கு விளை விக்கப்பட்ட அவமானங்களை உடனே மறந்தார், பின்னர் வருண சாத்திரத்தை உச்சரித்தவாறு அச் சந்தண நீரை அனைவரது உடல் மீதும் தெளிக்க அனைவரும் எரிச்சலிருந்து விடுபட்டு தண்ணெக் குளிர்ச்சியான உணர்வைப்பெற்று அமைதியடைந்த னர். சமாராதனையின் முதல் நாள் நடந்த நிகழ்சியிது அதற்குப் பின்னர் மிராசுதாரர் வெங்கண்ணாச்சாரி யார் யார் என்பதை அறிந்துகொண்டு சமாராதனை முடியும் வரை அவருடனயே தங்கிருக்கும்படி கேட் டுக் கொண்டார். சமாராதனையின் இறுதி நாளன்று மிராசுதாரர் வெங்கண்ணாச்சாரியாருக்கும் அவர் மனைவிக்கும் குழந்தைக்கும் போதுமான அளவு தட் சணைகளை தந்து மனநிறைவு ஏற்படச் செய்து ஊருக்கு வழியனுப்பி வைத்தார்.

வெங்கண்ணாச்சாரியார் திருப்தியோடு மன அமைதி திபெற்றவராக ஊர் வந்து 'வீட்டை அடைந்த போது வீடு திறந்திருப்பதையும் நான்கு சுவர்கயைும் கூரையையும் தவிர வேறேதும் இல்லா ததது கண்டு மனம் வருந்தி மனைவிசரஸ்வதி தேவிடம், "பெண்ணே இனியும் சோதனைகளை என்னுல் தாளமுடியாது. இந்த இரக்கமற்ற உலகைக் கண்டு உனக்காகவோ அல்லது எனக்காகவோ கூட நான் கவலைப்படவில்லை. இக் குழந்தை நன்கு வளர்ந்து பெரிய கல்விமானாக வேண்டுமே என்ற கவலைத்தான். இனியும் இங்கிருப்பது· முறைல்ல, நம் மதிப்பிற்குரிய குருவின் நிழலிலேயே தங்கி வாழ்வதுதான் நல்லது. புறப்படுவாயாக!" என்று வேதனையுடன் பணிந்தார்.

சரஸ்வதி தேவியாருக்கு தெரிந்த கடமைகள் இந்த உலகத்தில் இரண்டேதான் அவளுடைய ஆத்மாவிற்குத் திருப்தி அளிக்க கூடியதான அவைகள் கணவனின் கட்டளைகளுக்கு கீழ்படிதலும் அவர் எங்கெல்லாம் செல்கிருரோ அவரை நிழல்போல் மறுப்பேதும் சொல்லாமல் தொடர்வதும்தான். எனவே அவள் மறுமொழியேதும் கூருமல் கணவனைத் தொடர்ந்து நடந்தாள்.

# 5. சன்னியாசம்

வெங்கண்ணுச்சாரியார் மடத்திற்கு வந்தபோது அவருடைய குருவான ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் இதய பூர் வமான மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரித்தார். பிறகு கடந்த ஆண்டுகளில் வறுமையாலும் துன்பங்களாலும் மிகுந்த கஷ்டப்பட்டதை விசாரித்து அறிந்து அற்காக மிகவும் வேதனைப்பட்டதோடு மட்டுமல்லாமல் அவரையும் அவரது மனைவியையும் அம்மடத்திலேயே தங்கி வாழும்படியாகவும் வேறெங்கும் செல்லலாகாது எனவும் அன்புக் கட்டளையிட்டார். வெங்கண்ணாச் சாரியாரும் அதற்கு இணக்கம் தெரித்தார்.

வெங்கண்ணுச்சாரியார் மனைவிமகனுடன் மிகுந்த மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வருங்ககாலை. மகன் லட்சுமி நாராயணன் வளர்ந்து இளம் வாலிப பருவத்தை யடைந்தபோது அவருடைய ஆசிரியரின் ஆலோசனை யின் பேரில் அவருடைய வாழ்ந்துக்களுடன் நாட்கள் உருண்டோடின. ஒரு சமையம் ஸ்ரீ சுதீந்திர தீத்த்தர் நோய்வாய் பட்டு படுத்த படுக்கையாகி விட்டார். இதனுல் மடத்தின் அன்ருட செய்தே தீரவேண்டிய சன்னியாசர நடவடிக்கைகளும் ஸ்ரீ மூலராமர் வழிபாடு ஒழுங்காக நடத்துவது மிகவும் கஷ்டமாகிவிட்டது. இதனுல் சுதீந்திர தீர்த்தர் ஆசரமத்தையும் அதைச் சார்ந்த அனைத்து பொருப்புகளையும் வேறொருவரிடம் ஒப்படைக்க தீர்மாணத்தார். இப் புனிதமான பொருப்பை குறைவின்றி செயல்

படுத்தக்கூடிய திறமையும் தகுதியும் வேங்கண்ணாச் சாரியாரிடம் மட்டுமே இருப்பதாக அவருக்குத் தோன் றியதால் அப்பதவியை வெங்கண்ணாச்சாரியாருக்கே தர முடிவு செய்தார்.

எனவே ஒருநாள் சுதீந்திர தீர்த்தர் வெங்கண் ணாச்சாரியாரை அழைத்து ஆசிரம பொருப்புக்களை ஏற்றுக்கொள்ளும்படி கூறினார். வெங்கண்ணாச்சாரியார் குருவின் முன் கை கட்டி தலைகுனிந்து நின்றபடி "ஐயன்மீர் .... இவ்வளவு பெரிய பொருப்புகளை ஏற்று கொள்ளும்படி கட்டளையிட்டு எனக்கு பெரும் பயத்தை உண்டாக்குகிறீர்களே, யானோ இளமையானவன், எதையும் துறந்து விடுமளவிற்கு என் மணம் பக்குவம டையவில்லை. காதலும் வாழ்க்கைமேற் கொண்ட ஆசை பிடிப்பும், உலக ஆசைகளும் இன்னும் என் உள்ளத்தில் உறுதியாக நிலைத்துள்ளன. சன்னியாசி ஆவதற்கு முற்றிலும் தகுதியில்லாதவன் நான். தயவு செய்து மன்னித்தருள வேண்டும்," என்று மீண்டும் தலைவணங்கி பணிவுடன் கேட்டுக்கொண்டார்.

அந்நிகழ்ச்சியின் போது ஸ்ரீ சுதீந்திர தீர்த்தரு டைய தாய் வழிவந்த மிக நெருங்கிய உறவினர் ஒருவர் உடனிருந்தார். அவர் மனைவியை இழந்த வய தானவர் வாழ்க்கையின் இன்ப துன்பங்களை அறவே வெருத்தவர். கடவுளுக்காகவும் சமயத்திற்காகவுமே தன்னை முழுவதும் அர்ப்பணித்துக் கொண்டவர். அவர் முன் வந்து ஸ்ரீ சுதீர்ந்திர தீர்த்தரிடம், "ஐயன்மீர்.... குடும்ப வாழ்க்கையை முற்றும் வெறுத்த வயதான

யானிங்கிருக்கிறேன். ஆசரமத்தை எனக்குத் தந்தருளினால் மகிழ்ச்சியுடன் ஏற்றுந் கொள்ள சித்தமாயிருக்கிறேன்'' என்று வேண்டிக்கொண்டார்.

ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் அவருடைய வேண்டுதலை அறிவுபூர்வமாக சிந்தித்துப் பார்த்து. அதன் படியே ஆசரமத்தை அவருக்கு அளித்து ஸ்ரீ யாத வேந்திர தீர்த்தர் என்ற சிறப்பு பெயரையும் சூட்டி அருளினார்.

ஸ்ரீ யாத வேந்திர தீர்த்தர் மிகுந்த அக்கரையோடும் ஜாக்கிரத்தையோடும் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் நோயின்றி குணமடைந்து உடல் நலனில் தேற்சி பெற மிகுந்த கவணம் செலுத்தியதால் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் மிக விரைவிலேயே குணமடைந்தார்.

ஆனால், வேலையில்லாமல் இரண்டு சன்னியாசிகள் ஒரே மடத்தில் உறைவது நன்றன்று என்பதால் சுதீந்திர தீர்த்தர் யாதவேந்திர தீர்த்தரிடம், இந்தியாவின் பல இடங்களில் உள்ள ஆண்டவன் சன்னதிகளுக்கு புனித யாத்திரை மேற் கொண்டு தரிசித்து த்வைத்த சித்தாந்தத்தை பிரச்சாரம் செய்து மக்கள் நல்வழி நடக்க வழிகாட்டும்படி ஆலோசனை கூறினார். அதோடு விக்கரக வழிப்பாட்டிற்கான சில புண்ணிய தலங்களையும் கூறி யாதவேந்திர தீர்த்தரின் யாத்திர வாழ்க்கைக்கு ஆசி தந்து வழியனுப்பியும் வைத்தார்.

தள்ளாத வயது முதிர்ந்த சுதீந்திர தீர்த்தரின் களைத்து உடல் மீண்டும் இரண்டாண்டுகளுக்குப் பிறகு கடும் நோய்க்குள்ளாகியது. இம்முறை பிழைத்

தொழுவதென்பது இயலாத காரியம் என்று பூர்ணமாக உணர்ந்தார் சுதீந்திர தீர்த்தர் அவர்கள். இருந்தாலும் மடத்தின வழக்கமான நிகழ்ச்சிகளும், சன்னியாசரமத்தின் அன்றுட கடமைகளும் ஆண்டவனின் வழிபாடும் தவருவல் ஒழுங்காக நடந்துக் கொண்டிருந்தது சுதீந்திர தீர்த்தருக்கு இவைகளை நடத்துவது மிகவும் கடினமாக இருந்தாலும் ஒவ்வொரு நாளையும் வெற்றிகரமாகவே கழித்து வந்தார். ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தருக்கு யாத்திரை முடித்துக் கொண்டு உடனே திரும்பி விடும்படி செய்தியனுப்ப விரும்பினர். ஆனல் ஸ்ரீயாதவேந்திர தீர்த்தருடைய இருப்பிடம் அங்கிருந்த யாருக்குமே தெரியாதிருந்தது அப்படியே மிகச் சிரமப்பட்டு அவரது இடத்தை கண்டுபிடித்தாலும் காலதாமதமின்றி விரைவாக திரும்பி வந்து விட முடியுமா என்பது ஐயப்படாயிருந்தது.

எனவே ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் மடாதிபதியின் தலைமையையும் பொருப்புக்களையும் வெங்கண்ணாச்சாரியாரிடம் தந்து ஏற்றுக் கொள்ளச் செய்ய வேண்டும் என்றும் தீர்மானித்ததால் வெங்கண்ணாச்சாரியாரை அழைத்து "அன்பு குழந்தாய் வெங்கடேஷ் அருகே வந்து என்னையும் என் இந்த நிலையையும் இப்போது நான் படுத்த படுக்கையாகிவிட்டேன். ஸ்ரீ மூலராமர் வழிபாடும் தவருமல் நடந்தாக வேண்டும். என்னல் இனியும் அவற்றை தொடர்ந்து செய்யமுடியாது போலத்தோன்றுகிறது. ஸ்ரீ யாதவேந்திரருக்கு செய்தி சொல்ல விரும்பினேன். ஆனல் அவரிருக்கும் இடம் நம்முள் யாருக்கும் தெரியவில்லை ஆகையால்

இவ்வாசிரமத்தையும் பீடாதிபதி பொருப்பையும் மறுப்பு கூருமல் ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்.

குருவின் முன் பணிவாக கட்டிய கைகளுடன் நின்றிருந்த வெங்கண்ணுச்சாரியாருக்கு குருவின் இந்த வேண்டுதலுக்கு என்ன சொல்லுவது? எப்படி சொல்வது? என்று ஏதும் அறியாததால் மௌனமாக நின்றிருந்தார்.

தொடர்ந்து ஆசிரியரே, ''ஆச்சாரியா ! ஏனிந்த வெருப்பு? ஏனிந்த பயம்? தைரியமும் துணிவும் கொள் இந்த உலக இன்பங்கள் நிலையானதல்ல வென்று உனக்குத்தெரியாத ? மனைவி, மக்கள், மற்றச் செல் வங்கள் யாவும் சாதாரண உருவப் பொருட்கள் என்று உனக்கு தெரியாத ? உன் குழந்தையை இம்மடத்தி லேயே சேர்த்துவிடு உன் புறவாழ்வை மறந்து அகக் கண்களை திறந்து நீ யார் ? எந்த நோக்கம் கொண்டு இம் மண்ணில் வந்து அவதரித்தாய்? என்று சிநதித்து பார்....'' என்ருர்.

மீண்டு சிறிது மௌனத்திற்குப் பிறகு,''ஆச்சாரி யாரே....அருகே வா, உன்னை நீ தயராக்கிக்கொள் ஶ்ரீ ஹரி பகவானும் வாயு பகவானும், மனைவி மக்கள் மற்றும் நிலையில்லாத அற்பப் பொருள்கள் மீது ஏற்ப் பட்டுள்ள ஆசையெனும் மாயத்திரையை கிழித்தெரிய வலிமையும் துணிவும் அளிப்பார்களாக. நீ த்வைத்த மூலத்தை காத்து உயர்த்துவதற்காக பிறந்திருக்கிருய் என்பதையும் எண்ணிப்பார். விலை மதிப்பற்ற மிகச்

வருமை நோயால் மிகவும் துண்பப் பட்டார் என்பது மட்டும் தெளிவு.

கல்வியின் பல துறைகளிலும் அவர் சிறந்த ஞானியாக விளங்கிய போதிலும் அவரிடம் கல்வி கற்க வோ ஏன் வீணை கற்றுக்கொள்ளக்கூட எவரும் முன் வரவில்லை. அவர் ஒரு சாதாரண கிரகஸ்தாசரம் பிரமணரைப்போல கருதப்பட்டார். எப்பொழுதேனும் அவருக்குக் கிடைத்து வந்த பிச்சை இருவரின் ஒரு வேளை உணவிற்க்குக் கூட போதுமான தாக இருக்க வில்லை. பத்து மாதம் நிறை வெய்தியபோது சரஸ்வதி தேவியார் பேருவுவகை எய்துப்படியாக ஓர் அழகிய ஆண்மகவை ஈன்றெடுத்தாள். வெங்கண்ணுச்சாரி யாருக்கு இளமையில் உணவு உடை கல்வி அனைத் தையும் தந்து வளர்த்த மைத்துனரின் நினைவாக லட்சுமிநாராயணன் என்று பெயர்சூட்டினர். குழந்தை வளர வளர அவர்களது குடும்பத்தில் வருமையும் சேர்ந்தே வளர்ந்தது

வாரத்தில் இரண்டு மூன்று நாட்கள் உண்ண உணவின்றி நீரைமட்டுமே பருகி வாழவேண்டிருந்தது குழந்தைக்கு ஒரு வேளை பால் வாங்கக் கூட முடியாத வறுமையில் வாடினர் இவ்வாறு சில ஆண்டுகள் கழிநதன. "அவருக் ஏன் இந்நிலை ?" இவ்வினு அன்று எழுந்தது இன்றும் எழுகிறது.

வெங்கண்ணுச்சாரியர் பெருமை மிகுந்த நல்ல உயர்ந்த குடும்பத்தில் பிறந்த தூய பிராமணர். ஈடு

இணையில்லாத தத்துவபேரறிஞர். வீணை மீட்டுவதில் வாணிக்கு நிகரானவர் தாம் கற்றதை பிறருக்கு கற்பிப்பதில் அறிய திறமை வாய்ந்தவர். அனைத்திற்கும் மேலாக ஸ்ரீசுதீந்திர தீர்த்தரின் பரிவும் பாசமும், பக்கபலமும் அவருக்கு என்றும் இருந்து வந்தது. அவ்வாறு இருந்த போதிலும் வாழ்க்கையில் அன்றாட அடிப்படைத் தேவைகளைக் கூட பூர்த்தி செய்து கொள் முடியாத நிலை ஏன் ?

தத்துவப்படி பார்த்தால் அவர் அவ்வாறு இருந்தது தான் சரி. புராணங்களை நாம் ஊன்றி கவனித்தால் ஓர் உண்மை புலப்படும். மகா முனிவர்களான வசிஸ்டர், கௌதமர், பரத்துவாசர் போன்றோர் வாழ்க்கையின் எல்லா உலகியல் வசதிகளையும் துறந்து, வீடு தேடிவந்த அதிர்ஷ்டத்தையும் புறக்கணித்து முரட்டுத்தனமான ஆடைகளை அணிந்து பச்சையிலைகள், காய்கறிகள், பழங்கள் முதலியவற்றை உண்டு எளிய வாழ்க்கை நடத்தினார்கள் என்பது தெளிவு. அவர்களுக்கு சக்ஷாத்காரம் எனப்படும் இறைவனை உணரும் பேரின்ப நிலையே குறிக்கோளாக இருந்தமையால் இத்துன்பங்களை ஒரு பொருட்டாகக் கருதவேயில்லை.

எந்த பிரகலாதனை காக்க நரசிம்ம அவதாரம் கொண்டு இறைவன் தூணை பிளந்து வந்தாரோ அந்த பிரகலாதனின் மறு அவதாரமான இந்த வெங்கிண்ணாச்சாரியாரும் மேலே குறிப்பிட்ட முனிவர்களை போல வருமை துண்பத்தில் உலகியல் வசதிகளைபுறக்கணிக்கும் அளவிற்கு மணபக்குவமடைந்தார். சுக

போக தேவைகளைப்'பற்றி கவலை படாமல் நரசிம்மனை வழிப்பட்டுக் கொண்டு தம்மை மறந்து சமாதி நிலையில் வெங்கண்ணுச்சாரியார் இருந்து வந்தார் என்பது தெளிவு.

பசியும் தாகமும் உலகம் தோன்றிய முதல் இன்று வரை உயிரினங்களுக்கு எதிரிகளாக இருந்து வருகின்றன. வெங்கண்ணாச்சாரியாரின் குடும்பம் இவ் விதிக்கு விலக்கானவர்கள் அல்லர். இவ்வாறு வாழ்க்கையில் வெறுப்படைந்த நிலையில் அவர் வாழுங்கால் அருகேயிருந்த ஒரு கிராமத்தின் மிராசுதாரர் ஒரு வாரகாலத்திற்கு தொடர்ந்து பெரிய அளவில் சமாராதனை ஒன்று நடத்த விரும்பி சுற்றும் முற்றும் உள்ள கிராமங்களில் வசித்து வந்த அந்தணர்களுக்குக் கலந்துக் கொள்ளும்படி அழைப்பு விட்டிருப்பதாக விழிந்த அச்செய்தி வெங்கண்ணாச்சாரியாருக்குத் தேனாக இனித்தது.

மனைவியின்வற்புறுத்தலின் காரணமாக அச்சந்–தர்ப்பத்தை நழுவவிடாமல் சமாராதனையில் கலந்து கொண்டு வயிறார உண்டு களிக்க தீர்மானித்தார். மிராசுதாரர் நடத்திய அச் சமாராதனை உண்மையிலேயே மிகப் பெரியதுதான் ஆடவரும் பெண்டிரும் குழந்தைகளுமாக நூற்றுக்கும் மேம்பட்டவர் அங்கே திரண்டிருந்தனர். ஹோமம், ஹவனம், பூஜை முதலியன மிகவும் ஆடம்பரமாக நடந்துக் கொண்டிருந்தது சமாராதனை தலைமையேற்று நடத்திய புரோகிதர் ஒருவர் துணை புரோகிதர்களுடன் அங்குமிங்குமாக

ஓடியாடியபடி நிகழ்ச்சிகளை மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்தார். அப்போது. தடித்த உடம்போடு வறுமை கலை தொனிக்கும் முகத்துடன் கிழந்த ஆடைகளை அணிந்து கொண்டிருந்த வெங்கண்ணாச் சாரியார் மனைவி மகனுடன் அப்பெரிய வீட்டின் ஒரு மூலையில் உட்கார்ந்திருப்பதை பார்த்த தலைமை புரோகிதர்.,

"ஏ... பிரமணனே! வேலையேதும் செய்யாமல் ஏனிங்கே கைகட்டிக்கொண்டு உடகார்ந்திருக்கிறாய்? தெண்ட போஜனத்திற்காக இங்கே வந்தாய்? இந்தா அங்கே உள்ள இந்த சந்தனக்கட்டைகளை சந்தனக் கல்லில் முடிந்தவரை அறைத்து சந்தனக் குழம்பாக்கு, என்று அன்பும் கனிவுமில்லாமல் வேலைக்காரனை போல கட்டளையிட்டு சென்றார்.

வெங்கண்ணாச்சாரியார் மிகுவும் மனம் நொந்து வருந்தினார் "கடவுளே .... இது என்ன சோதனை? இத்தகைய சுடு சொற்களை கேட்கவும் இத்தகைய பேரவமானத்தை சந்திக்கவும் என் முன் பிறவியில் நான் என்ன பாவம் செய்தேனோ? இன்றிருந்து நாளை யழியும் இவ்வுடலின் பொருட்டு ஒரு கவளம் உணவிற் காக வந்ததற்காக இவ்வளவு பெரிய தண்டனையை அளிக்க வேண்டுமா? நன்று.... நன்று.... என்று புலம் பிய வாறு தேம்பித் தேம்பி அழுதவர், அதனால் ஏற்பட்ட விரக்தி காரணமாக மனதை தேற்றிக் கொண்டு அங்கு கி..ந்த சந்தனக்கட்டையை கையி லேந்தி அக்னி சூத்திரத்தை உச்சரித்தவாறு சந்தனம்

முழுவதையும் அறைத்து முடித்தார். சந்தனம் வெண்ணெய்போல திரண்டு சித்தமாயிருந்தது.

ஹோமம், ஹவனம் பூஜை அனைத்தும் முடிந்த பின் உணவு வழங்குவதற்கான ஏற்பாடுகளும் நடைப்பெறலாயின, அதற்கு முன் தலைமை புரோகிதர் அனைவருக்கும் தீர்த்தமும் சந்தனமும் வழங்கினர், அனைவரும் சந்தனத்தை அவரவர் உடம்பின் மீது பூசிக்கொண்டமாத்திரத்திலேயே ஏதோ பெரும் நெருப்பு பிழம்பிற்குள் அகப்பட்டுக் கொண்டவர்கள் போல துடியாய் துடித்தனர். இதைக் கண்ட மிராசுதாரரும் புரோகிதரும் மிகவும் கலவரமடைந்தனர். தண்ணென இருக்க வேண்டிய சந்தனம் தணலாய் எரிச்சலூட்டக் காரணம் யாது ? இம்மாற்றம் எவ்வாறு நிகழ்ந்திருக்கக் கூடும் அவர்களுக்கு விளங்கவேயில்லை. சந்தனத்தை குழைத்து உடம்பில் பூசிக் கொண்டவர்களனைவரும் " அய்யோ நெருப்பு சுடுகிறதே .... என்று கத்தியழுவதைக் கண்ட மிராசுதரார் பின்னால் நிகழயிருக்கும் ஏதோ ஒரு கெட்ட நிகழ்ச்சிக்கான கெட்ட சகுணமாக இதை கருதியதால் நடு நடுங்கி போனதோடு மட்டுமல்லாமல் இக்குழப்பத்திற்குத் தலைமை புரோகிதரே என்று குற்றம்சாட்டி வெகுண்டெழுந்து அவரை வாய்க்கு வந்தபடி திட்டினர்.

எந்த சந்தனத்தை உடம்பில் பூசிக்கொண்டதும் இத்தகைய அவலமும் ஏற்படலாயினவோ அச்சந்தனத்தை அறைத்த பிராமணன் தான் இதற்கெல்லாம் காரணமாயிருக்கக்கூடும் என்று அத்தலைமை புரோ

கிதரின் நினைவில் பொறித்தட்டியதால் மிராசு தாரரை அழைத்துக் கொண்டு வெங்கண்ணுச்சாரி யாரை அணுகி கைக்கட்டிப் பணிவாக அவரிடம் "தாங்கள் யார்? தாங்கள் யாது செய்தீர்கள் ?" என்று கூறியருளுமாறு கேட்டுக் கொண்டார்.

வெங்கண்ணுச்சாரியாரும் சற்று நேரத்திற்க்கு முன் புரோகிதர் அவருக்களித்த அவமானத்தின் விளைவுதானெனக் கூறினுர். மிராசுதாரர் உடனே வெங்கண்ணாச்சாரியாரின் காலில் விழுந்து புரோகிதர் பொருட்டு தம்மை மன்னிக்கும் படி கேட்டுக்கொண் டார்.

வெங்கண்ணாச்சாரியார் இயல்பாகவே மிகவும் கருணை உள்ளம் கொண்டவராகையால் தமக்கு விளை விக்கப்பட்ட அவமாணங்களை உடனே மறந்தார், பின்னர் வருண சாத்திதிரத்தை உச்சரித்தவாறு அச் சந்தண நீரை அனைவரது உடல் மீதும் தெளிக்க அனைவரும் எரிச்சலிருந்து விடுபட்டு தண்ணெக் குளிர்ச்சியான உணர்வைப்பெற்று அமைதியடைந்த னர். சமாராதனையின் முதல் நாள் நடந்த நிகழ்சியிது அதற்குப் பின்னர் மிராசுதாரர் வெங்கண்ணாச்சாரி யார் யார் என்பதை அறிந்துகொண்டு சமாராதனை முடியும் வரை அவருடனயே தங்கிருக்கும்படி கேட் டுக் கொண்டார். சமாராதனையின் இறுதி நாளன்று மிராசுதாரர் வெங்கண்ணாச்சாரியாருக்கும் அவர் மனைவிக்கும் குழந்தைக்கும் போதுமான அளவு தட் சணைகளை தந்து மனநிறைவு ஏற்படச் செய்து ஊருக்கு வழியனுப்பி வைத்தார்.

வெங்கண்ணாச்சாரியார் திருப்தியோடு மன அமைதி திபெற்றவராக ஊர் வந்து !வீட்டை அடைந்த போது வீடு திறந்திருப்பதையும் நான்கு சுவர்களையும் கூரையையும் தவிர வேறேதும் இல்லா ததது கண்டு மனம் வருந்தி மனைவிசரஸ்வதி தேவிடம், "பெண்ணே இனியும் சோதனைகளை என்னால் தாளமுடியாது. இந்த இரக்கமற்ற உலகைக் கண்டு உனக்காகவோ அல்லது எனக்காகவோ கூட நான் கவலைப்படவில்லை. இக்குழந்தை நன்கு வளர்ந்து பெரிய கல்விமானாக வேண்டுமே என்ற கவலைத்தான். இனியும் இங்கிருப்பது முறையல்ல, நம் மதிப்பிற்குரிய குருவின் நிழலிலேயே தங்கி வாழ்வதுதான் நல்லது. புறப்படுவாயாக!" என்று வேதனையுடன் பணிந்தார்.

சரஸ்வதி தேவியாருக்கு தெரிந்த கடமைகள் இந்த உலகத்தில் இரண்டேதான் அவளுடைய ஆத்மாவிற்குத் திருப்தி அளிக்க கூடியதான அவைகள் கணவனின் கட்டளைகளுக்கு கீழ்படிதலும் அவர் எங்கெல்லாம் செல்கிறாரோ அவரை நிழல்போல் மறுப்பேதும் சொல்லாமல் தொடர்வதும்தான். எனவே அவள் மறுமொழியேதும் கூறாமல் கணவனைத் தொடர்ந்து நடந்தாள்.

# 5. சன்னியாசம்

வெங்கண்ணாச்சாரியார் மடத்திற்கு வந்தபோது அவருடைய குருவான ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் இதய பூர்வமான மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரித்தார். பிறகு கடந்த ஆண்டுகளில் வறுமையாலும் துன்பங்களாலும் மிகுந்த கஷ்டப்பட்டதை விசாரித்து அறிந்து அதற்காக மிகவும் வேதனைப்பட்டதோடு மட்டுமல்லாமல் அவரையும் அவரது மனைவியையும் அம்மடத்திலேயே தங்கி வாழும்படியாகவும் வேறெங்கும் செல்லலாகாது எனவும் அன்புக் கட்டளையிட்டார். வெங்கண்ணாச்சாரியாரும் அதற்கு இணக்கம் தெரித்தார்.

வெங்கண்ணாச்சாரியார் மனைவிமகனுடன் மிகுந்த மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வருங்ககாலை. மகன் லட்சுமி நாராயணன் வளர்ந்து இளம் வாலிப பருவத்தை யடைந்தபோது அவருடைய ஆசிரியரின் ஆலோசனையின் பேரில் அவருடைய வாழ்ந்துக்களுடன் நாட்கள் உருண்டோடின. ஒரு சமையம் ஸ்ரீ சுதீந்திர தீத்த்தர் நோய்வாய் பட்டு படுத்த படுக்கையாகி விட்டார். இதனால் மடத்தின் அன்றாட செய்தே தீரவேண்டிய சன்னியாசர நடவடிக்கைகளும் ஸ்ரீ மூலராமர் வழிபாடு ஒழுங்காக நடத்துவது மிகவும் கஷ்டமாகிவிட்டது. இதனால் சுதீந்திர தீர்த்தர் ஆசரமத்தையும் அதைச் சார்ந்த அனைத்து பொருப்புகளையும் வேறொருவரிடம் ஒப்படைக்க தீர்மாணத்தார். இப் புனிதமான பொருப்பை குறைவின்றி செயல்

படுத்தக்கூடிய திறமையும் தகுதியும் வெங்கண்ணாச் சாரியாரிடம் மட்டுமே இருப்பதாக அவருக்குத் தோன்றியதால் அப்பதவியை வெங்கண்ணாச்சாரியாருக்கே தர முடிவு செய்தார்.

எனவே ஒருநாள் சுதீந்திர தீர்த்தர் வெங்கண்ணாச்சாரியாரை அழைத்து ஆசிரம பொருப்புக்களை ஏற்றுக்கொள்ளும்படி கூறினார். வெங்கண்ணாச்சாரியார் குருவின் முன் கை கட்டி தலைகுனிந்து நின்றபடி "ஐயன்மீர் .... இவ்வளவு பெரிய பொருப்புகளை ஏற்று கொள்ளும்படி கட்டளையிட்டு எனக்கு பெரும் பயத்தை உண்டாக்குகிறீர்களே, யானோ இளமையானவன், எதையும் துறந்து விடுமளவிற்கு என் மணம் பக்குவமடையவில்லை. காதலும் வாழ்க்கைமேற் கொண்ட ஆசை பிடிப்பும், உலக ஆசைகளும் இன்னும் என் உள்ளத்தில் உறுதியாக நிலைத்துள்ளன. சன்னியாசி ஆவதற்கு முற்றிலும் தகுதியில்லாதவன் நான். தயவு செய்து மன்னித்தருள வேண்டும்," என்று மீண்டும் தலைவணங்கி பணிவுடன் கேட்டுக்கொண்டார்.

அந்நிகழ்ச்சியின் போது ஸ்ரீ சுதீந்திர தீர்த்தருடைய தாய் வழிவந்த மிக நெருங்கிய உறவினர் ஒருவர் உடனிருந்தார். அவர் மனைவியை இழந்த வயதானவர் வாழ்க்கையின் இன்ப துன்பங்களை அறவே வெருத்தவர். கடவுளுக்காகவும் சமயத்திற்காகவுமே தன்னை முழுவதும் அர்ப்பணித்துக் கொண்டவர். அவர் முன் வந்து ஸ்ரீ சுதீர்ந்திர தீர்த்தரிடம், "ஐயன்மீர்.... குடும்ப வாழ்க்கையை முற்றும் வெறுத்த வயதான

யானிங்கிருக்கிறேன். ஆசரமத்தை எனக்குத் தந்தரு ளினுல் மகிழ்ச்சியுடன் ஏற்றுந் கொள்ள சித்தமாயிருக் கிறேன்'' என்று வேண்டிக்கொண்டார்.

ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் அவருடைய வேண்டுதலை அறிவுபூர்வமாக சிந்தித்துப் பார்த்து. அதன் படியே ஆசரமத்தை அவருக்கு அளித்து ஸ்ரீ யாத வேந்திர தீர்த்தர் என்ற சிறப்பு பெயரையும் சூட்டி அருளினுர்.

ஸ்ரீ யாத வேந்திர தீர்த்தர் மிகுந்த அக்கரை யோடும் ஜாக்கிரத்தையோடும் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் நோயின்றி குணமடைந்து உடல் நலனில் தேற்சி பெற மிகுந்த கவணம் செலுத்தியதால் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் மிக விரைவிலேயே குணமடைந்தார்.

ஆனுல், வேலையில்லாமல் இரண்டு சன்னியாசிகள் ஒரே மடத்தில் உறைவது நன்றன்று என்பதால் சுதீந் திர தீர்த்தர் யாதவேந்திர தீர்த்தரிடம், இந்தியாவின் பல இடங்களில் உள்ள ஆண்டவன் சன்னதிகளுக்கு புனித யாத்திரை மேற் கொண்டு தரிசித்து த்வைத்த சித்தாந்தத்தை பிரச்சாரம் செய்து மக்கள் நல்வழி நடக்க வழிகாட்டும்படி ஆலோசனை கூறினுர். அதோடு விக்கரக வழிப்பாட்டிற்கான சில புண்ணிய தலங்களை யும் கூறி யாதவேந்திர தீர்த்தரின் யாத்திர வாழ்க் கைக்கு ஆசி தந்து வழியனுப்பியும் வைத்தார்.

தள்ளாத வயது முதிர்ந்த சுதீந்திர தீர்த்தரின் களைத்து உடல் மீண்டும் இரண்டாண்டுகளுக்குப் பிறகு கடும் நோய்க்குள்ளாகியது. இம்முறை பிழைத்

செழுவதென்பது இயலாத காரியம் என்று பூர்ணமாக உணர்ந்தார் சுதீந்திர தீர்த்தர் அவர்கள். இருந்தாலும் மடத்தின வழக்கமான நிகழ்ச்சிகளும், சன்னியாசரமத்தின் அன்றுட கடமைகளும் ஆண்டவனின் வழிபாடும் தவருவல் ஒழுங்காக நடந்துக் கொண்டிருந்தது சுதீந்திர தீர்த்தருக்கு இவைகளை நடத்துவது மிகவும் கடினமாக இருந்தாலும் ஒவ்வொரு நாளையும் வெற்றிகரமாகவே கழித்து வந்தார். ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தருக்கு யாத்திரை முடித்துக் கொண்டு உடனே திரும்பி விடும்படி செய்தியனுப்ப விரும்பினுர். ஆனல் ஸ்ரீயாதவேந்திர தீர்த்தருடைய இருப்பிடம் அங்கிருந்த யாருக்குமே தெரியாதிருந்தது அப்படியே மிகச் சிரமப்பட்டு அவரது இடத்தை கண்டுபிடித்தாலும் காலதாமதமின்றி விரைவாக திரும்பி வந்து விட முடியுமா என்பது ஐயப்படாயிருந்தது.

எனவே ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் மடாதிபதியின் தலைமையையும் பொருப்புக்களையும் வெங்கண்ணாச்சாரியாரிடம் தந்து ஏற்றுக் கொள்ளச் செய்ய வேண்டும் என்றும் தீர்மானித்ததால் வெங்கண்ணாச்சாரியாரை அழைத்து "அன்பு குழந்தாய் வெங்கடேஷ் அருகே வந்து என்னையும் என் இந்த நிலையையும் இப்போது நான் படுத்த படுக்கையாகிவிட்டேன். ஸ்ரீ மூலராமர் வழிபாடும் தவருமல் நடந்தாக வேண்டும். என்னுல் இனியும் அவற்றை தொடர்ந்து செய்யமுடியாது போலத்தோன்றுகிறது. ஸ்ரீ யாதவேந்திரருக்கு செய்தி சொல்ல விரும்பினேன். ஆனல் அவரிருக்கும் இடம் நம்முள் யாருக்கும் தெரியவில்லை ஆகையால்

இவ்வாசிரமத்தையும் பீடாதிபதி பொருப்பையும் மறுப்பு கூருமல் ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்.

குருவின் முன் பணிவாக கட்டிய கைகளுடன் நின்றிருந்த வெங்கண்ணுச்சாரியாருக்கு குருவின் இந்த வேண்டுதலுக்கு என்ன சொல்லுவது? எப்படி சொல்வது? என்று ஏதும் அறியாததால் மௌனமாக நின்றிருந்தார்.

தொடர்ந்து ஆசிறியரே, "ஆச்சர்ரியா! ஏனிந்த வெருப்பு? ஏனிந்த பயம்? தைரியமும் துணிவும் கொள் இந்த உலக இன்பங்கள் நிலையானதல்ல வென்று உனக்குத்தெரியாத? மனைவி, மக்கள், மற்றச் செல்வங்கள் யாவும் சாதாரண உருவப் பொருட்கள் என்று உனக்கு தெரியாத? உன் குழந்தையை இம்மடத்திலேயே சேர்த்துவிடு உன் புறவாழ்வை மறந்து அகக்கண்களை திறந்து நீ யார்? எந்த நோக்கம் கொண்டு இம் மண்ணில் வந்து அவதரித்தாய்? என்று சிநதித்து பார்...." என்ருர்.

மீண்டு சிறிது மௌணத்திற்குப் பிறகு, "ஆச்சாரியாரே....அருகே வா, உன்னை நீ தயராக்கிக்கொள் ஸ்ரீ ஹரி பகவானும் வாயு பகவானும், மனைவி மக்கள் மற்றும் நிலையில்லாத அற்பப் பொருள்கள் மீது ஏற்பட்டுள்ள ஆசையெனும் மாயத்திரையை கிழித்தெரிய வலிமையும் துணிவும் அளிப்பார்களாக. நீ த்வைத்த மூலத்தை காத்து உயர்த்துவதற்காக பிறந்திருக்கிருய் என்பதையும் எண்ணிப்பார். விலை மதிப்பற்ற மிகச்

சிறந்த நல்ல சமைய நூல்கள் பல எழுதி வருங்கால சந்ததிகளுக்கு வழிகாட்டியாக விளங்கக் கூடியவர் நீ மட்டும் தான் என்பதை உணறுவாயாக. துறவியாகு என்னுடைய இந்த பீடாதிபத்தியத்தின் அரியாசனத்தையான் உனக்களிக்க நயாராகயிருக்கிறேன். ஸ்ரீமூல ராமரும், வாயு பகவானும் நீ ஒரு மகானுகி நீண்ட நாட்கள் வாழ அருள் புரிவார்களாக....'' என்று முடித்தார் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர்.

அச்சமையம் வெங்கண்ணுச்சாரியாரின் உள்ளத்தில் அபூர்வ உணர்வுகள் எழுந்த மெய்யுணர்வை தூண்டுவது போல உணர்ந்தார் அம்மாத்திரத்திலேயே ஸ்ரீ சுதீந்திர தீர்த்தரை நோக்கி, "ஐயன் மிர்! யான் இப்பொருப்பை ஏற்றுக் கொள்ள தயாராக உள்ளேன். அதற்கு முன் என் மனையிடம் ஒரு வார்த்தை சொல்லி திரும்பி வர விழைகிறேன், அனுமதிப்பீர்களா'' என்று கேட்டுக் கொண்ட மறு வினுடியே அவர் தங்கிருந்த இடத்திற்கு ஓடிச் சென்று சுருக்கமாகவும் விளக்கமாவும் மனைவியிடம் அனைத்தையும் கூறினார்.

அது கேட்ட சரஸ்வதி தேவியார் இதயத்தை பேரிடி தாக்கியது போல் சிறிது நேரம் ஸ்தபித்து நின்றுவிட்டார், பிறகு 'சுவாமி .... தாங்கள் இதற்கு ஒரு போதும் ஒப்புக் கொள்ளக்கூடாது. நானறிந்ததெல்லாம் உங்களுக்கு கட்டுபட்டு நடப்பதும் உங்கள் வழி தொடர்வதும் தான். உங்களைப்பற்றி எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை' என்று மிகுந்த வேதனையோடு அழ ஆரம்பித்து விட்டாள்.

நீ எனக்கு கட்டுப்பட்டு கீழ்படிந்து நடப்பதானல் நான் ஆசரம வாழ்க்கையை ஏற்றுக்கொள்கிறேன். உன்மகனுடன் நீ புவனகிரிக்குச் சென்று விடு,' என்று வெங்கண்ணச்சாரியார் மனைவியின் புலம்பலுக்கு பதிலுரையாக கட்டளையிட்டார்.

'ஓ....கருணையில்லாமல் உங்களிடமிருந்து வெகு தொலைவில் சென்று வாழும்படி இப்பெருந்தண்டனையை எனக்குத் தருகிறீர்களே ........ தாங்களை பிரிந்து தான் எப்படி யிருப்பேன் ? என்று தொடர்ந்து அழுதாள், அழுதாள் ........ அழுது கொண்டேயிருந்தாள்.

வெங்கண்ணச்சாரியார் அவருடைய முடிவு பற்றி விரிவாக அவருடைய தமயனுருக்குத் தெரிவித்து, குழந்தையையும் மனைவியையும் வந்து அழைத்து சென்று விடும்படி கேட்டுக்கொண்டார். செய்திகேட்ட உடனேயே குருராஜ ஆச்சாரியார் வண்டி மாட்டுடன் வந்து சரஸ்வதி தேவியையும் சிறுவன் லட்சுமி நாராயணனையும் புறப்படும்படி கூறினர்.

சரஸ்வதி தேவியார் சிதைந்த உள்ளத்தோடு வெங்கண்ணச்சாரியாரின் பாதத்தில் விழுந்து கண்ணீரால் நீராட்டினர். வெச்கண்ணச்சாரியார் தம் கைகளால் ஆதரவாக சரஸ்வதி தேவியாரின் தோள்களை பற்றி தூக்கி சாந்தப் படுத்தியபடி தேற்றினர். ஆறுதல் பல கூறினர். எப்படி எப்படியோ முயன்றும் அவளின் சம்மதம் பெற முடியாமல் தோல்வி தான் கண்டார். முடிவாக கண்டிப்பான கட்டளையால் சென்று நலமாக வாழ வந்தனம் கூறி அனுப்பி வைத்தார்.

சரஸ்வதி தேவியார் மகனுடன் குருராஜ ஆச்சாரி யாரைத் தொடர்ந்து சென்று வண்டியில் ஏறி அமர்ந் தாள். வண்டி நகர்ந்தது. வண்டிச் சக்ரத்தின் சுவடு தரையில் பதிந்து சென்றதைபோல சரஸ்வதி தேவி யாரின் உள்ளத்திலும் வேதனை சுவடு பதிந்தது. வண்டியில் அழுதபடி அமர்ந்திருக்கும் அன்பு மனைவி யையும், ஏதுமறியாத சிறுவனின் சோகமான முகத் தையும் பார்த்தபடியே செயலற்று நின்று விட்டார் வெங்கண்ணாச்சாரியார். கண்களின் பார்வையிலிருந்து வண்டி மறைநததும் மடத்திலுள்ள அவருடைய வர வேற்பறையை நோக்கிச் சென்று சேர்ந்தார்.

ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் இறுதி காலத்தை தொட்டுக் கொண்டிருக்கிறார் என்பதும், அவருக்குபின் பரிமளாச் சாரியார் பீடாதிபதியாக பதிவியேற்கப் போகிறார் என்கிற செய்தியும் தஞ்சைஅரசருடைய செவிகளுக்கு எட்டியது. உடனே தஞ்சை அரசர் அவருடைய பரி வாரங்கள் புடைசூழ, முரசம் ஒலிக்க, பரிமளாச்சாரி யார் பீடாதிபதியாக பதவியேற்பதை சிறப்பிக்கும் பொருட்டு மடத்திற்கு வந்து சேர்ந்தார். ருதிரோடகரி சமஸர்ண ஆண்டு பங்குனி திங்கள் இரண்டாம் நாள் (1549 அதாவது கி.பி. 1623) பதவியேற்புக்கான திருநாளாகக் குறிப்பிடப்பட்டது.

மதவியேற்பு நாளன்று வெங்கண்ணச்சாரியார் எதிர் கால தூய துறவி என்கிற முறையில் ஆத்ம சரதம் பற்றும் அதை சார்ந்த கடமைகளையும் ஒருங்கே செய்து முடித்தார். பின்னர் முழுவதும் துறந்த துறவி

என்கிற முறையில் தூய காவியுடை அணிந்துக் கொண்டு ஸ்ரீ சுதீந்திர தீர்த்தரை அணுகி அவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கினர்.

ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் ஸ்ரீவெங்கண்ணாச்சாரியாரை தம் கைகளால் பற்றி எழச்செய்து அங்கே கூடியிருந்த பல நாட்டு அரசர்கள், அரச குலத்தை சார்ந்த பெரு மக்கள், அந்தணர் குழாம், ஆடவர்கள், பெண்டிற் குழந்தைகள் சூழ்ந்த அனைவர் முன்னிலையிலும் ஓர் உயரிய இருக்கையில் அமரச் செய்து, புனித சால கிரமங்களையும் கடவுளின் பற்பல விக்கரங்களையும் அவர் சிரசின் மீது வைத்து எடுத்து பின் கனக அபி ஷேகமும், நீராபிஷேகமும் தாமே முன்னின்று செய்து வைத்தார். அங்கே குழுமியிருந்த அந்தணர்கள் வேதங்களை உரக்க ஓதினர். அரண்மனையையும், மடத்தையும் சேர்ந்த பல இசைக்கருவிகள் இன்னிசை யை பொழிந்தன. பற்பல வகையான முரசங்கள் ஆர்த்தன, மணிகள் முழங்கின. ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் வெங்கண்ணாச்சாரியாரின் கைகளைபற்றி அழைத்துச் சென்று வேறோர் புதிய இருக்கையில் அமரச் செய்து அவருடைய திருச் செவிகளில் பிரணவ மந்திரத்தை ஓதி ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் என்ற சிறப்புப் பெயரை அனைவரது முன்னிலையிலும் சூட்டி தாழ்த்தியருளினர்

அங்கு குழுமியிருந்த அனைவரும் மகிழ்ச்சி பெருக் கால் கையொலியெழுப்பி ஆரவாரித்ததோடு மட்டுமல் லாமல், "ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் நீடுழி வாழ்க வென்று வாழ்த்தினர். பின் ஒருவர்பின் ஒருவராக

அரசர்கள் முதல் அனைவரும் பற்பல வெகுமதிகளை தந்து வணக்கமும் மரியாதையும் செலுத்தி நிகழ்ச்சியை சிறப்பித்து கௌரவித்தனர்.

ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் தம் குறிக்கோள் நிறைவேறியமைக்காக மிகவும் களிப்படைந்தார். ஆனால் அதற்கு பின் அவர் அதிக நாட்கள் வாழ்ந்திருக்க வில்லை வெங்கண்ணாச்சாரியார் ஸ்ரீராகவேந்திர தீர்த்தர் என்ற பெயரில் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தரை தொடர்ந்து சன்னியாசியாகி மட அதிபதியாகி விட்ட செய்து புவனகிரிக்கு மின்னல் வேகத்தில் எட்டியது.

இச் செய்திகேட்ட சரஸ்வதி தேவியார் அதிர்ச்சிக்குள்ளானதால் அவரது உள்ளமும் உடைந்து சுக்கு நூறுகச் சிதைந்து. கணவரை பிரிந்து ஒரு நாள் கூட உயிரோடு வாழ்வதில் அர்த்தமில்லை என்று கருதிய சரஸ்வதி தேவியார் கணவனின் திருமுகத்தை தொலைவில் இருந்துகூட பார்க்க தமக்கு அனுமதி கிட்டாது என்பதை எண்ணிய போது ஏற்பட்ட வேதனை புயலை தாங்கமாட்டாதவராய் ஒரு கிணற்றில் குதித்து தம்மை மாய்த்துக்கொண்டார்.

கணவர் மீதுபற்றும் பக்தியும் அவர் நெஞ்சில் ஆழப் பதிந்திருந்தமையால் உடலை அழித்துக்கொள்ள முடிந்த சரஸ்வதி தேவியாருக்கு கணவரோடு இணைந்து வாழவேண்டும் என்ற ஆசையை விட முடியாத காரணத்தால் அவருடைய உயிர் ஒரு பேயாக மறு பிறப்பெடுத்து ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் தங்கிருந்த அறையின் வாயிலில் தோன்றி அழத்

தொடங்கியது. ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் அனைத்தையும் அரியவல்ல உயரிய ஞானத்தால் தம் அறைவாயிலில் தோன்றியழும் பேயுருவம் தம் மனைவி சரஸ்வதி தேவியே என்பதையும், அவளுக்கு ஏற்பட்ட இந்த இழிபிறவி குறித்து பெரிதும் வருந்தினர். அவளை இப்பேயுருவிலிருந்து விடுவிப்பது தான் தன் தலையாய முதற்கடமை என்று உணர்ந்ததால் அன்று முதல் மிகக் கடுமையான முறையில் ஜபம், தவம் முதலியவைகளை மேற்கொண்டு வாயு பகவானையும் மகா விஷ்ணுவையும் மனைவியை இந்த இழிந்த நிலையிலிருந்து விடுவிக்கச் செய்யுமாறு பிரார்த்தனைகள் செய்தார். இதன் பயனுக் சரஸ்வதி தேவியார் பேயுருவம் நீங்கி முக்தியை அடைந்தார். துறவியான பின்னர் இராகவேந்திரருக்கு கிட்டிய மிகப்பெரிய சாதனை என்று இந்நிகழ்ச்சியை குறிப்பிடலாம். இதனுல் ஸ்ரீ ராகவேந்திரர் ஆறுதல் கொண்டவராக பெருமூச்செறிந்தார்.

வெங்கண்ணுச்சாரியார் ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் என்ற பெயரில் துறவத்தை மேற் கொண்டுவிட்டார் என்ற செய்தி எங்கோ யாத்திரை செய்து கொண்டிருந்த ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தருடைய செவிகளில் விழுந்தது. இதையறிந்த ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தர் பொருமைக்கொண்டு வெகுண்டெழவில்லை. "தாம் குருவிடமிருந்து வெகு தொலைவில் இருந்த இச்சமையத்தில் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் நோய்வாய் பட்டிருக்கக் கூடும், திறமை மிக்க வெங்கண்ணுச்சாரியார்

மட்டுமே அவரருகில் இருந்த காரணத்தால் அவரிடம் ஆசரமத்தையும் அவருடைய பீடாதிபதி பதவியையும் கொடுக்க வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டிருக்கக்கூடும் என்று தமக்குள் கருதிக்கொண்டார். எனவே யாத்திரையை முடித்துக் கொண்டு கும்பகோணத்திற்குப் புறப்பட்டார். ஸ்ரீ யாத வேந்திர தீர்த்தர் கும்பகோணத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறார் என்கிற செய்தியை கேள்விபட்ட கணத்திலேயே ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் அணைத்து மரியாதைகளுடன் வரவேற்க வேண்டிய ஏற்பாடுகளை கவனிக்க விரைவு கொண்டார். பின் அவருடைய சீடர்களுடன் ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தரை எதிர் கொண்டழைக்க கும்பகோணம் எல்லையை அடைந்து, அவர் வந்ததும் அவருடைய திருப்பாதங்களில் விழிந்து வணங்கினர்.

ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தர் அவரை அள்ளி அணைத்து நெஞ்சாரத் தழுவியபடி "எனது சகோதரரே! உன்னை மீண்டும் இந்நிலையில் பார்த்ததில் பெரு மகிழ்ச்சியடைகிறேன்,' என்றார்.

ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் சகல மரியாதைகளுடன் ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தரை ஊர்வலமாக அழைத்துச் சென்று ஓர் உரிய பீடத்தில் அமரச் செய்தார். சிறிது நேரம் இருவரும் தமது நலன்களைப் பற்றி பேசி அளவளாவிய பின்னர், ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் ஸ்ரீ யாதவேத்திர தீர்த்தர், 'ஐயன்மீர்! நீவிர் இம்மடத்தைப் பொருத்தவரை எனினும் மூத்தவர் நம்முடைய குருவான ஸ்ரீசுதீந்திர தீர்த்தர் இப்பதவியை அலங்கரிக்க முதலில் தாங்களையே தேர்ந்தெடுத்தார். ஆயின்

அவரது இறுதி காலத்தின் போது தாங்கள் இங்கிருந்து வெகு தொலைவில் இருந்ததால் இப்பதவியை எனக்கே தர வேண்டிய நிர்பந்தம் அவருக்கு ஏற்பட்டு விட்டது அவருடைய ஆணைக்கும் நல்லெண்ணத்திற்கும் கட்டு பட்டவனாக இதனை ஏற்றுக்கொண்டேன். உண்மை கூறப் போனால் இம்மடம், இப்பதவி இம்படத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ மூல ராமரை வழிப்படும் முழு உரிமை அனைத்தும் தாங்களுக்கே உரியன. எனவே பேருளம் கொண்டு தாங்களே இவைகளை ஏற்றுக் கொண்டு என்னை இப்பெரிய சுமையிலிருந்து விடுவிப் பீர்களாக!' என்று கேட்டுக் கொண்டார்.

இச் சொற்களை கேட்ட ஸ்ரீயாதவேந்திர தீர்த்தர் மிகவும் மனம் நெகிழ்ந்து போனார். ஸ்ரீ ராகவேந்திர ரின் பெருந்தன்மையையும், தன்னலமின்மையையும் கண்டு பெரிதும் வியப்படைந்ததோடு மட்டுமல்லாமல் ஆனந்த கண்ணீருடன் ஸ்ரீ ராகவேந்திரரை நோக்கி 'என் இனிய இளவனே! நீ மிகவும் உயர்ந்தவன்; தன்னலமற்றவன்; மேன்மை மிக்கவன்; மென்மை யானவன் நம் குருவிற்கு தொடக்க நாள் முதலாக நீ செல்லமான சீடனாக விளங்கினாய்! அவர் உன்னை சரியாகவேதான் தேர்ந்தெடுத்து இப் பெரியபதவியை அளித்து அரியணையேற்றியிருக்கிறார். எனக்கு இப் பீடமோ, மடமோ அல்லது அதைசார்ந்த ஆடம்பரங்க ளோ ஏதும் வேண்டா! எனக்கு உள்ள ஒரே ஒரு ஆசை நம்மடத்திலுள்ள ஸ்ரீ மூல ராமரை தரிசிப்பது ஒன்றுதான். அன்பு கூர்ந்து தரிசிக்க மட்டும் எனக்கு அனுமதி யளிப்பாயானால் இறைவனை கண்குளிர

கண்டு வணங்கி இவ்விடம் விட்டு அகல்வேன்' என்று வேண்டிக் கொண்டார்.

மறு நாள் ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தர் வழிபடுவதற்கான எல்லா ஏற்பாடுகளை முன் னின்று செய்து கொடுத்தார்.

ஸ்ரீயாதவேந்திர தீர்த்தர் மிகுந்த மன ஒருமைபாட்டு டன் மனம், மொழி, மெய் ஆகியவைகளை ஸ்ரீ மூலராமரை வணங்கி மிகவும் மகிழ்ச்சியும் மன திருப்தி அடைந்தவராக ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தரிடம் விடைப் பெற்றுக் கொண்டு மீண்டும் யாத்திரையை தொடர்ந்தார்.

ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தர் அதற்குபின் வாழ்நாள் முழுவதையும் யாத்திரையிலேயே கழித்து இறுதியாக முத்திரமலே என்னும் சிற்றூரில் இறைவனடி சேர்ந்தார் அவ்வூரில் அவருடைய பிருந்தாவனத்தை (சமாதி) இன்றும் காணலாம்.

# 6. யாத்திரை

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் தன்னுடைய மடத்தை சேர்ந்த பரிவாரங்களுடன் கும்பகோணத்திலிருந்து தல யாத்திரை மேற்கொண்டு இமயம் முதல் குமரி வரை கிட்டத்தட்ட எல்லா புண்ணியத்தலங்களுக்கு சென்று ஆண்டவனை தரிசித்ததோடல்லாமல் எல்லா புண்ணிய நதிகளிலும் புனித நீராடினார். அவர் யாத்திரை மேற்கொன்ட சமயங்களில் எங்கெல்லாம்சென்று தங்குகிருரோ அங்கெல்லாம் மக்களை கூட்டி த்வைத்தியம் பற்றி விளக்கிக் கூறி தன் வயப் படுத்தி நல்வழி காட்டி, த்வைத்தியக் கொள்கைகளை பரப்புவது வழக்கம்.

யாத்திரையில்லாத சமயங்களில் நேரத்தை வீணுக்காமல் சன்னியாசிகளுடைய கடமைகளை தவராது செய்வதிலும் நோன்பு இருப்பதிலுமாக ஒழுகி வந்தார் மாதவ சித்தாந்தங்கள் பற்றி தொடர்ந்து பல நூல்கள் எழுதினர். சன்னியாச வழ்க்கையை மேற்கொண்ட பிறகு ஐம்பத்தேழு ஆண்டுகள் மடத்தின் பீடாதிபதி யாக இருந்தார். அவர் எழுதிய புத்தகங்களின் எண்ணிக்கையும் ஐம்பத்தேழு என்று சொல்லப்படுகின்றது. அவற்றில் சிலவே இப்போது கிடைத்திருக்கிறது

ஸ்ரீராகவேந்திர தீர்த்தருடயை ஆத்மீக செல்வாக்காலும் அருளாசி வழங்கும் சக்தியாலும் அணவருடைய

உள்ளத்தையும் வென்று விடுவதால் பலரும் அவரிடம் வலிய சென்று அரும் கபரும் பரிசு பொருட்களாக நிலம், பணம், வெள்ளி, தங்கம் முதலியவைகளை கொடுத்துதவினர். அவர் பெற்ற அன்பளிப்புகலெல்லாம் மடத்தினுடைய முன்னேற்றத்திற்காக மடத்தினுடைய பெயருக்காக வாங்கினரே தவிர சொந்த பெயரில் அல்லவே அல்ல !

நிற்க, அவர் கும்பகோணத்தை விட்டு புறப்பட்டதும் நேராக பில்லாபுரி என்ற நகரில் தான் வந்து தங்கினர். அங்கே பைரவ பட்டர், வீரபத்திரபட்டர் என்ற இரண்டு சைவ பண்டிதர்கள் வாழ்ந்து வந்தனர் அவர்கள் மகானிடம் வாதம் செய்து வெற்றிபெறும்படி சவால் விட்டனர். வாதத்தின் முடிவில் விவாதத்தில் தோற்று விட்டால், அவர்கள் இதுவரை பல இடங்களில் பலரிடம் வாதிட்டு பெற்ற சன்மானங்களையும், சொத்துக்களையும் மகானிடம் சமர்பித்து விடுவதாகவும் பந்தயம் கட்டினர். ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் அதற்கு ஒப்புக்கொண்டு பெரிய கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தார்.

சன்னியாசம் மேற்கொண்டபிறகு அவர் எதிர் கொண்ட முதல் தாக்குதல் இதுதான். குழுமியிருந்த கூட்டத்தினர் அனைவரும் மிகுந்த உற்சாகத்தோடு ஆவலோடும் இருந்தனர் எதிராளிகள் மிகவும் திறமை மிக்கவர்களாதலால் கடுமையான முறையில் வாதம் நடந்தது. பல நாட்கள் தொடர்ந்து நடந்த விவாதத்தின்

முடிவில் ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் அந்த இரண்டு அத்வைத பண்டிதர்கள் இருவரையும் தோற்கடித்து வெற்றி கண்டார். பின்னர் அத்வைத பண்டிதர்கள் இருவரும் அவர்களுக்கிருந்த பில்லாபுரி மானியங்களை வலிய மகானிடம் மடத்திற்குக் கொடுத்தனர். இந் நிகழ்ச்சி மக்களிடம் பெரும் பரபரப்பை ஏற்படுத்திய தோடல்லாமல் ஸ்ரீ ராகவேந்திரர் மீது பக்தியும் ஏற்பட் டதால் அவருடைய புகழ் பல இடங்களிலும் பரவலாயிற்று.

பில்லாபுரத்திலிருந்து ஸ்ரீராகவேந்திர தீர்த்தர் அவ ருடைய பரிவாரங்களுடன் ஆருணாச்சலப் பிரதேசம் சங்கமுகி, மதுரை வேதாச்சலம், ஸ்ரீரங்கம், நாமகிரி முதலிய இடங்களுக்கெல்லாம் சென்று கடைசியாக இந்தியாவின் தென் முனையாகிய கன்னியாகுமரி வந் தடைந்தார், அங்கு சில காலம் தங்கி கிடும் நோன்பு இருந்ததாகக் கூறப்படுகிறது.

பிறகு கன்னியா குமரியிலிருந்து மேற்குக் கடற் கரையோரமாகவே வடக்கு நோக்கி பயணத்தை தொடர்ந்து ஸ்ரீ மாதவர் அவதரித்த உடுப்பி வந்த டைந்தார் அங்கு ஓராண்டு காலம் தங்கி, தினமும் ஸ்ரீ மாதவ சரோவரத்தில் ஸ்நானம் செய்து, பின் ஸ்ரீ கிருஷ்ணரை வழிபாடு செய்ததும் அனந்தேஷ்வர கோயிலுக்கு வருவது வழக்கமாக கொண்டிருந்தார்.

ஸ்ரீமாதவர் உடுப்பியில் இருந்த போது அனந் தேஷ்வர் கோயிலின் உட்பிரவாகத்தில் அமர்ந்து

சமய கொள்கைகள் பற்றி பாடங்கள் நடத்துவார். அவர் அமர்ந்த இடத்திற்கு நேர் எதிராக ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரும் அமர்ந்துக் கொண்டு தினமும் மாதவ சித்தாந்தங்களை சில மணி நேரங்கள் விளக்கமாக பிரச்சாரம் செய்வார். அதன் பிறகு எழுத தொடங்குவார். இங்கு இருந்தபோதுதான் சந்திரிகா, தந்திர தீபிகா. போன்ற மகான் வியாசராஜருடைய புத்தகங்களுக்கு முழு விளக்க உரை எழுதியதாகக் கூறப்படுகிறது. அவருடைய அந்த விளக்க உரை களுக்கு முறையே பிரகாசம் நியவ முக்தவல்லி என்று அழைக்கபபடுகிறது.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் உடுப்பியில் இருந்த போதுதான் தன் சொந்த செலவில் நிலம் வாங்கி ஒரு மடத்தையும் கட்டுவித்தார். எட்டு மதங்களின் சன்னி யாசிகளையும் ஒன்றிணைத்து ஸ்ரீ மாதவராம் அமைக்கப் பட்ட இயக்கத்தை ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் தன்னு டைய செல்வாக்கை கொண்டு நன்கு வலிமையுடைய தாக்கி பலரும் பயபக்தியோடு போற்றி வழிபடும்படி செய்தார். இதனுல் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரை பல ரும் ஸ்ரீவதிராஜ சன்யாசிக்கு அடுத்தபடியாக உயர்ந்த ஸ்தானத்தில் வைத்துப் போற்றினர்.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரின் ஜெபம், தவம் ஆண்டவனை வழிபடும் முறை, பரிசுத்தமான அவரு டைய வாழ்க்கை அவர் பெற்றிருந்த கடவுள் தன்மை த்வைத்த தத்துவங்களை விவாதிக்கும் ஆற்றல்

உலகில் உள்ளவர்களை காட்டிலும் திறமை அதிகமாக பெற்றிருந்து பல பயனுள்ள புத்தகங்களை எழுதியமை போன்ற காரணங்களால் மகானிடம் பலரும் அவர்களாகவே பணிவுடன் தங்களை அர்பணித்துக் கொண்டனர்.

பிருந்தாவனத்தில் ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் அமர்ந்து விட்ட பிறகு கூட உடுப்பி மடம் அவருக்கு மரியாதை செலுத்தும் பொருட்டு உணவு உண்ணும் முன் அவர் நினைவாக சுலோகங்களை முணுமுணுப்பதை ஐதீகமுறை இன்றும் நடைமுறையில் இருந்து வருகிறது.

மகான் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் உடுப்பியிலிருந்து மைசூருக்கு வந்தார். அங்கு எல்லா புண்ணிய தலங்களுக்கும் சென்று புண்ணிய நீராடினார் பின் ஹரிகர் வந்து சில காலம் தங்கினார். அங்கு தினமும் ஸ்ரீ ஹரிகரேஸ்வரரை முழு மனதோடு வழிப்பட்டார் அங்கு பலரும் அறிந்த தீர்க்காச்சரரியாரை (இவருடைய பிருந்தாவனம் கோல்பர்கா என்ற இடத்திற்கு அருகாமையில் உள்ள மளகேடா என்ற ஒரு கிராமத்தில் உள்ளது) பக்திபரவசத்தோடு தரிசித்தார். சிலகாலம் அங்கியே தங்கியிருந்து அனுபாஷியம் பற்றி விளக்க உரை எழுதினார்.

தென் பகுதியில் தீர்த்தயாத்திரையை முடித்துக் கொண்டு வடக்கு நோக்கி பயணம் மேற்கொண்டார்.

முதலில் காசி, கயா, பிரயகா போன்ற இடங்களுக்கு பின் நேராக பாதரிக்ஷாரம் சென்ருர். அங்கு ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மாதவாச்சாரிடமும், சகே பதரயன் என்றழைக்கப் படும் ஞானி வேதவியாசரிடமும் தரிசனம் பெற்ருர் இருவரையும் ஆழ்ந்த பக்திப் பரவசத்தோடு தொழுது அவர்களுடைய அருளாசிகளையும் பெற்ருர்.

பிறகு தென் திசையிலுள்ள அயோத்திக்கு வந்து பின் பிருந்தாவனம் சென்றடைந்தார். பிருந்தாவனத் லிருந்து கோலாப்பூர் சென்று மகாலட்சுமியை வணங் கிய பின் பண்டரிபுரம் சென்றடைந்தார். அங்கு எழுந் தருளிருக்கும் ஸ்ரீ விட்டல், ஸ்ரீ ருக்மாயி எனகிற தெய் வங்களை தன்னை மறந்து ஆனந்த களிப்புடன் தொழு தார்.

பிறகு பண்டரிபூரிலிருந்து திருப்பதிக்கு யாத்தி ரையை தொடர்ந்தார். வரும் வழியில் இப்போது ஆதோணி என்றழைக்கப்படும் அத்வைணி என்ற இடத்தில் தங்கினர். அவ்விடத்தின் அமைப்பையும் அமைதியான சூழ்நிலையையும் கண்ட மாத்திரத்தி லேயே மந்திரத்தால் கட்டுண்டவர் போலானர். அவர் சர்வ ஞானமும் கொண்டராதலால் அவ்விடத் தென் மேற்கு பகுதி ஒரு புண்ணியதலம் என்பதை உணர்ந்து மறு முறை அவ்விடம் வந்து பார்க்க முடி வும் செய்தார் அப்போதுதான், அத்வைணிக்கு அரு காமையிலிருந்து ஒரு சிறிய கிராமத்திலிருந்து ஒரு சுறுவன் திடீரென்று வந்து மகானின் அருளாசியை யும் பெற்ருன்.

கண்டநதி என்ற சிறிய ஊர் அத்வைணியிகு அருகாமையில் உள்ளது அங்கே வெங்கண்ணு என்ற அனுதை சிறுவன் தாய்மாமன் வீட்டில் வாழ்ந்து வந்தான். அவனுடைய மாமன் ஒரு விவசாயி ஆதலால் காளைகளும், எருமைகளும் பல பசுக்களும் வளர்த்து வந்தார். அவனுடைய அத்தை அவன் மீது மிகுந்த இரக்கம் கொண்டு உணவு, உடை, இருப்பிடம் அனைத்தும் தந்து மந்தை மேய்ப்பவனுக வீட்டிலே வைத்துக்கொண்டார்கள்.

ஆண்டுகள் பல உருண்டோடின. சிறுவன் வெங்கண்ணு நன்கு வளர்ந்து பெரியவனுனபோது தான் அக்கிரமத்தில் மந்தை மேய்ப்பவர்களுள் அவன் மட்டும் பிராமணன் என்பதை உணர்ந்தான். பொதுவாக எல்லா பிராமணர்களும் உபநயனம் முடிந்தபிறகு நேரே கல்வி கற்பதற்காக குருகுலம் செல்வது வழக்கம். ஆனுல் பல ஆண்டுகளுக்கு முன்பேவெங்கண்ணு உபநயனம் பெற்றிருந்தும் குருகுல கல்விக்கு போக அவனுக்கு வழியில்லாமல் போயிற்று. அவனுக்கு கல்வி கற்க வேண்டும் என்கிற ஆசை மிகையாக இருந்தும் அவனுடைய அத்தையார் இந்த மாடுகளை மேய்ப்பவர்கள் யார்? என்று கேட்டு அதட்டி மிரட்டியதன் காரணமாக அவன் ஆசை நிராசை யாகிவிட்டது. அவன் அவ்வேலையை செய்ய மறுத்தால் உண்ண உணவு இருக்க இடம், அணிய ஆடை எதுவுமே கிடைக்காமல் போய்விடுமே! இதன் காரணமாக அவன் மிகவும் வேதனை பட்டான். பிராமணுக

பிறந்திருநதும் படிக்க வழியில்லேயே என்று வேதனைப் பட்டு பல சமயங்களில் அழுததுமுண்டு, இந்த ஏக்கம் அவனது இதயத்தை புண்ணாக்கிக் கொண்டேயிருந் தது. இருந்தாலும் பசி போக்க உணவு கிடைத்ததன் காரணமாக மனதை தேற்றிக்கொண்டான்.

தினமும் காலேயில் பசுக்களேயும், எருதுகளேயும் மேய்ப்பதற்காக ஆற்றங்கரைக்கு ஓட்டிச்செல்வான் மாலேயில் அவைகளே திரும்ப ஓட்டிவந்து தொழுவத் தில் கட்டிவிடுவான் இதுதான் அவனுடைய அன்ருட வேலே'

ஒரு நாள் எப்போதும் போல மாட்டு மந்தையை மேய்ப்பதற்காக புல்மைதானம் ஓட்டிச்சென்ருன். அங்கு அவனுடன் மந்தை மேய்க்கும் சிறுவர்களுடன் ஓடியாடி விளையாடியபின் உச்சி வேளையின் போது தன்னுடன கொண்டிவந்திருந்த உணவை உண்டு முடித்துவிட்டு இளேப்பாறுதற் பொருட்டு ஒரு பெரிய மரத்தின் கீழ்படுத்தான் உண்ட களைப்பு உறக்கம் அவனே ஆட்கொண்டு விட்டது. ஓரிரண்டு மணி நேரம் கழித்த போது மரத்தின் நிழல் விளகிச் சென் றதும் சூரியனின் கதிர்கள் அவனது முகந்தில் படர்ந் தது, அம்மரத்தினடியில் ஒரு பெரிய நாகம் வாழ்ந்து வந்தது அந்த நாகம் வெங்கண்ணுவின் நிலேயை கண்டதும் ஊர்ந்து வந்து படமெடுத்து, வெங்கண்ணு வின் முகத்தில் வெயில் படாமல் மறைத்து நிழல் படச் செய்தது.

வெங்கண்ணுவுடன் மந்தைமேய்க்கும் சிறுவர்கள் இதனே கண்டதும் பயத்தால் கிராமத்தை நோக்கி

ஓடிச்சென்று கண்டதை அவன் மாமாவிடம் கூறினர் அவர்களுடைய கூற்றை கேட்ட வெங்கண்ணுவின் மாமாவும் அத்தையும் வெங்கண்ணு பாம்பு கடித்து இறந்து விட்டிருக்கக்கூடுமென யூகித்து இருவரும் அம்ரத்தடி நோக்கி ஓடிவந்து பார்த்தனர். வெங்கண்ணுவோ எதுவுமே தெரியாதவன் போல உறக்கம் கலைந்து எழுந்துக்கொண்டிருந்தான்.

வெங்கண்ணு உயிருடன் இருப்பதைக் கண்டதும் அவனுடைய அத்தையும் மாமவும் சந்தோஷத்தால் அவனை கட்டி தழுவி கொண்டதோடல்லாமல் நடந்ததை சுருங்கக் கூறி இனிமேல் அம்மரத்தடியில் படுக்க வேண்டாமென்று அறிவுரை கூறினர்.

இந்நிகழ்ச்சி அக்கிராமம் முழுவதும் பரவியது. அனைவரும் வெங்கண்ணு ஆண்டவனின் அருளாசி பெற்றவன் என்றும் எதிர்காலத்தில் பெரியவனாகத் திகழ்வான் என்றும் கூறினர். அன்று முதல் அவனுடன் மந்தை மேய்க்கும் நண்பர்கள் மரியாதை தந்து பக்தியோடு வணங்கவும் செய்தனர். ஆனல் வெங்கண்ணுவிற்கு, படிப்பு இல்லாமல் எப்படி பெரியவனாக முடியும் ? என்று ஐயம் எழுந்ததால் அவனுடைய எதிர்காலம் அவனுக்கு பெரும் பிரச்சனையாகத் தோன்றியது.

ஒருநாள் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் என்கிற ஒரு பிராமண சன்னியாசி அத்வைனிக்கு வந்திருப்பதாக கேள்விபட்டான். அவர் அருளாசி வழங்குவதிலும் சபிப்பதிலும் அளவிற்கதிகமான சக்தி கொண்டவர் என்றும் கேள்வி பட்டிருந்தான் எனவே அவரிடம் அருள் பெற தீர்மானித்துக்கொண்டான் வெங்கண்ணு

அவ்வாறு தீர்மானித்த மறு நாளே, வெங்கண்ணு கண்ட நதியிலிருந்து அத்வைணிக்கு கால் நடையாக புறப்பட்டுவிட்டான் மாலையில் மகானை சந்திப்பதற்காக மாலையில் யாரும் எதிர்பாராத விதமாக ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரின் உள்ளறையில் புகுந்துஅவர் காலடியில் விழுந்து வணங்கி பணிவுடன் கைகளை கட்டியபடி எழுந்து அவர் முன் நின்றான் வெங்கண்ணு.

மகான் அச்சிறுவனை கண்ட மாத்திரத்தில் அதிசியத்தும் போனார். அவனுக்கு நல்ல எதிர் காலம் இருப்பதை அந்த கனிவான முகத்தில் கண்டார். பின் கனிவாக 'நன்று சிறுவனே .... நீ யாரென்று யாம் அறிந்து கொள்ளலாமா ? என்று வினவினார்.

'வணக்கத்திற்குரிய சுவாமிகளே ! .... நான் ஒரு கிராமத்து சிறுவன். என் பெயர் வெங்கண்ணு, எனக்கு தந்தையும் தாயும் இல்லை நான் பிராமண குலந்தில் பிறந்து உபநயனம் பெற்றிருந்தும் கல்வி கற்கும் வாய்ப்பை பெறாதவன், எனக்கு கல்வி கற்க வேண்டுமென்று தணியாத ஆசையாயிருக்கிறது. தயவு செய்து எனக்கு கருணைகாட்டுவீர்களானால்...........'

மகான் அவ்வறியாச் சிறுவனின் கூற்றைக் கேட்டு புன்னகைத்து, நன்று என் குழந்தாய், நீ எப்போதெல்லாம் கஷ்டத்திலுருக்கிறாயோ அல்லது குழப்பமான சிக்கலில் உழன்று தவிக்கின்றாயோ அப்போது என் பெயரை முணுமுணுப்பாயானால் உடனடியாக கஷ்டத்திலிருந்து விடுபடுவாய், என்று கூறி அருளாசி வழங்கினார். அதோடு புனிதப்படித்தப்பட்ட அரிசியில் கொஞ்சம் அவனிடம் தந்தார் வெங்கண்ணு அதைப்

பெற்று நம்பிக்கையோடும் பய பக்தியோடும் தலையில் போட்டுக் கொண்டு கிராமத்திற்கு திரும்பினான்.

அந்நிகழ்ச்சி நடந்த மறுநாள் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் யாத்திரை தொடர்ந்து திருப்பதி சென்றடைந்தார். ஸ்ரீனிவாச பெருமானிடம் தரிசனம் பெற்றார். தெய்வ பக்தியும், சுத்தமும், அமைதியும் நிறைந்த அவ்விடத்தைக் கண்டு பேரானந்தம் கொண்டார். அங்கு சில காலம் தங்கி மகிழ்ச்சியோடும் திருப்தியோடும் ஆண்டவனை வழிப்பட்டார். திருப்பதியில் அவருடைய சொந்த செலவில் மடம் ஒன்றையும்கட்டுவித்தார் பின் அங்கிருந்து கலஹஸ்தி, காஞ்சி போன்ற இடங்களுக்குச் சென்றார். அதோடு இந்தியாவின் கிழக்கு பகுதியில் உள்ள எல்லா புன்னியத் தலங்களுக்கும் சென்றார் கடைசியாக அவருடைய சொந்த இடமான கும்பகோணம் வந்து சில ஆண்டுகள் அங்கேயே தங்கியிருந்தார்.

அவர் அங்கு தங்கியதன் நோக்கம் அவர் எதைபற்றியெல்லாம் எழுத துடித்தாரோ அதை பற்றி எழுதுவதற்காகத்தான். மொத்தமாக மகான் ஐம்பத்தெட்டு புத்தகங்கள் எழுதியதாக கூறப்படுகிறது. இன்னும் சிலர் அவர் எழுதிய புத்தகங்கள் நாற்பத்தி நான்கு என்று கூறுகின்றனர். அவைகளில் தற்போது இருபத்திமூன்று புத்தகங்களே கிடைத்துள்ளன. அவற்றில் சிலவே அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளன. இன்னும் பல மந்திராலய மடத்தில் உள்ள தஸ்தாவேஜுக்கள் வைக்கப்பட்டுள்ள அறையில் அப்படியே இன்னும் இருக்கின்றன.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவருடைய முயற்சியால் எழுதப்பட்ட புத்தகங்களில் தற்போது கிடைக்க கூடியவைகள் பின் வருமாறு.

1. பரிமளம். இது அவர் மணவனுக இருந்த போது எழுதியமையாகும். ஆனுல் அவர் சன்னியாசம் மேற்கொண்ட பிறகு மீண்டும் முழுமையாகவும் விளக்கமாகவும் எழுதுயதாக கூறப்படுகிறது.

2. பிரகாசம், 3. தத்துவமஞ்சரி, 4. கீதா விவரத்தி, 5. சர்வ சமர்பண கதயம், 6. பாவ தீபிகம், 7. தாஷ்பிரகன்ன திப்பனே, 8. தாஷ் உம நீஷ கந்தார்த்தம், 9. மந்தரர்த்த மஞ்சரி, 10.பீத போதனி, 11. வதவளி திப்பனே, 12. பிரத சங் கல்ப கதயம், 13. பருஷ சூக்த வியாக்கியனம், 14, தர்க்க தாண்டவ திப்பனே, 15. அம்பரன்ஸ் சூக்த விவரத்தி, 16. இரனிய கர்ப சூக்த வியாக் கியானம், 17. தியவ முக்தவளி, 18. தந்திர தீபிகம், 19. பிரமண பததி, 20. ராமகிருஷ்ண சரித்திர மஞ்சரி, 21. பாவ சங்கரகம், 22. பக்த சங்கரஹ மீமம்சம், 23. வேத த்ரயவிவரத்தி.

இதோடு மட்டுமல்லாமல் நான்கு வேதங்களை பற்றி முழுமையான விளக்கமாக எழுதியதாகவும்' அவைகள் திருடப்பட்டு எடுத்து செல்லப்பட்டு விட்ட தாகவும் கூறப்படுகிறது. ஆனுல் அது அயல் நாட்டில் இப்போது இருக்கிறது.

# 7. அற்புதங்கள்

பொதுவாக சாதுக்கள், சன்னியாசிகள், முனிவர்கள், மக்கள் வழி நடத்த சீடர்களாக மாறவேண்டும் என்பதற்காக பல அற்புதங்கள் பலரும் அதிசயிக்கும் படியாக இருக்கலாம். அல்லது துன்பங்களால் அவதியுரும் மக்களுடைய துன்பங்கள் போக்கி அமைதியான வாழ்வை ஏற்படுத்துவதாக இருக்கலாம். அல்லது அவர்கள் விரும்புவதை விரைவில் கிடைக்ச் செய்வதாகஇருக்லாம்.இவைகளனைத்தைதும் அவர்களிடைய அருளாசியினுல் நிகழ்பவைகளாகும்.

சாதுக்கள், சன்ன்யாசிகள், முனிவர்கள் இவர்களில் இருவகையினர் உள்ளனர். ஒரு வகையினர் தங்களுடைய சுயநலன் கருதியே அற்புதங்களை நிகழ்த்துவர். மற்றொரு வகையினர் மக்களின் நலம் கருதியும் சமய நோக்கம் கொண்டும் அற்புதங்களை நிகழ்த்துவர். முதல் வகையினைச் சார்ந்த சாதுக்களும், சன்னியாசிகளும் முனிவர்களும் சூன்யம் மெஸ்மரிசம் (மயக்கி தன்வயப்படுத்தல்) போன்ற முறைகளால் சைத்தான்களால் தூண்டி விடப்பட்ட கெட்ட நோக்கங்கள் கொண்டு, மக்கள் புரிந்து கொள்ள முடியாத முறையில் அறியாத மக்களிடம் அற்புதங்களை நிகழ்த்தி அவர்களை பெரியர்களாகவும், பூஜிக்கத்தக்கவர்களாகவும் நம்பும்படி செய்து பலரை அவர்களது சீடர்களாக மாற்றுவர்.

மற்இருரு வகையை சார்ந்தவர்கள் மேலே குறிப் பிடப்பட்ட தீய கலைகள் பற்றி ஏதும்மறியாதவர்கள் புண்ணியங்களை சேர்ப்பதற்காக அவாகள் உலகில் துன்பப் படுபவர்களுக்கு அருளாசி வழங்கி மகிழ்ச்சி யை கொடுப்பவர்கள் உண்மையான புண்ணியவான் கள் அவர்களுடைய பக்தர்களுக்கும், சீடர்களுக்கும் அவர்கள் சேமித்த புண்ணியங்களை தந்து உலக துன்பங்களிலிருந்தும் விடுபட எந்தவித கைமாறும் எதிர்பார்க்காது அருளாசி வழங்கி அவர்களை சம யவழியில் நடத்தி காப்பதுவே கடமையாகக் கொண் டவர்கள்.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவர்களும் இத்த கைய வகையை சேர்ந்தவர்களுள் ஒருவராவர், அவரு டைய பக்தர்களுக்கு ஆசி வழங்குவதன் மூலம் கடவு ளின் சக்தியை சாதித்துக் காட்டியவர். அவர் மக்களி னூடே பலரும் காணும்படி வாழ்ந்த போதும், பிருந்தா வனத்தில் நுழைந்த பிறகும் கணக்கில்லா பக்தர்க ளுக்கு அருளாசி வழங்கியிருக்கிறார். ஏன்? இன்னமும் பல ஆண்டுகளுக்கு அருளாசி வழங்கிக் கொண்டி ருப்பார்.

மனித வரலாற்றில் இதுவரை இரண்டே சன்னி யாசிகள் தான் வாழ்ந்தது போதும், உயிருடன் பிருந் தாவனத்தில் நுழைந்த பிறகும் பல்வகைப்பட்ட துக் கங்களிலிருந்து அவர்களிடைய பக்தர்களை விடுவித்த வாறு இன்றும் வாழ்ந்து வருகின்றனர். முதலாமவர் ஜோதி மடத்தை சேர்ந்த ஸ்ரீ வதிராஜ தீர்த்தர் ஆவார் உடுப்பியில் உள்ள எட்டு மடங்களில் ஒன்று

ஜோதி மடம். அவருடைய பிருந்தாவனம் கார்வார் மாவட்டந்தில் உள்ள சிர்ஸி உன்ற இடத்திலிருந்து பதிமூன்று மையில் தொலைவில் உள்ள சோந்தாஎன்ற சிறிய கிராமத்தில் உள்ளது,

அம் மகான் சமஸ்கிருதத்தில் மிகுந்த தேற்சி பெற்றவர் கன்னடத்தில் பிறவிக் கவிஞரும் கூட. உயர்ந்த என்றும் நிலைத்திருக்கும்படியான நல்ல தெளிவான பல புத்தகங்களை சமஸ்கிருதத்தில் எழுதியுள்ளார் நூற்றுக் கணக்கான பாடல்களை கன்னடத்தில் இயற்றியுள்ளார். இவர் ஸ்ரீமூல வாயுவின் நான்காவது அவதாரமாகும்.

அடுத்த கல்லப யுகத்தில் இவர் ஸ்ரீ வாயுவின் சிம்மாசனத்தில் அமர்ந்து கொலுவிருப்பார். 'ருக்மிணேஷவிஜயம்', என்ற அவரது புத்தகத்தில் அவர்குறிப்பிட்டுள்ளதாவது என்ன வென்றால், துவாபர யுகத்தில் குண்டினபரத்திலிருந்த ருக்மணி தேவிடமிருந்து துவாரகையில் இருந்த ஸ்ரீ கிருஷ்ணனுக்கு சில மணி நேரத்தில் கடிதத்தை அவர் எடுத்துச் சென்று கொடுத்தாராம் இந்த வதிராஜ தீர்த்தர் இன்றும் அவருடைய பிருந்தாவனத்தில் வாழ்ந்து வருகிறார். அவர் பிருந்வாவனத்தில் நுழைந்த பிறகு அவர் மீது தீவிர பக்தி கொண்ட சீடர்களுக்கு பல ஆண்டுகள் இடை வேளைக்கு பிறகு இரு முறை கட்சி காட்சியளிப்பார். அவருடைய பக்தர்களுக்கு அருளாசி வழங்குவதற் பொருட்டே அவர் பல்லாண்டுகள் அங்கு வாழ்ந்து கொண்டிருப்பதாக உறுதியாக கூறப்படுகிறது.

அடுத்ததாக, இன்றும் உயிருடன் வாழ்ந்தபடி அருளாசி வழங்கிக் கொணடிருக்கும் சன்னியாசி ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தராவார். அவர் பிருந்தாவனத்தில்

இருப்பதே அவருடைய பக்தர்களின் வேதனைகளையும் துன்பங்களையும் நீக்கியருளுவதற்காகத்தான். இதுவும் சாதாரண மக்களுக்கு அவர் செய்யும் அற்புதங்களில் ஒன்றெனலாம்.

இவ்விரு சன்னியாசிகளை தவிர வேறு எந்த சன்னியாசிகளும் சாதுக்களும், முனிவர்களும் வேதனைப் பட்டிக்கொண்டிருக்கிற மக்களை துன்பங்களிலிருந்து விடுவித்து அருளியதாகக் கூற முடியாது. ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் ஸ்ரீ மூல ராமரின் தீவிர பக்தராவர். அவர் இந்த அவதாரத்தை எடுத்ததின் நோக்கமே அவருடைய அனுஷ்ட புண்ணியங்களை பலருக்கும் கொடுத்தருளுவதற்காத்தான். அவரிடம் உள்ள அனுஷ்ட புண்ணியங்கள் அனைத்தும் தீர்வதற்கு அவருக்கு எழுநூறு ஆண்டுகள் தேவைப் படுகின்றன ஆகவே அவ்வளவு நீண்டகாலம் வரை அவர் பிருந்தாவனத்தில் தங்கியிருப்பார் என்பது உறுதி

நன்று, கதையைதொடர்வோமாக. ஸ்ரீஇராகவேந்திர தீர்த்தர் கும்பகோணத்தில் தங்கியிருந்த அந்த சில ஆண்டுகளில் அவர் எழுத நினைத்ததனைத்தையும் எழுதி முடித்தார். அப்போது தஞ்சை மன்னர் ஸ்ரீ ரகுநாத ராயர் இறந்து விட்டதால் அவருடைய வழித் தோன்றல்கள் ஆட்சி நடத்திவந்தனர். அவர்கள் மிகவும் பலவீனமாக இருந்தமையால் அடிக்கடி இந்துக்களுக்கும், முகமதியர்களுக்கும் தொடர்ந்து போர்கள் நிகழ்ந்த வண்ணம் இருந்தன. அதுமட்டுமல்ல, தக்காணத்திலிருந்து மராட்டிய மன்னரான

சத்ரபதி சிவாஜி அவருடைய வெற்றியை நிலை நாட்டு தற் பொருட்டு தென் பகுதி நோக்கி விஜயம் செய்தார் இதனால் நாடு அமைதியிழந்திருந்தது சமய நிலையங் களும் இந்து மடங்களும் அபாயத்தில் சிக்கி தவித்தது ஆகவே ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் வட பகுதிக்குச் சென்று எங்கேனும் நிலையாக தங்கிவிட எண்ணி கும்பகோணத்தை விட்டு நீங்க தீர்மானித்தார். அப் போது அவருக்கு அத்வைணியையும் அதனை சார்ந்த பகுதிகளையும் பார்க்க வேண்டும் என்ற யோசனை தோன்றியது.

அந்த சமயத்தில் தான் அத்வைணியில் விஜய நகர பேரரசு வீழ்ச்சியுற்று முகமதியர்களுடைய ஆட்சி உருவாகத் தொடங்கியது அதனை சார்ந்த பகுதி யை நான்கு முகமதிய அரசர்கள் ஆளத்தொடங்கினர் கோல் கொண்ட அரசர் அத்வைணி, ரெய்ச்சூர், முட்கல் போன்ற இடங்களை ஒன்றுணைத்து அவரு டைய ஆட்சியின் கீழ் கொண்டுவர பெருமுயற்சிகள் எடுத்துக் கொண்டிருந்தார். இந்த முக்கியமான கோட்டைகளனைத்தும் அகமத் நகர் அரசருடைய எல்லையில் இருந்தன. இருந்தாலும் அந்த நான்கு கோட்டைகளின் உரிமையை பெற பெரும்பாடு பட்டுக் கொண்டிருந்தார்.

கோல்கொண்டா அரசர் திறமையும வலிமையும் நிறைந்த அஸதுல்லா கான் என்பவரை அந்த நான்கு கோட்டைகளுக்கும் கவர்னராக்கி பாதுகாப்பின் பொருட்டு ஒரு பெரும்படையையும் அவருக்கு கீழ்

இயங்கும் படி கொடுத்திருந்தார். அஸதுல்லா கான் அந்த கோட்டைகளையும் அதனைச் சார்ந்த பகுதி களையும் அரசேபாதுஷா போலசகல உரிமையுடனும் அதிகாரத்தினுடனும் ஆட்சி செலுத்தினர்.

ஒரு முறை அகமது நகர் படைகள் திடீரென்று அஸதுல்லா கானின் எல்லைக்குள் புகுந்தது இதனல் அஸதுல்லகான் அவருடைய பெரும் படைகளை அனுப்பி அகமதுநகர் படைகளை அடித்துவிரட்டும்படி கட்டளையிட்டார். அதோடு மட்டுமல்லாமல் அவரது படைகளுக்கு இன்னும் பலம் வேண்டி அவரே பல இடங்களுக்குச் சென்று போருக்குத் தேவையான ஆயுதங்கள், பொருள்கள் பணம் முதலியவைகளையும் படைவீரர்களையும் திரட்டினர். அவருடைய தலைநக ரான அத்வைனியை விட்டு முரசுகள் முழுங்க பேர ரசர் பாதுஷா போல பட்டத்து யானைமீது அமர்ந்துக் கொண்டு அவருடைய ஆலோசகர்களும் அவரை சர்ந்தவர்களும் பின் தொடர பல நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் சென்றுர் அவர் சென்ற இடங்களி லெல்லாம் அவருக்கு அளிக்கப்பட்ட மனம் கனிந்து வரவேற்ப்பை ஏற்றுக் கொண்டதும் படைகளுக்குத் தேவையான இளைஞர்களை தேர்ந்தெடுப்பது தான் அவருடைய வழக்கம்.

அத்வைணியிலிருந்து புறப்பட்டு ஊர்வலமாக தொடர்ந்து வந்தபோது கண்டநதி என்ற கிராமத்திற் கும் வந்தனர் அணைத்து இளைஞர்களும், முதியவர்க ளும் அஸதுல்லாகானுக்கு நல்வரவேற்பு அளித்தர்

பொருட்டு ஊர் எல்லையில் வந்து தயாராக நின்றுக் கொண்டிருந்தனர். முரசு முழங்க, மற்றும் ஏனைய இசைக்கருவிகள் ஒலிக்க ஆரவாரத்துடன் அஸதுல்லா கான் கண்டநதி கிராமத்தின் எல்லையை வந்தடைந்த பொது வீரனொருவன் குதிரையில் வேகமாக வந்து அஸ்துல்லா கானின் முன் இறங்கி மரியாதையுடன் பணிவான வணக்கத்தை தெரிவித்ததும் முத்திரை யிட்ட கடித உறை ஒன்றை அஸதுல்லாகானிடம் நீட்டினான்.

அஸதுல்லாகான் யானையின் மீது அமர்ந்த படியே அவ்வீரன் கொடுத்த முத்திரையிட்ட உறையை வாங்கி அவனுக்கு அருகே நின்றுக் கொண்டிருந்தவர்களை ஒரு முறை நோட்டமிட்டான். அப்பட்டத்து யானைக்கருகில் நாகரீகமான உடையணிந்த காண்போரை எளிதில் கவரக் கூடியபுத்திகூர்மையுள்ளவன் என்பதை பிறருக்கு தெரிவிக்க கூடிய அழகான பிரகாசமான கண்களுடன் கூடிய ஒரு இளைஞன் நின்று கொண்டிருந்தான். அவனை கண்ட மாத்திரத்தில் கவரப்பட்ட அஸதுல்லாகான் பக்கத்திலிருந்த பாதுகாவலர்களிடம் கூறி அவனை உயரே தூக்கும் படி கட்டளையிட்டான்.

அந்த கவர்ச்சி பொருந்திய அழகிய இளைஞன் வேறுயாருமல்ல; சில ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தரால் அருளபெற்ற வெங்கண்ணு தான் வெங்கண்ணுவை யானை மீது அஸ்துல்லாகானுக்கு பக்கத்தில் அமரச்செய்தனர். அஸதுல்லாகான் முத்தி

ரையிட்ட அந்த உறையை அவனிடம் தந்து திறந்து என்ன எழுதியிருக்கிறது என்பதை படிக்கும்படி கூறினான். அஸதுல்லாகானின் ஆணையை கேட்டதும் வெங்கண்ணா பயத்தால் நடுங்கி போனான். பயத்தால் நடுங்கியபடியே அவனுக்கு எழுத படிக்கத் தெறியாது என்றும் கூறினான் அது கேட்ட அஸதுல்லா கான் ஆத்திரம்டைந்து மிருக வெறி கொண்டு 'முட்டாளே ....நீ பிராமணன் இல்லையா ?' என்று கத்தினான், அவனுடைய பார்வையோ கொடூரமாக தோற்றமளித்தது.

"ஆமாம் பாதுஷா.... நான் பிராமணன்தான். ஆனால் பிராபணன் என்றால் நிச்சயம் எழுதப் படிக்க தெரிந்திருக்குமே ? நீ மோசக்காரன் ... பொய்யுரைக்கிறாய் ! ....ம் உறையை திறந்து படி........ இல்லையேல் உன்னை இங்கிருந்து கீழே தள்ளி என்னுடைய யானையால் மிதிக்கப்பட்டு நாசமாக்கப்படுவாய் ........

வெங்கண்ணாவிற்கு அவனுடைய முடிவுகாலம் அங்கே அப்போதே வந்து விட்டது என்றுதான் தோன்றியது. அப்போது ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தரின் நினைவு வந்தது அவனுக்கு, மனதிற்குள்ளாகவே, ஓ ....ஸ்ரீ குருதேவா ! என்னை இந்த இறப்பின் பிடியிலிருந்து காத்தருளக்கூடியவர் நீங்கள் மட்டுமே ........ என்னுடைய தெய்வமே .... ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளே !" என்று முன்முனுத்தபடி உறையை திறந்து கடிதத்தை எடுத்து பிரித்தான். அவது உடலில் அபரிமித மான சக்தி ஒன்று உருவாகுவது போன்ற உணர்

வை உணர்ந்தான். அவன் ஒரு புதிய மனிதனாக மாறியது போன்ற பிரம்மை. கடிதத்தில் எழுத பட்டிருந்த சாரிஷியன் எழுத்துக்களை அவனால் படிக்க முடிந்தது அவனையே அவனால் நம்ப முடியாத படி இருந்தது. கடிதத்தை முழுவதும் படித்து முடித்ததும் அஸதுல்லா கானிடம் அதை திருப்பித் தந்தான்.

அந்த கடிதத்தில் அஸதுல்லா கானின் படைகள் வெற்றி பெற்று விட்டது என்றும், மேலும் படைகளை அனுப்பத் தேவையில்லை என்று குறிப்பிடப்பட்டிருந்தது. அதைக் கேட்ட அஸதுல்லா கான் மிகவும் மகிழ்ச்சியடைந்து வெங்கண்ணாவுடன் அத்வைணிக்கு திரும்பத் தீர்மானித்தார்கள். எனவே வெங்கண்ணாவையும் அவர்களுடன் தொடர்ந்து அத்வைணிக்கு வரும்படி கட்டளையிட்டான். அதன் படி வெங்கண்ணா அஸதுல்லா கானின் தர்பாருக்கு வந்து சேர்ந்தார்

வெங்கண்ணா அவனுடைய அரசியல் திறமையாலும், சூச்சியாலும், தைரியத்தாலும் பிறகு அஸதுல்லா கானின் வலது கையாகவும், அந்தரங்க காரியதரிசியாகவும் விளங்கினான். இரண்டாண்டுகளுக்குப் பின் அத்வைணியின் திவானாக பதவி யேற்று 'திவான் வெங்கண்ணா,' என்று பலரும் போற்றிப் புகழும் படியாக விளங்கினான். அப்போது அழகான பெண்ணை மணம் செய்துகொண்டு பல குழந்தைகளுடன் பெரிய அரண்மனையில் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தான்.

# 8. உயிர்த் தெழ செய்தல்

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் யாத்திரை செய்த தலங்களில் அத்வைணி என்ற இடமும் ஒன்று.

சுவாமிகள் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவருடைய மட பரிபாளனத்தில் இருக்கும் அனைத்துசிடர்களுடன் கும்பகோணத்திலிருந்து மெல்ல வடதிசை நோக்கி யபணம் மேற்கொண்டார். சில நாட்களுக்குப் பிறகு அவர் கருநாடக மாநிலத்தில் தார்வாருக்கு அருகே உள்ள ஊப்ளி (HUBLI)க்கு வந்து சேர்ந்தார்.

இப்போது இருக்கும் பழைய ஊப்பளி தான் ஊபள்ளி(HOOBALLI)என்ற பெயருடன் அப்போது விளங்கியது அவ்வூர் இயற்கை வனப்பு மிக்க அழகாவும் செழுமையாகவும் விளங்கியதால் அப்பெயர் பெற்றது.

அவ்வூரிலும் அவ்வூரை சார்ந்த சுற்றுபுற பிர-தேசங்களும் கண்ணை கவரும்படியான வனப்புடன் நிகழ்ந்திருந்தது. பல சிறு சிறு ஏரிகள் வேறு அவ்வூரின் அழகுக்கு மெருகூட்டின. இப்போதுள்ள சித்தரூத மடமும் அப்போது கிருஷ்ணபூர் என்று இன்றும் அழைக்கப்படும் பகுதியை சேர்ந்திருந்தது. இந்த கிருஷ்ணபூரை சொர்க்கத்திலிருந்து பூமிக்கு இறங்கி வந்த ஒரு பகுதி என்றும் அழைப்பார்கள். நவாப் ஏற்படுத்திய சவனூர் மாநிலத்தின் ஒரு பகுதியாகத்தான் இப்போதுள்ள தார்வார் மாவாட்டம் முழுவதும் இருந்தது. (தார்வார் மாவட்ட சிறப்பிதழ்)

இந்த கிருஷ்ணபூர் கிராமத்தில் மகிழ்ச்சியாக பொழுது போக்குதற் பொருட்டு சவனூர் நவாப் அழகிய வசந்த மண்டபம் ஒன்றும் அதனை சுற்றி பல வகைப்பட்ட மரங்களும் பூச் செடிகளும் கொண்ட பெரிய தோட்டம் ஒன்றையும் அமைத்திருந்தார். தோட்டத்தின்டையே ஒரு நீச்சல் குளமும் அமைக்கப் பட்டிருந்தது. கோடையில் நவாப்பும் அவருடைய மனைவி பேகமும் வந்து தங்கும் கோடை வாழிடமாகும் அது. ஒவ்வொரு வருடமும் கோடையில் சவனூரி லிருந்து நவாப் குடும்பத்தோடு வந்து தங்கி செல்வது வழக்கம்.

ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் ஒருமுறை கிருஷ்ண பூருக்கு விஜயம் செய்த போது கடுங் கோடை காலம். அப்போது அவருடன் அவருடைய மடத்து பரிவாரங் களும் இருந்தன. அனைவரும் அந்த அழகிய தோட் டத்தை நெருங்கிக்கொண்டிருந்த சமயம் உச்ச வேளை ஆதவன் தன்னுடைய வெப்பக் கதிர்களை உதிர்த்துக் கொண்டிருந்தான். வெயில் கொடுமையை தாளமாட் டாமல் அனைவரும் ஓர் வசதியான இடம் பார்த்து தங்கிச் செல்வதென முடிவு செய்தனர். குளத்தோடு நிழல்கள் நிரம்பிய அந்த தோட்டத்தை கண்டதும் தங்கி இளைப்பாற தீர்மானித்து, ஸ்ரீ ராகவேந்திர தீர்த்த ருடன் அவருடைய கூட்டத்தார் அனைவரும் தோட் டத்திற்குள் நுழைந்தனர். அங்கிருந்த சில தோட்ட வேலைக்காரர்களும், தோட்டக்காவலாளியும் வெளிறிய பயம் கலந்த முகத்தோடு அவர்களை உற்று நோக்கி

ஞர்களே தவிர யாரும் தடுக்க முன்வர வில்லை.

ஸ்ரீ இராகவேந்திரர் ஒருபெரிய புளிய மரத்தின் அடர்ந்த நிழலில் சென்றமர்ந்தார், அவருடைய சீடர்கள் பூஜைக்கும் உணவிற்குமான ஏற்பாடுகளை முனைத்து செய்துக் கொண்டிருந்தனர்.

தோட்டத்திலிருந்து வந்த திடீர் ஆரவாரத்தை கேட்டு வசந்த மாளிகையில் தங்கியிருந்த நாவாப்பும் பேகமும் ஜன்னல் வழியாக எட்டி பார்த்தனர். அங்கே தோட்டத்தை பாழ்படுத்தாமல் ஒரு சன்னியாசியும் அவருடைய சீடர்களும் அவர்களுடை கடமைகளை சுருசுருப்பாக செய்து கொண்டிருப்பது தெரிந்தது.

அப்போது நவாப் அவருடைய ஒரே மகனின் திடீர் இறப்பால் துயரில் ஆழ்ந்திருந்தார். அந்நிலையில் சாது பிராமணரை தரிசித்தால் ஆறுதலாக இருக்கும் என்று எண்ணியவராய் வசந்தமகாலை விட்டு இறங்கி வந்து ஸ்ரீ இராகவேந்திர தீரத்தரின் முன்னிலையில் முகமதியர்களை போல மண்டியிட்டு அமர்ந்தவாறு அழ ஆரம்பித்தார்.

சுவாமிகள் மிகுந்த அனுதாபத்தோடு எழுந்திருக்கும் படி கூறு அவரை பற்றியும், அவர் அழுவதுற்கான காரணத்தையும் கேட்டார்.

"ஐயா, நான் இந்த மாநிலத்தின் நவாப், எனக்கு பல மனைவிகள் இருந்தாலும் ஒரே ஒரு மகன் தான் பிறந்தான். கோடை காலத்தை மகிழ்ச்சியோடுகழிக்க நான் குளுமையான என்னுடைய தோட்டத்திற்கு வந்தேன். நேற்று என் மகன் இத்தோட்டத்தில்

விளையாடிக் கொண்டிருந்தபோது நாகப் பாம்பு கடித்து இறந்து போனான் இதனால் எங்களுடைய புகழ் மிக்க குடும்பத்திற்கும் இந்தநாட்டிற்கும்ஏற்பட்டபேரிழப்பை எப்படி தாங்கிக்கொள்ள முடியும் ? அவன் இறப்பால் அதிர்ந்துபோன நானும் அக்குழந்தையை பெற்றெடுத் இந்த பேகமும் தவிர அனைவரையும் சவனூருக்கு அனுப்பிவிட்டேன். நாங்கள் இருவரும் இங்கே தாளா வேதனையால் துடித்துக்கொண்டிருக்கிறோம்....'' சொல்லியபடியே மீண்டும் உரக்க அழ ஆரம்பித்து விட்டார்

' சுவாமிகள் சிறிது நேரம் மௌனமாக சிந்தித்த பின், நன்று நவாப் ! உன் மகன் இறக்கவில்லை என்று தான் எனக்கு தோன்றுகிறது' என்றார்'

'உண்மை ஐயா....அவன் பாம்பு கடித்து இறந்து போனதை நாங்கள் எல்லோருமே பார்த்தோம். அரண்மனை வைத்தியர் கூட அவன் இறந்து விட்டதாக கூறி விட்டார்.'

சுவாமிகளே இலேசாக புன்னகைத்து நல்லது, எப்படியாவது இருந்து விட்டு போகட்டும். நான் சொல்கிறேன் அவன் இறக்கவில்லை. உயிருடன் இருக்கிறான், எங்கே அந்த உடல் ?'என்றார்.

அவன் இறந்து விட்டான் ஐயா.... அவனை நேற்று இரவுதான் இந்த தோட்டத்தில் அடக்கம் செய்தோம் தயவு செய்து அதோ பாருங்கள். அவனுடைய சமாதி என்று கூறியபடி அவ்விடத்தையும் சுட்டி காட்டினார்

நல்லது நவாப் .... சவக்குழியிலிருந்து அவ்

வுடலை சீக்கிராமாக என் முன் எடுத்து வாருங்கள் .... அவன் இறக்கவேயில்லை.

நவாப் அவருடைய மனசாட்சிக் விரோதமாக, சுவாமிகளின் சொல்லுக்குப் கட்டுப் பட்டு மிகுந்த நம்பிக்கையோடு புதைக்கப்பட்ட மகனின் உடலை சில வேலைக்காரர்களின் மூலம் சவக் குழியினின்று தோண்டியெடுத்து வந்து ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரின் முன்னிலையில் கிடத்தினர்.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் கருத மந்திரத்தை முணுமுணுத்தபடி ஆதிசேஷக் கடவுளை வணங்கி அவருடைய கமண்டலத்தில் இருந்த நீரை எடுத்து அந்த உடலின் மீது தெளித்தார். சில நிமிடங்களில் உறக்கத்திலிருந்து விழித்தெழுபவனைப்போல விழித்தெழுந்து அனைவரையும் ஆச்சிரியத்தில் ஆழ்த்திவிட்டான். நவாப் அவருடைய தகுதியையும் மறந்து மிகுந்த சந்தோஷத்தால் மகனை கட்டி தழுவிய படி ஆட ஆரம்பித்து விட்டார். பின் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் முன் பலமுறை விழுந்து வணங்கினர்.

நவாப்பின் மனைவி பேகம் மகன் உயிர்த்தெழுந்து விட்டதை கேள்வி பட்டதும் வசந்த மகாலை விட்டு ஓடி வந்து ஆனந்த கண்ணீரால் கணக்கில்லா வணக்கம் செலுத்தினள். ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவர்களுக்கு.

ஐயா.... தாங்கள் எனக்கு தந்தை போன்றவர் எனக்கு மட்டுமல்ல .... என் கணவருக்கு ஏன் இந்த நாட்டிற்கே தந்தையை போன்றவர்கள். தாங்கள் தான்

இப்போது எனக்கு எல்லாமே.... இதற்கு நன்றிக் கடமை தாங்களுக்கு நான் எதை கொடுப்பேன் ? உங்களுடைய இந்த உதவிக்கு ஈடு இணையாக கைமாறு செய்ய எங்களிடம் என்ன இருக்கிறது ? என்று சந்தோஷத்தால் கத்திய படி அவள் அணிந்திருந்த விலையுயர்ந்த நகைகளையெல்லாம் கழற்றி சுவாமிகளின் பாதங்களில் காணிக்கையாகசமர்பித்து ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினான்.

நவாப் என்ன செய்வது ? எப்படி பேசுவது என்ன பேசுவதென்று தெரியாமல் வேலைக்காரனை போல ஸ்ரீ இராகதேந்திர தீர்த்தரின் முன்னிலையில் நின்றார் பின் பூஜைக்கு தேவையான வசதிகளையும், தேவைகளையும் அவரே முன்னின்று செய்தார். அதோடு சொந்த செலவில் பெருவிருந்து ஒன்றிற்கு ஏற்பாடு செய்தார். நவாப் மிகுந்த உற்சாகத்துடனும் பணிவுடனும் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரை அவருடைய சிறப்பு விருந்தினராக சில காலம் அவருடன தங்கிச் செல்லும்படி வேண்டிக்கொண்டார் நவாப்பும், அவருடைய மனைவி பேகமும், மகனும் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளுக்கு உள்ளத்தாலும், உடலாலும் உண்மையான சேவகம் செய்தார்கள். அதோடு, அவருடைய வசந்த மாளிகை உள்பட கிருஷ்ணபூர் தாளில் அதைச்சார்ந்த நான்கு கிராமங்களையும் அரசாங்க முத்திரையிட்ட தாளில் பதிவு செய்து ஸ்ரீ இராகவேந்திர சுவாமிக்கு நன்கொடையாகத் தந்தார் பிறகு நவாப், பேகம், அவருடைய மகன் அனைவரும் கட்டிய கைகளுடன் பணிவாக சுவாமிகளை வணங்கி அவர்புடன் வழியனுப்பி வைத்தனர்.

கிருஷ்ணபூரும் அதை சார்ந்த நான்கு கிராமங்களும் தற்போது மடத்திற்கு சொந்தமாக இல்லை. 1857 ஆம் ஆண்டிற்குப் பிறகு ஆங்கில ஆதிக்கத்தால் பறித்துக் கொள்ளப்பட்டது,

இது போன்ற மற்றொரு நிகழ்ச்சி சில நாட்களுக்கு கிரீதகிரி என்ற சிராமத்தில் (கதவட்டத்தில் உள்ள ஒரு கிராமம் ) நிகழ்ந்தது. ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் கிருஷ்ணபூரிலிருந்து கிரீதகிரி கிராமத்திற்கு வந்து சேர்ந்தார். அந்த கிராமத்து தேசாய் (கிராமத் தலைவர் ஸ்ரீ மாதவரிடம் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டார். எனவே சுவாமிகளை உளமாற வரவேற்று அவருடைய சொந்த மாளிகையிலேயே தங்கும்படி கேட்டுக் கொண்டார்.

தேசாய் அந்த தாலுக்காவிலேயே பேரும் புகழும் வாய்ந்த பெரும் பணக்காரர். சுவாமிகளின் வரவை முன்னிட்டு அவர் நடத்தயிருக்கும் பூஜையில் குடும்பத்தோடு கலந்துக் கொண்டு விருந்துண்டு செல்லும்படி சுற்று புறங்களில் உள்ள எல்லா பிராமணர்களுக்கும் அழைப்பு கொடுத்தார். ஆகையால் சமாராதனையில் கலந்துக் கொள்ளும் பொருட்டு பெருங் கூட்டம் தினமும் கூடியபடி இருந்தது. அது மாம்பழங்கள் மலிவாகவும் ஏராளமாகவும் கிடைக்கும் காலம். ஒரு நாள் தேசாய் நூற்றுக் கணக்கான மாம்பழங்களை கொண்டு வந்து சாறுபிழிந்து உணவு வேளையின் போது கொடுப்பதற்காக பெரிய அண்டாவில் நிரப்பி வைத்திருந்தார்.

அன்றைய நாளில்மட்டும் உணவருந்த கூட்டம் மிகுதியாக இருந்தது. தேசாயும் அவருடைய மனைவி யும் வந்துக் கொண்டிருந்த விருந்தினர்களை வர வேற்று உபசரிப்பதில் மும்மறமாக இருந்தமையால் அவர்களுடைய இரண்டுவயது குழந்தையைக வனிக்க நேரமின்றி எங்காவது விளையாடிக் கொண்டிருக்கட் டும் என்று விட்டு விட்டனர். குழந்தையோ விளை யாடியபடி மாம்பழச்சாறு வைத்திருந்த அகைறகுள் வந்து அண்டாவை பிடித்து எட்டியெட்டி தாவிய போது குப்புற மாம்பழச் சாறுக்குள் விழுந்து மூழ்கி இறந்து விட்டான். இதை அங்கிருந்த யாருமே கவனிக்கவில்லை.

இரண்டு மூன்று மணிநேரம் கழித்திருக்கும். தேசயின் மனைவிக்கு திடீரென்று குழந்தையின் நினைவு வரவே அங்கும் இங்கும் தேடிப்பார்த்து கிடைக்காதத னல் தேசாயிடம் கூறினள். அது கேட்டு தேசாய் திடுக் கிட்டவராய் குழந்தையை பற்றி ஏதும் தெரியாது என்று கூறியபடி மனைவியுடன் சேர்ந்துக் கொண்டு இருவரும் தேட ஆரம்பித்தனர். எதையேச்சையாக இருவரும் மாம்பழச்சாறு வைக்கப் பட்டிருந்த அறைக்கு வந்தபோது மாம்பழச் சாற்றில் ஏதோ ஒன்று மிதப்பது கண்டு ஓடிச்சென்று எடுத்து பார்த்த போது அது அவருடைய ஒரே ஆண் குழந்தையாய் இருக்கக் கண்டு பேசமுடியாத ஊமையாகி விட்டனர்.

தேசாயின் மனைவி சற்று நேரத்திற்கு பிறகு ஏதோ ஒருாவழியாக துணிவை வரவழைத்துக் கொண்டு உடனே கதவை மூடிவிட்டு கணவனிடம் 'நன்று .... சுவாமி, இப்போது என்ன செய்வது ? பல

உயர்ந்த பிராமணர்கள் குடும்பத்துடன் வந்து சேர்ந் திருக்கின்றனர். இப்போது தான் சுவாமிகளும் குளித்து முடித்து பூஜையில் வந்து அமர்ந்திருக்கிருர் இந்த செய்தி வெளியே தெரிந்தால் பூஜை முடிய இருக்கும் இத்தருணத்தில் சுவாமிகளும் அரைகுறை யாகவே பூஜையை முடித்தும் முடிக்கமலும் அவர்களு டைய பரிவாரங்களோடு இவ்விடத்தை விட்டு புறப் பட்டுவிடுவார். இதனுல் பசியோடு பல பிராமணர்கள் திரும்பிச் சென்று விடுவார்கள். பின் மறுபடியும் பூஜை யை செய்து விருந்தளிப்பதற்கு பல காலங்கள் ஆகி விடும். இச்செய்தியை வெளியிட்டு ஏன் அனைவரை யும் சங்கடத்தில் ஆழ்த்த வேண்டாம்? பூஜை முடி யும் வரை இதை ரகசியமாகக் காப்பதுதான் நலமாக படுகிறது .... என்ன சொல்கிறீர்கள்?' என்ருள்.

தேசாய் மனைவியின் துணிவை கண்டு அதிர்ந்து போனுர் பின் வழிந்து வந்த கண்ணீரை துடைத்துக் கொண்டு; நீ எனக்கு சாதாரண மனைவி மட்டுமல்ல.... என்னுடைய குடும்பத்திற்கே கடவுள் போன்றவள். உன் சொல்லையும், செயலையும் தொடர்ந்து ஆதர வோடு பின்பற்றுவேன்', என்று மனைவியின் துணி வான முடிவை மெச்சும்படி கூறினுர்.

பின் இருவரும் இறந்த உடலை நீரால் கழுவி போர்வையால் சுருட்டி அதன் மீது ஒரு பாயையும் சுருட்டி அவ்வறையின் மூலையில் வைத்து விட்டு, குமஸ்தாவை அழைத்து பூஜை கடைசி வரை எந்த வித குறையுமில்லாமல் நடக்கும் படி பார்த்துக் கொள்ளும் படியும் கூறி விட்டு வெளியேறினர்.

பூஜையும், மற்ற எல்லாசடங்குகளும் நடந்து முடிந்தன அன்றைய பூஜைக்கு தேசாயும்அவருடைய மனைவியும் முக்கிய மாணவர்களாதலால் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் முதல் தீர்த்தம் அவர்களுக்கு வழங்கும் பொருட்டு அழைத்தார்.

தேசாயின் குமஸ்தா முன் வந்து 'ஐயா.... தேசாய் தம்பதிகள் மிகவும் அவசர வேலையாக வெளியே போய் விட்டனர். எனவே தீர்த்தத்தையும் பிரசாதத்தையும் வந்திருக்கின்ற அனைத்து விருந்தினர்களுக்கும் கொடுத்து உணவு வழங்கவும் ஏற்பாடு செய்யுங்கள். எல்லோருடைய உணவு முடிந்ததும் தேசாய் தம்பதிகள் வந்து விடுவார்கள்........' என்றார்.

குமஸ்தாவின் இந்த வார்த்தை சுவாமிகளுக்கு ஒரு புதுமையாகத் தோன்றியமையால் மீண்டும் அவர்களை அழைத்து வரும்படி கட்டளையிட்டார்.

'நன்று குமஸ்தா.... முதலில் தேசாய் தம்பதிகள் வந்து தீர்த்தத்தையும் பிரசாதத்தையும் ஏற்றுக் கொள்ளட்டும்....' நல்லது சுவாமிகள். அவர்களுடைய பிரதிநிதியாக இங்கே நானிருக்கிறேன். அவர்களுடையபெயரில் நான் இதனை ஏற்றுக்கொள்கிறேன் தயவு செய்து தீர்த்தத்தை என்னிடம் தாருங்கள் ........

சுவாமிகள் தேசாய் தம்பதிகளின் இருப்பிடத்தை உறுதிப்படுத்திக் கொள்ளும் பொருட்டு சற்று கடிந்து கொண்டதும், அதற்கு பிறகு ஏதும் மறு மொழி கூறாமல் குமஸ்தா தேசாய் தம்பதிகளை சென்று அழைத்து வந்தார். தேசாய் சுவாமிகளுக்கு சற்று தூரத்தில் நின்றபடியே சொஞ்சம் நேரம் விட்டு தீர்த்தரையும்,

பிரசாதத்தையும் காலதாமதமின்றி அனைவருக்கும் வழங்கும்படி கேட்டுக் கொண்டார். சுவாமிகள், திடீரென்று ஏன் இப்படி புதுமாதிரியாகத் பேசுகின்றீர்கள் ? என்று கேட்க அது கேட்ட தேசாயால் அழாமல் இருக்க முடியவில்லை.

'ஐயா.... என் மகன் சற்று நேரத்திற்கு முன் தான் மாம்பழச் சாற்றில் விழுந்து இறந்து விட்டான்....

அழுதபடியே தேசாய் கூறுயதை கேட்ட சுவாமிகள் 'ஓ........ இதுதான் நீ இவ்விடத்தின்று தூர விலகி நிற்பதன் காரணமா ? யாம் கூறுகிறேன் .... அவன் இறக்கவில்லை. எங்கே ?.... அவனை என் முன் எடுத்து வாருங்கள் ........என்றார்,

தேசாய் வேகமாய் ஓடிச்சென்று குழந்தையின் உடலையெடுத்து வந்து ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரின் முன்னிலையில் கிடத்தினார். சுவாமிகள் தன்வந்தரி மந்திரத்தை முணுமுணுத்தபடி அவருடைய கமண்டலத்திலிருந்து நீரை எடுத்து அவன் மீது தெளித்தார். இரண்டு மூன்று நிமிடங்களுக்குப் பிறகு குழந்தை கைகால்களை அசைத்து மெல்ல கண்களை திறந்து பார்த்தபோது அங்கே கூடியிருந்த கூட்டம் முழுவதும் ஆச்சரியத்தால் அதிசயித்து நின்றனர்

தேசாய் தம்பதிகள் சந்தோஷத்தால் அவர்களையே மறந்து குழந்தையை கட்டித்தழுவினர். பின் மறு பிறப்பு கொடுத்த ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தரின் பாதங்களில் அக்குழந்தையை கிடத்தி அவர்களும் அவருடைய திருவடிகளில் விழ்ந்து வணங்கினர் கைமாறு யாது கொடுப்பது என்று தெரியாமல் ஆனந்தக்

கண்ணீர் உதிர்த்தபடி அவர் முன் அமைதியாக நின்றனர்.

பிறகு பிரசாதமும் வழங்கப்பட்டன. பின் எல்லா பிராமணர்களும் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளை வணங்கி அவர்களுடைய இருப்பிடம் சென்றதும் அவரையே தெய்வமாக வழிப்பட்டனர்.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் சில நாட்கள் கிரீத கிரியில் தேசாயோடு தங்கிருந்து பின் பிஜப்பூர் நோக்கி பயணமானார்.

# 9 அட்டிகை

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தா ஒரு முறை பிஜப்பூர் சமஸ்தான நுழைவாயிலருகில் தங்க நேர்ந்தது. பிஜப்பூர் ஷா அம் மகானை பற்றி முன்னமேயே கேள்விப் பட்டிருந்தமையால் அவர் பிஜப்பூர் இராஜ்சியம் வந்தது குறித்து பெருமகிழ்ச்சியடைந்தார் சுவாமிகளை சிறப்பாக வரவேற்கும் படியும் அவருக்கு தேவையான வசதிகளை செய்து தரும் படியும் அனைத்து அதிகாரிகளுக்கும் ஆணை அனுப்பினார். பிஜப்பூரை மகான் கண்டாரா? இல்லையா ? என்று நம்மால் உறுதியாக கூறமுடியாது. ஆனால் அவர் பிஜப்பூருக்கு அருகாமையில் தங்கினார் என்பது மட்டும் உறுதி.

ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் மீது ஷாவுக்கு அளவு கடந்த மதிப்பு உண்டு. சுவாமிகளை அவர் ஒரு சாதாரண சன்னியாசியாகக் கருதவில்லை. கடவுளின் அவதாரம் என்று தான் கருதினார் சுவாமிகள் பிஜபூருக்கு அருகாமையில் தங்கியுள்ளார். என்ற செய்தியை கேள்விப்பட்ட உடனேயே தன் மரியாதையை செலுத்தும் பொருட்டு சக்கர சமாரங்களுடன் விலையுயர்ந்த பொருள்கள் பலவற்றையும் ஒட்டகத்தின் மீது ஏற்றி முரசு முழங்க தன்பிரதம அதிகாரியாகிய வஜுரை அனுப்பி வைத்தார். பலவகை இரத்தின கற்களும்; முத்துக்களும் பதிக்கப்பட்ட விலை மதிப்பற்ற அட்டிகை ஒன்றை ஸ்ரீ மூல ராமருக்கு அணிவிக்கும் பொருட்டு கொடுத்தனுப்பியிருந்தார்,

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் வஜுாரை வரவேற்று அவர் கொண்டு வந்திருந்த அனைத்து வெகுமதிகளை யும் ஏற்றுக் கொண்டார். வஜுார் ஆண்டவனுக்கு அணிவிக்கும் பொருட்டு ஷா தந்த அட்டிகையையும் தந்தார். சுவாமிகள் வஜுாரை ஆண்டவனுக்கு அட்டி கை வழங்கும் விழாவில் கலந்துக் கொண்டு பின் உணவருந்தி செல்லுமாறு கேட்டுக் கொண்டார்.

பூஜையின் போது வேள்வித் தீக்கு ஏற்பாடு செய் யப்பட்டது. சுவாமிகள் ஹோமம், ஹவனம் பூஜை முதலிய சடங்குகளை முடித்துக் கொண்டு அட்டிகை யை அக்கினி குண்டத்தில் போட்டு ஆண்டவனுக்கு அணிவித்தார்.

வஜுார் அனைத்தையும் பார்த்தபின் முடித்துக் கொண்டு நேராக பிஜப்பூர் சென்று ஷா மன்னரிடம் அவர் கண் கூடாகக் கண்ட அனைத்து நிகழ்ச்சிக ளையும் கேலியும் இகழ்ச்சியும் கலந்த குரலில் கூறினார் ஷா மன்னர் இதைக் கேட்டு, விலை மதிப் பற்ற உயர்ந்த அட்டிகை இப்படி நெருப்பிலிட்டு எரிக் கப்பட்டதே என்று மிகவும் வருத்தப்பட்டார். தாம் அனுப்பிய வெகுமதிகளை அலட்சியம் செய்து அவரை அவமதித்து விட்டதாக எண்ணி கோபம் கொண்டார். ஆனால் ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தரை உண் மையிலேயே பெரிய மகான் என்றும் கடவுளின் அவ தாரம் என்றும் நன்கு அறிந்தமையால் நேரடியாக அவரை பகைத்து கொள்ள அவருக்கு துணிவு ஏற்பட வில்லை. எனவே சுவாமிகளை முட்டாளாக்கும் பொ ருட்டு ஒரு தந்திரத்தை கையாண்டார். மறு நாள் வேறொரு வஜுாரை மகானிடம் அனுப்பிவைத்தார்.

வஜுீர் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரை அணுகி அவர் முன் பணிவாக நின்று, சுவாமி .... நம் மன்னர் ஆண்டவனுக்கு தாங்கள் அணிவித்த அட்டிகையை போலவே பேகம் அரசியாளுக்கு புதியதாக ஒன்று செய்து தரும்படி பொற்கொல்லரை பணித்தார் ஆனல் பொற்கொல்லரோ அதை ஒரு முறை பார்க்க விரும்பு கிருர். எனவே தயவு செய்து ஆண்டவனுக்கு அணி வித்த அந்த அட்டிகையை கொஞ்சம் தர முடியுமா ? நான் அதை பொற்கொல்லரிடம் காட்டி விட்டு உடன டியாக இன்னும் இரண்டு நாளில் திரும்பத் தந்து கொடுக்கிறேன்' என்று கேட்டுக் கொண்டார்,

மகான் கண்களை பாதி மூடியவாறு சற்று நேரம் தியானம் செய்த போது அவருக்கு அனைத்தும் தெரி யவந்தது. பின் வைர அட்டிகையை திருப்பத் தருவ தாகவும் பூஜையின் போது வஜுீரை உடன் இருக்கும் படியும் கேட்டுக் கொண்டார். வஜுீரும் அதற்கு சம்ம தித்தார்,

ஹோமம் குண்டம் தயாரானது. பூஜையும் துவங்கியது ஸ்ரீஇராகவேந்திர தீர்த்தர் அக்கினி குண் டத்தின் முன் அமர்ந்து அக்கினி தேவன் மூலம் ஸ்ரீ மூல ராமருக்கு அணிவிக்கப்பட்ட அட்டிகையை திரும்பக் கேட்டு பிரார்த்தனை செய்து வழிப்பட்டார் பூஜை முடிந்த பிறகு சுவாமிகள் தீப்பிழம்புகளுக்கி டையே தன் முழு கையையும் விட்டு ஸ்ரீ மூல ராமருச்கு அளித்த அதே அட்டிகையை எடுத்து வஜுீரிடம் கொடுத்தார்.

அனைத்தையும் பார்த்த வஜூர் ஆச்சரியம் அடைந்து அந்த அட்டிகையை எடுத்துக் கொண்டு அவ்விடத்திலிருந்து பிஜப்பூரை நோக்கி ஓடினார். பிஜப்பூர் ஷா மன்னனிடம் அட்டிகையை கொடுத்து பூஜையின் போது நடந்த அற்புதங்களையெல்லாம் ஒன்று விடாமல் விளக்கினார். அதை கேட்ட உடனே ஷா மன்னரின் உடல் பயத்தால் நடுங்க ஆரம்பித்து விட்டது. சுவாமிகளை சந்தேகித்ததற்காக மிகவும் வருந்தம் அடைந்தார் பிறகு அந்த அட்டிகையுடன் விலையுயர்ந்த நாராயணம், சத்தம் சாமரம் நகரி முதலியவைகளையும் பலவித இனிப்பு வகைகளையும் ஒட்டகத்தின் மீது வைத்து, தன் அந்தரங்க திவானை உடன் அனுப்பி அப்பொருள்களை ஏற்றுக் கொண்டு ஆசி வழங்கும்படி தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளும்படி கூறினார் ஷா.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் புன்னகைத்து அந்த வைர அட்டிகையை தவிர மற்ற அனைத்தையும் ஏற்றுக் கொண்டு அருளாசி வழங்கினார்.

# 10. மாஞ்சாளி

கிருத யுகத்தில் தென்னிந்தியாவை தலைநகராகக் கொண்டு இரணிய கசிபு இவ்வுலகை ஆண்டு வந்தான். தற்போது ஆந்திராவில் நந்தியால் என்ற இடத் இடத்திலிருந்து நாற்பது மையில் தொலைவில் உள்ள அகோபலா தான் அரண்மனைகளுடனும் அரண்களுடனும் அவன் வாழ்ந்த இடமாகும். அவ்வூரைச்சார்ந்த மலைகளில் தான் அவனுடைய அரசியர்களும், உறவினர்களும் வழ்ந்து வந்தனர். இரணிய கசிபுவின் தர்பார் மண்டபத்தின் நடு தூணை பிளந்துக் கொண்டு வெளிப்பட்ட ஸ்ரீநரசிம்மனின் உருவச் சிலை கொண்ட கோயில் ஒன்றும் உள்ளது. இப்போது அவ்விடம் மலைகளும் அடர்ந்த் காடுகளாலும் சூழப்பட்டு நடுவில் உள்ளது.

இரணிய கசிபுவுக்கு பிறகு ஸ்ரீ பிரகலாதன் பல்லாண்டுகள் நேர்மையுடன் நாட்டை ஆண்டு வந்தான் இவனுடைய காலத்தில் ராஜ சுயம், அசுவமேதம் போன்ற யாகங்கள் பலவற்றை குறைவின்றி செவ்வனே நடத்தினான். இவ்வளவு யாகங்களும் துங்கபத்திரா நதியின் தென்கரையில் இப்போது ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் பிருந்தாவனமாகிய மந்திராலயம் உள்ள இடத்தில் தான் நிகழ்த்தியதாக கூறப்படுகிறது.

கிருத யுகம் முதற் கொண்டே தற்போதுள்ள மந்திராலயமும் அதனை சார்ந்த இடங்களும் மாஞ்சாளி என்றே அழைக்கப்பட்டு வருகிறது. அக்காலத்தில் இது பேரூராக விளங்கியதா அல்லது நகரமாக இருந்

ததர் என்று நாமறியோம், ஆனால் தற்போது சிற்றூ ராகத்தான் இருக்கிறது. ஸ்ரீ இரணியகசிபு(பிரகலாதன்) வின் குல தெய்வமான மஞ்சளம்மா குடி கொண்ட புண்ணிய தலமாகையால் கிருத யுகம் முதற் கொண் டே மஞ்சாளி முக்கியத்துவம் வாய்ந்த இடமாக கருதப்படுகிறது. அப்போது மஞ்சளம்மாவின் கோயிலை எந்த இடத்தில் ஸ்தாபித்திருந்தார்கள் என்று நமக்குத் தெரியாது. ஆனால் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளினுடைய மடத்தின் வெளிப்புறத்திலுள்ள பெரிய கதவின் அடியில் பல ஆண்டுகளுக்கு முன்பி ருந்தே உட்கார்ந்த நிலையில் அமைக்கப்பட்ட மஞ் சாளம்மாவின் உருவச்சிலை கொண்ட கோயில் ஒன்று உள்ளது.

கி.பி. 1930 ஆம் ஆண்டு மந்திராலயத்து மட பீடாதிபதியாக பதவி வகித்த ஸ்ரீ சுயமீந்திர தீர்த்தர் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் கோயிலுக்கு அருகில் ஸ்ரீ மஞ்சளம்மாவின் சிறிய அழகான கோயில் ஒன்றை நிறுவினர். இப்போதுள்ள மஞ்சளம்மாவின் கோயில் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் மடத்தின் நிலைக்கு இணையாக, உயர்ந்த பீடத்தில் அமைக்கப்பட்டிருக் கிறது. எனவே மாஞ்சாளியும், அதனை சார்ந்த இடங் களும், ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் முன் அவதார மான ஸ்ரீ பிரகலாத இராஜாவுக்குச் சொந்தமான புண்ணிய தலமாகும். யாருக்குக் கீழ் வெங்கண்ணு பந்த் திவானாக வேலை பார்த்தாரோ அந்த அஸதுல் லாகானின் சட்டத்தால் தான் மாஞ்சாளி அத்வைணி நாட்டின் ஒரு பகுதியாக சேர்க்கப்பட்டது.

ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் மாஞசாளிக்கு உரிமை யாளராக மாறுமுன் மாஞசாளியை சென்றி பார்த்ததாக மடத்தின் அறிக்கை பதிவேடுகளில் குறிப்புகளோ அல்லது வரலாற்றுச் சான்றுகளோ ஏதும் கிடையாது இருந்தாலும் முக்காலும் அறிந்த ஞானியாகையால் முற்பிறவியில் பிரகலாதனுகை இருந்த போது இருந்த இடத்தை அறிந்து எல்லா நடவடிக்கைகளையும் மாஞ சாளியிலேயே செய்திருக்கிறுர். எனவே தான் அவர் முதன் முதலில் அத்வைணியை பார்த்த போது அவரு டைய குல தெய்வமான மஞசவம்மா வாழ்ந்து வரு கின்ற மாஞசாளிக்கே சென்று தங்கிவிட முடிவு செய் தார் போலும்.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் பிஜப்பூர் இராஜி யத்தை விட்டு மெல்ல அத்வைணியை நோக்கி பய ணத்தைத் தொடர்ந்தார். ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அத்வைணியை நெருங்கிக் கொண்டிருந்த போது அவர் வரவை கேள்வி பட்ட அத்வைணியின் திவா ஞகிய வெங்கண்ணா பந்த் அரசரை வரவேற்கும் முறையில் ஆடம்பரத்துடனும், மேள தாலங்களுட னும் மனைவிகள், குழந்தைகள், உறவினர்கள், அரசி யல் அதிகாரிகள் மற்றும் வேலையாட்கள் அனைவரும் புடைசூழ குருவை வரவேற்பதற்காக அத்வைணியின் நுழைவு வாயிலில் வந்து காத்திருந்தார்.

ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் நுழைவாயிலை அடைந்த தும் வெங்கண்ணு பந்த் முன் வந்து அவருடைய பாதங்களில் விழுந்து வணங்கி ஆணந்த கண்ணீரு டனும் பய பக்தி நிறைந்த பணிவுடனும் எழுந்து

நின்ருர், அந்த சமையமே தூமையடைந்தார். ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் வெங்கண்ணாவை அன்பும் ஆதரவும் கலந்த பார்வையால் உற்று நோக்கி ஆசி கூறினுர்.

'எல்லா நலம் தானே திவான் அவர்களே ........' திவான் திகைப்படைந்து 'யார் சுவாமி திவான்'? உங்கள் முன் நான் திவாஞ ? நான் உங்கள் வேலைக் காரன் உங்களுடைய புனித பாதங்களுக்குப் பணி செய்யும் எளிமையான ஏவலால், நான் மாட்டு மந்தை மேய்த்தவன், ஓரேழுத்தும் படிக்கத் தெரியாத கல்வி யறிவு இல்லாத நாடோடி, உங்களுடைய அருளாசி யால் தான் அன்று என்ஞல் அஸதுல்லாகனின் கடி தத்தை படிக்க முடிந்தது. இன்றும் உங்களுடைய கிருபையைதான் ஏந்திருக்கின்றேன் தவிர வேறேது மல்ல. உங்களே மிகத்தாழ்மையுடன் வேண்டிக் கேட் டுக்கொள்கிறேன். என்னை இனியும் தாங்கள் திவா னென்று அழைக்காதீர்கள். நான் உங்களுடைய அடிமை, சாதாரணமாக என்னை பெயரிட்டே அழையுங்கள்........' என்றதும் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் மனநிறைவு கொண்டு சந்தோஷத்தால் புன் னகைத்தார். வெங்கண்ணா பந்த் அவரை நேரே விட்டிற்கு போகலாமென்று வேண்டிக்கேட்டுக்கொண் டதன் பேரில் மகானும் அதற்கு இசைவு தந்து வெங் கண்ணாவை தொடர்ந்தார்.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரும் அவருடைய மடத் தை சார்ந்தவர்களும் வெங்கண்ணா பந்தின் மாளிகை யில் தங்கி சன்னியாசிகள் தினமும் வழக்கமாக செய் யும் பூஜைகளை செய்தனர் வெங்கண்ணா பந்த் அவரு

டைய தகுதியையும்; கௌரவத்தையும் மறந்து பய பக்தியும், பணிவும் நம்பிக்கையும் கொண்ட உண்மை யான வேலைக்காரனைப்போன்ற மகானின் அழைப்பிற் காக அவர் பின்னாலேயே காத்துக் கிடந்தார்,

அத்வைணியிலும் அதனைச் சார்ந்த கிராமங்களி லும் வாழ்ந்த அனைத்து பிராமணர்களும் அவர்களு டைய குடும்பத்துடன் பூஜையில் கலந்து கொள்ளும் படி அழைப்பு விடுத்ததின் பேரில் ஏராளமானோர் பூஜையில் கலந்துக் கொண்டு திவானின் வீட்டில் உணவருந்தி சென்றனர்.

ஸ்ரீ இராகவேந்திர தீர்ந்தரின் பூஜையை கான்ப தற்குக் கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும். நான் முக பிரம்மா வழிப்பட்ட ஸ்ரீ ராமரின் உருவச்சிலையை சுவாதீனமாக ஒரிஷாமானிலத்தை சேர்ந்த கஜபதி என்பவர் பெற்று அதை வழிப்பட்டு வந்தார். அந்த உருவச்சிலை ஸ்ரீ ஸ்ரீமந்த தீர்த்தருக்கு அவருடைய சீடரான ஸ்ரீ நரகிரி தீர்த்தரால் கொண்டுவந்து கொக் கப்பட்டு பின் ஸ்ரீ மாதவாச்சாரியாரிடம் போய் சேர்ந்த பிறகு அதை அவர் பல்லாண்டுகள் வழிப்பட்டனர் அவருக்கு பிறகு மடத்தின் பீடாதிபதியாக பதவியேற்ற ஸ்ரீ விழதீந்திர தீர்த்தர் அந்த ராமரை மடத்திற்கே உரிய கடவுளாக ஏற்று வழிபடக் கூறினர். பிறகு அவருக்கு அடுத்தபடியாக மட பீடாதி பதியாகப் பதவி யேற்ற ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரிடம் அதை வழிபடும் உரிமை வந்து சேர்ந்தது.

ஸ்ரீ மாத ஆச்சாரியாரால் வழிப்பட்ட அடுத்த முக்கிய தவம் வாய்ந்த விஹரகம் திக்விஜய ராமர்

ஆகும். ஸ்ரீ ஜெயராமர், ஸ்ரீ வைகுண்ட வாசு தேவர் போன்ற விஹரகங்கள் தீகாச்சாரியார் என்று அழைக் கப்படும் ஸ்ரீ ஜெய தீர்த்தரால் வழிப்பட்டு மடத்தில் சேர்க்கப்பட்டது. வேத வியாசரால் வழங்கப்பட்ட வியாச மூர்த்தி விஹரகமும் வழிபாட்டிற்குறிய விஹ ரகங்களுள் ஒன்ருகும்.

ஸ்ரீ மாதவ ஆச்சாரியார் இரண்டாவது முறையாக ஹ்ரிபதரிக்கு சென்று ஸ்ரீ வேத வியாச கடவுளை தரி சனம் செய்த போது ஸ்ரீ வேதவியாசர் சதையும் இரத்தமும் கொண்ட உடலுருவில் தோன்றி மாதவச் சாரியாரை ஆசிர்வதித்து, பின் அங்கிருந்த மண்ணை எடுத்து ஐந்து உருண்டைகள் செய்து அதில் மூன்று வழிப்படுவதற்காக ஈந்தார். அப்போது மண்ணுருண் டைகளே அவரது உருவம் எனவும் கூறியருளச் செய் தார். அவைகளில் ஒன்று ஸ்ரீ வியாசர் மடத்திலும் மற்ருென்று சோதி (Sode) மடத்திலும் மூன்ருவது ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் மடத்திலிருள்ள விஹ் ரகங்களில் ஒன்ருக விளங்குகிறது. மற்ற இரண்டின் மற்ற இருப்பிடம் யாதென யாரும் அறிந்திலர். இவை கள் மட்டுமல்லாது இன்னும் பல முக்கியமான விஹர கங்களையும் பூஜையின்போது ஸ்ரீ இராகவேந்திரர் வழி படுவது வழக்கம். அது மட்டுமல்லாமல் யோக நிலையில் உடலிலும், உள்ளத்திலும் எழும் உணர்வுகளை அடக்கி மனதில் எந்த வித சலனத்திற்கும் சஞ்சலத்திற்கும் இடம் தராது ஒரு நிலைப்படுத்தி ஆண்டவனின் திரு வடிகளில் தன்னையே அற்ப்பணித்துக் கொள்வதும் உண்டு. அப்போது கடவுள்களின் சன்னிதானங்களை யே நெஞ்சில் வரவழைத்து நெய் அபிஷேகம் செய் வித்து வழிபடுவார்.

இந்த பெரு நிகழ்ச்சி காண்பவர்களுக்கு ஈடு இணையற்ற சந்தோஷத்தை மட்டுமல்லாமல் சொர்க்கத்து இன்பத்தை எழுத வார்த்தைகளே இல்லை பூஜைமுடிந்த பிறகு தீர்த்தங்கள் வழங்கியதும் உணவு அளிக்கப்பட்டு விழா முடிய நண்பகலாகி விடும். மாலையில் நடக்கும் பூஜையும் காலையில் நிகழ்ந்தது போலவேதானிருக்கும்.

திவான் வெங்கண்ணு பந்த் உண்மையிலேயே உயர்ந்த புண்ணியம் கொண்டவர். அவர் பரந்த மனப்பான்மை கொண்ட, பிறந்த பலனை முழுவதும் உணர்ந் போற்றற்குறியவர் வாழ்வை முழுமையாக உணர்ந்தவர் அவருடைய தலைவர் அஸ்துல்லாகான் பல விதங்களில் உதவியதோடு மட்டுமல்லாமல் திவானுக வேறு பதவியும் தந்து கௌரவ படுத்திருக்கிருர் எனவே வெங்கண்ணு பந்த் அஸதுல்லாகானுக்கும் குரு ஆசிகள் வழங்க வேண்டும் என்று எண்ணியதில் தவறேதும் மில்லை. எனவே ஒரு நாள் அஸதுல்லாகானிடம் சென்று,

'கவர்னர் அவர்களே ! என்னுடைய குரு நம் தலை நகருக்கு வருகை தந்துள்ளார். அவர் பெறும் மகான், கடவுளின் அவதாரம், அவரால் ஏதையும், எல்லாவற்றையும் செய்யவும் செய்யாமல் இருக்கவும் முடியும், எனவே தாங்ள் அவரை தரிசிப்பது நாட்டின் நலனுக்கு நல்லது என யான் கருதுகிறேன். நீங்கள் அவருடைய தரிசனத்தை பெற விரும்புவீர்களானல் நம் தர்பார் மண்டபத்திற்கு அவரை அழைத்து வர தயாராகஉள்ளேன் அல்லது தயவு செய்து நீங்களர்வது

என் வீட்டிற்கு வந்து அவரை காணும்படி கேட்டுக் கொள்கிறேன்........ என்று கேட்டுக்கொண்டார்.

'ஓ........ அப்படியா? நன்று நானே உன் வீடு வந்து அவரை பார்க்கிறேன், அவரை தர்பாருக்கு அழைத்து வரவேண்டியதில்லை' என்று பதிலுரைக்க

அப் பதிலை கேட்ட வெங்கண்ணா பந்த் மிக்க மகிழ்ச்சியடைந்து அவருடைய மாளிகைக்குச் சென்று மகானிடம் மறு நாள் மாலை அஸதுல்லாகானின் வருகையை பற்றி கூறினார். மகானும் அவருக்கு தேவையானதை சாதித்துக் கொள்ள இதுவே தக்க தருணம் என்றெண்ணி மகிழ்ச்சி அடைந்தார்.

அஸ்துல்லாகான் இயற்கையிலேயே நல்லவரே யாயினும், பிறந்தது முதல் சில கெட்ட புத்தியையும் கொண்டிருந்தார். பொதுவாக இந்துக்கள் மீது ஒரு வித வெருப்புணர்ச்யிருந்தமையால் மனதிற்குள்ளேயே சில சதி திட்டங்களை தீட்டிக் கொண்டார், மறு நாள் மாலை, ஒரு தங்கத் தட்டு நிறைய மாட்டிறைச்சியை நிறப்பி மெல்லிய பருத்தித் துணியால் மூடி, இராஜ்ய சபை பிரதிநிதிகள் பலருடனும் வெங்கண்ணாவின் மாளிகைக்கு வந்து சேர்ந்தார்.

மாலையில் அஸதுல்லாகான் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரை சென்று தரிசிக்க இருக்கின்ற விஷயம் காட்டுத்தீயென அனைவருக்கும் பரவி விட்டது. ஏராளமான ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் பூஜை மண்டபத்தில் ஆவலுடன் கூடி நின்றனர். வெங்கண்ணா பந்தின் மாளிகை கவர்ச்சியாகவும்

அழகாகவும் பல வித மலர்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. மகானின் இருக்கைக்கு சற்று தள்ளி எதிர் புறமாக அஸதுல்லாகான் அமர்வதற்காக உயர்ந்த இருக்கை ஒன்றும் அமைக்கப்பட்டிருந்தது.

மாலையில் பூஜை துவங்க சற்று நேரத்திற்குமுன் தான் அஸதுல்லாகான் வந்தார். வெங்கண்ண பந்த் வெளிவாயிலேயே அவரை வரவேற்று அவருக்காக அமைக்கப் பட்டிருந்த இருக்கையில் அமரும்படி கேட்டுக்கொண்டார். அஸதுல்லாகான் அவருக்கே உரிய பாணியில் மகானுக்கு வணக்கம் தெரிவித்தும், மெல்லிய பருத்தியாடையால் மூடப்பட்டிருந்த தங்கத் தட்டை மகான் முன் வைத்து அவர் சார்பாக அதை ஆண்டவனுக்கு அளிக்கும்படி வேண்டிக் கேட்டுக் கொண்டார்.

மகானும் அஸதுல்லாகானை பார்த்து புன்னகைத்து சைகை மூலம் அவருக்காக போடப்பட்டிருந்த இருக்கையில் அமரும்படி இடத்தை சுட்டி காட்டினார். வெங் கண்ண பந்தின் கூற்றுப்படி அஸதுல்லாகான் நிமிர்ந்து கம்பீரமாக பெருந்தன்மையுடன் மகான் முன் அமர்ந்தார். மண்டபத்தில் குழுமியிருந்தவர்கள் அனைவரும் அமைதியுடன் நடக்கயிருக்கும் பூஜையை காண்பதிலேயே கருத்தாயிருந்தனர். மகான் அகக் கண்கள் மூலம் தங்கத்தட்டில் உள்ளதை கண்டு கொண்டதும் புன்னகை பூத்த படி ப்ரண மந்திரத்தை உச்சரித்து கமண்டலத்திலிருந்த நீரையெடுத்து மூன்று முறை தங்கத்தட்டின் மீது தெளித்ததும், அருகிலிருந்த வேலையாளிடம் மூடியிருந்த அந்த மெல்லிய துணியை அகற்றும்படி கூறினார்.

வேலையால் தங்கத் தட்டின் மீதிருந்த துணியை அகற்றியதும் அஸதுல்லாகானைத் தவிர அங்கே கூடியிருந்த அனைவரும் தங்கத் தட்டிலிருந்த பல விதமான பழங்களையும், பூக்களையும் கண்டு மகிழ்ந்தனர். அஸதுல்லாகானுக்கு பயத்தால் குளிர் சுரமே வந்து விட்டது. உடல் வியர்கக, நடுக்கத்துடன் சாதாரண மனிதனைப் போல மகானின் திருவடிகளில் விழுந்து மன்னித்தருளும்படி கெஞ்ச ஆரம்பித்தார்.

'சுவாமி, நான் பலரும் வெறுக்கக்கூடிய அனைத்து கெட்ட குணங்களும் நிறைந்தவன். உங்களை வணங்கி ஆசி பெறுவதற் பொருட்டு யான் இங்கு வரவில்லை. என்னுடைய திவான் உங்களை பற்றி பெரிய மகான் என்று கூறியிருந்தும் இப்பெருங் கூட்டத்தில் உங்களை அவமதித்து அதனால் உங்கள் மனம் புண்படுவதைக் கண்டு இரசிக்கவே வந்தேன். என்னுடைய திவானின் பேச்சையும் ஒரு பொருட்டாகக் கருத வில்லை; நான் சூது நிறைந்தவன்; தயவு செய்து இந்நிகழ்ச்சியை மறந்து என் மீது இரக்கம் காட்டி என்னை மன்னித்தருள கேட்டுக் கொள்கிறேன் ..........என்று பலமுறை கெஞ்சி வணங்கி கேட்டுக் கொண்டார்.

யாரும் ஏதும் அறியாவிடினும், அஸதுல்லாகான் செய்த பெருந்தவரை மகான் அறிந்திருந்தார். இருந்தாலும் ஆதரவாக கானுடன் கலந்துரையாடி பூஜையை நல்லபடியாக முடித்ததும் மகான் கவர்னருக்கு உரிய தகுதிக்கு ஏற்ப சில அன்பளிப்புகளை தந்து வீட்டிற்கு அனுப்பிவைத்தார்.

வேதனை நிறைந்த உள்ளத்துடன் அஸதுல்லா

வீடுவந்து சேர்ந்தார். அன்றிரவு அவரால் நிம்மதியாக தூங்கவே முடியவில்லை. பரமசாதுவுக்கு எதிராக அவர் மனது புன்படும்படி செய்து விட்ட இந்த இழிச்செயலால் என்ன கெடுதல் நிகழுமோ என்று நினைத்து நினைத்து பயந்தார். அந்த தவறுதலுக்காக மிகவும் வருந்தினார் மறு நாள் காலை வேலையாளை அழைத்து உடனடியாக வெங்கண்ணாவை அழைத்து வரும்படி கூறினார்.

வெங்கண்ணா வந்து அஸதுல்லாகானை வணங்கி நின்றார். அஸதுல்லாகான் வெங்கண்ணாவிடம், 'நான் வந்து விட்ட பிறகு உன்னுடைய குரு என்னைப்பற்றி யாது கூறினார்?' என்று வினவினார். அதோடு நான் அவருக்கு எதிராக பாவம் செய்து விட்டேன், என்னை மன்னித்தருளும்படி எனக்காக அவரை கேட்டுக் கொள்வாயா? என்னுடைய செயலால் மனம் வேதனைபட்டு அவர் கோபம் கொண்டிருப்பாரானால் நான் அழிந்து போவேன், என் அரசுக்கு முடிவு காலம் வந்து விடும், என்னுடைய குடும்பம் முழுவதும் அழிந்து பாழாகிவிடும் ........... என்று வெங்கண்ணாவிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்.

வெங்கண்ணா அந்த வார்த்தைகளை கேட்டு திகைப்படைந்தவராய், என்ன ஆயிற்று உங்களுக்கு ஏன் இப்படியெல்லாம் பேசுகிறீர்கள் ? என்னுடைய குரு மிகவும் இரக்கமானவர், கருணை உள்ளம் கொண்டவர் அவருக்கு கோபமே வராது. அவருக்கு கெடுதல் விளைவித்தவர்களைக் கூட கோபம் கொண்டு சபிக்க மாட்டார். என்னுடைய குரு முக்காலமும் அறிந்தவர் நீங்கள் என்னுடைய பிரபு என்பதால் அத்தனை பிராமணர்கள் முன்னிலையிலும் தங்களை ஆசிர்வதித்து கௌர

வித்தாரே ! அவர் உங்களை கோபித்துக் கொண்டிருக்க வேமாட்டார் என்று என்னுல் உறிதியாகக் கூறமுடியும் ........... என்று ஆறுதல் தருவதுபோல பதிலளித்தார்

'நன்று எப்படியானும் சரி, தயவு செய்து என்னுடைய தவறை மன்னித்து ஆசி வழங்கும்படி கேட்டுக் கொள் : அந்த சாதுவுக்கு விலையுயர்ந்த பொருள்களை பரிசுகளாக அளிக்கவேண்டியது கூட நம்முடைய கடமை. சில கிராமங்களை அவருக்கு அன்பளிப்பாக அளிக்கலாமென்று எனக்குதோன்றுகிறது. அவரையே கேள் எந்த கிராமம் அவருக்கு வேண்டும் என்று, என் தவறை மறந்து என்னை மன்னித்து விடுவாரேயானுல் அவருக்கு எதையும் கொடுக்கத்தயாரக உள்ளேன் நான்...........'

'வெங்கண்ணு அஸதுல்லாகானின் பெருந்தன்மையை கண்டு பெரு மகிழ்ச்சி கொண்டார். வீட்டிற்கு சென்று மகானிடம் அனைத்தையும் விளக்கமாக கூறினுர்.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் புன்னகைத்து நன்று வெங்கடேஷ் ஸ்ரீ மூல ராமரின் விருப்பப்படி எனக்கு மாஞ்சாளி கிராமம் ஒன்றே போதும், வேறு ஏதும் தேவையில்லையென்று அஸதுல்லாகானிடம் கூறு.... .. என்ருர்.

வெங்கண்ணு விரைந்து அஸதுல்லாகானிடம் சென்று என்னுடைய குரு நேற்று நடந்தவற்றை மறந்து விட்டார். உண்மையிலேயே உங்களை நல்லெண்ணத்துடன் தான் வாழ்த்திஞர் அவருக்கு மாஞ்சாளிகிராமம் ஒன்று மட்டும் போதுமாம் என்ருர்.

அதை கேட்ட அஸதுல்லாகான் நடு நடுங்கிப் போய்தலை தாழ்த்திக் கொண்டார். மகான் அரசியலி லும் ஆழ்ந்த ஞானம் உடையவர் என்று நன்க தெரிந் துக்கொண்டார். சென்ற ஆண்டு தான் அம் மஞ்சாளி கிராமத்தை ஒரு முகமதியருக்கு இரவலாக தந்து விட்டார். அவரோ அவ்விடத்தில் தர்க்கா ஒன்றை சொந்த செலவிலேயே கட்டிவித்து அங்கேயே தங்கி வாழ்ந்து வருகிறார்.

இப்போது அந்த கிராமத்தை ஒரு இந்துவுக்கு கொடுப்பதென்றால் ........ அதுவும் பரமசாதுவுக்கு கொடுப்பதென்றால் எப்படி சாத்தியமாகும் ? துன்பத் தில் சிக்க வைக்க செய்கிற செயலாக இருக்மோ ? என்று நினைத்தவராக வெங்கண்ணாவை நோக்கி,

'நன்று திவான், மாஞ்சாளி மலைகளும் மணலும் நிறைந்த இடம், எதுவுமே அங்கு விளையாது. மக்கள் தொகைகூட மிகவும் குறைவு. அந்த கிராமத்திற்கு பதிலாக மக்கள் தொகை அதி மான நன்கு விளைச் சல் அளிக்க வல்ல வேறு எந்த கிராமத்தையாவது கொடுக்கிறேன், எந்த கிராமம் வேண்டும் என்று கேட்டுச்சொல், அல்லது நல்ல கிராமம் ஒன்றை நீயே தேர்ந்தெடுத்துக் கொடேன், நகர மானாலும் பாதக மில்லை நான் கொடுக்கத் தயாராக உள்ளேன். மாஞ் சாளியை தவிர. ஏன் இந்நாட்டின் தலைநகரமான அத்வைணியையே கேட்டாலும் மறுக்காமல் கொடுக்க தயாராக உள்ளேன் , இந்த விஷயத்தை இத்துடன் முடித்துக்கொள் ........'

வெங்கண்ணா மறுபடியும் மகானிடம் சென்று அஸதுல்லாகானின் விருப்பத்தைக் கூறினார். மகான்

ஒளிவு மறைவு இன்றி நேரடியாகவே, 'மாஞ்சாளியை கொடுப்பதென்றல் கொடுக்கட்டும், இல்லையேல் அவ டமிருந்து எதுவுமே நமக்கு வேண்டாம், என்று கூறி விடும் படி கூறினர்.

நெடுநேர சிந்தனைக்குப் பின் அஸதுல்லாகான் முல்லாவிற்கு ஆளை அனுப்பி வரவழைத்து அவருக்கு வேறு நல்ல செழுமையான விளை நிலத்தை கொண்ட மக்கள் தொகை மிகுந்த கிராமத்தை கொடுத்து மாஞ் சாளியை திருப்பக் கொடுத்து விடும்படி கேட்டுக் கொண்டார். அவரும் அதற்கு இசைந்துமாஞ்சாளியை திரும்பத் தந்துவிட்டார். ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் மாஞ்சாளி கிடைத்தது பற்றி பெரிதும் மகிழ்ச்சியடைந் தார். குருவை திருப்தி படுத்த முடிந்ததை எண்ணி வெங்கண்ணவும் பெரு மகிழ்ச்சி கொண்டார்.

நாட்டுன் நிதியினை கொண்டு வெங்கண்ண அக் கிராமத்தில் ஒரு பெரிய மடத்தையே கட்டுவித்தார். அதில்தான் மகான் இன்றும் வாழ்ந்து வருகிருர்.

# 11. திருமணம்

மகான் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தருடைய மடத்தி லிருந்தவர்களை தொழில் முறைப்படி பல பிரிவுகளாக பிரிக்கப்பட்டிருந்தனர் நீர் கொண்டு வருபவர் உணவு சமைப்பவர்கள் உணவு பரிமாறுபவர்கள், உணவுக்கு பிறகு தரையை சுத்தம் செய்பவர்கள், பூக்களும் துளசியும் கொண்டுவருபவர்கள், பூஜை நேரத்தில் உதவிசெய்பவர்கள் இப்படியாக பல பிரிவினர் இருந் தனர்'. அவர்களில் பலர் மணமாகி மனைவியை இழந்த வர்கள் சிலர் திருமணமாகாத இளைஞர்கள்'.

ஒரு நாள் மாலை, மதிய உணவிற்கு பிறகு தண் ணீர் கொண்டு வரும் இளைஞன் ஒருவன் அதிக உடல் வலிமையோடு ஒரு பெரிய மரத்தின் நிழலில் இருந்த பாறையின் மீது படுத்திருந்தான். அவ-னுடைய உபயோகமற்ற மூளை சைத்தானைப் பற்றி எண்ணத் தொடங்கியது. சொந்த ஊருக்குச் சென்று ஒருபிராமண பெண்ணாக பார்த்து உடனே திருமணம் செய்துக் கொள்ளவேண்டும் என்கிற அந்த திடீர் எண்ணம் தான் அது.

சந்தேகமே இல்லை, அவன் ஒரு இளைஞன், திருமணம் செய்துக்கொள்ள தகுதியுடையயோக்கிதை உள்ளவன் தான். ஆனால் அவனுக்கோ பெற்றோர்க ளில்லை, உறவினர்களில்லை, படிப்பும் இல்லை உணவை தேடிக்கொள்ள வழியேதும் தெரியாதவன். சொந்த மாக வாழ்க்கை நடத்த வீடு கூட இல்லை. திருமண செலவுக்கும் கையில் மணமும் இல்லாத அனாதை.

ஆனால் உடனே திருமணம் செய்துக்கொள்ள வேண்டும் என்ற குறிக்கோளில் உறுதியாக இருந்தான்.

அந்த எண்ணம் எழுந்த உடனே அந்த இளைஞன் மகானிடமிருந்து விடைப்பெற்றுக்கொள்ளும் பொருட்டு சுவாமிகளுடைய உள்ளறையை நோக்கி ஓடினான். ஆனால் மகானை அவனால் அங்கு காணமுடியவில்லை. அங்கு மிங்குமாக தேடி பார்த்த பிறகு திறந்த வெளிக்கு வந்த போது மகான் மாலை பூஜைக்கு சென்றுக் கொண்டிருப்பதை கண்டான். அந்த இளைஞன் அவரிடம் சென்று அவருடைய பாதங்களில் விழுந்து வணங்கி, எழுந்து 'ஐயா ........ நான் இப்போதே என்னுடைய சொந்த ஊருக்கு சென்று திருமணம் செய்துக் கொள்ள தீர்மானித்து விட்டேன். தயவுசெய்து எனக்கு ஆசி கூறி அனுமதி அளிக்கவும்' என்று கூறினான்.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவனைக் கண்டு நகைத்து 'நல்லது குழந்தாய். உன்னுடைய ஆனந்தமான திருமணத்திற்கு யாம் ஆசி வழங்குகிறோம். ஆனால் இப்போது மாலை வேலைக்கான பூஜையை நிறைவேற்றும் தருணத்தில் யாம் இருக்கின்றோம். உனக்கு தெரியும் உன் திருமணத்திற்கு கொஞ்சம் பணமும் துணிகளும் தேவையென்று, எனவே மடத்திற்கு சென்று காத்திரு. யாம் திரும்பி வந்ததும் தேவையான சில வற்றை தந்து அனுப்பி வைக்கிறோம் என்றார்.

'என்னால் ஒரு நிமிடம் கூட இங்கே காத்திருக்க முடியாது நான் இப்போதே புறப்பட்டாக வேண்டும்

உங்கள் கையில் உள்ளதை கொடுங்கள் அது போதும் என்னுடைய எண்ணம் நிறைவேற உங்களுடைய ஆசீர் வாதம் ஒன்றே போதுமானது தயவுசெய்து என்னை போக அனுமதியுங்களய்யா ........

அந்த தண்ணீர் எடுத்துவரும் இளைஞன் மகான் மீது மிகுந்த பக்தியுடையவன். அவருக்கு மிக்க பணிவுடனும் உண்மையோடும் தொண்டு செய்யக் கூடியவன். இடம் பொருள் அறிந்து பேசக்கூடிய பொது அறிவு சற்றும் இல்லாததுதான் அது தான் அவனிட மிருந்த பெருங்குறை. மகானுக்கு அவன் மீது நல் லெண்ணமும் இரக்கமும் உண்டு: எனவே ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவனுடைய அறியாமையை கண்டு புன்னகைத்து, அவன் நின்று கொண்டிருந்த இடத்திலிருந்து கொஞ்சம் மண்ணை எடுத்து உருண்டையாக்கி ஏதோ ஒரு மந்திரத்தை உச்சரித்து அவனிடம் தந்தார்.

மிகுந்த பயபக்தியோடு அம் மண் உருண்டையை வாங்கித் தன் தலை மீது வைத்து எடுத்து உடுத்திருந்த ஆடையின் ஒரு முனையில் முடித்துக் கொண்டான் அவ்விளைஞன், பின் இறைந்து கிடந்த அவனுடைய துணிகளை மடத்திலிருந்து எடுத்துக்கொண்டு அவ்விடத்தினின்று கால் நடையாகவே புறப்பட்டான் ஒரு பிராமண பெண்ணை பார்த்து மணந்துக் கொள்ளவேண்டும் என்கிற ஒரே எண்ணத்தோடு நடந்தான், நடந்தான், நடந்துக் கொண்டேயிருந்தான். சூரியன் மறைந்து இருளாகிக் கொண்டிருப்பதை பற்றிகூட அவன் பொருட்படுத்த வில்லை. இந்த பரந்த

பூமியில் நட்சத்திரங்களின் ஒளியில் வழியைக் கண்டு வேகமாக நடந்தான். அந்த இரவில் சில மணிநேரங்கள் நடந்த பிறகு நாய்கள் குரைக்கும் சத்தத்தை கேட்டு ஏதோ ஒரு கிராமத்தை நெருங்கிக் கொண்டிருப்பதை யூகித்துக் கொண்டான்.

உண்மைத்தான், யூகித்தபடி ஒரு கிராமம் தென்பட்டது ஒளி விட்டுக்கொண்டிருந்த நட்சத்திரங்களின் மங்கிய ஒளியில் அந்த கிராமத்தினுள் நுழைந்து, பெரிய கதவுகளால் மூடப்பட்டிருந்த மாளிகை ஒன்று கண்டான். அது அக்கிராமத்தின் தேசாய் வீடாக இருக்க வேண்டும். அவன் அவ்வீட்டு கதவிடுக்களில் வழியாக வீட்டினுள் இருப்பவரை கூவி அழைத்தான்

ஐயா ........ யார் உள்ளே ? தயவு செய்து கதவை திறவுங்கள்; நீண்ட தூர பயணத்தால் களைத்து போய் ஒரு பிராமணன் உங்கள் வீட்டு விருந்தாளியாக வந்திருக்கிறேன் ........ ஐயா என்று கத்தியவாறு பலமுறை கதவையும் தட்டினன். ஆனல் பலனில்லை யாரும் அவனுடைய குரலுக்கு மதிப்பு கொடுத்தாகவோ அன்றி அவனை கவனித்ததாகவோ இல்லை மறுபடியும் கதவிடுக்கின் வழியாக உள்ளே உற்று நோக்கினான். கையில் விளக்குடன் அனைவரும் அங்கு மிங்குமாக போவதும் வருவதுமாக ஏதோ காரணமாக பரபரப்புடன் இருந்தனர்.

ஐந்தாறு மணி நேரமாக தொடர்ந்து நடந்தமையால் அவ்விளைஞன் மிகவும் களைத்து இருந்ததால் உறக்கமும் அவனை தழுவியது. அவனுடன் கொண்டு வந்திருந்த தாமிர பாத்திரத்தில் இருந்த நீரை குடித்து

விட்டு, கையிலிருந்த துணிமூட்டையை வாயிற்படியில் விரித்து போட்டு படுத்தவன் சில நிமிடங்களில் ஆழ்ந்து உறங்கியும் விட்டான்.

அவ்வூர் தலைவரான தேசாயின் மனைவி எட்டு முறை கருதரித்து, பிரசவித்த உடனேயே எட்டு குழந்தைகளும் இறந்து போயின. அன்று ஒன்பதாவது முறையாகக் கருத்தரித்து பிரசவிக்க இருந்தாள்; தேசாயும் அவருடைய உறவினர்களும், செவிலியர்களும் குழந்தை உயிரோடு பிறக்க தீவிரமாக முயன்று கொண்டிருந்தனர். எனவே யாரும் இளம்பிராமணன் குரலுக்கு செவி மடுக்கவில்லை.

நடு இரவு கடந்துக்கொண்டிருந்த போது தேசாயின் மனைவி உயிருடன் ஓர் ஆண குழந்தையை ஈன்றெடுத்தாள். அனைவருக்கும் சந்தோஷம் தாளவில்லை அதே சமையத்தில் வாயில் மனையை தலையணையாக கொண்டு ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்த பிராமண இளைஞசன் அப்போது யாரோ மிகுந்த கோபத்துடன் உறுமியவாறு சீறும் சத்தம் அவனது காதில் விழுந்தமையால் விழுத்தெழுந்தான். அவன் கண்களுக்கு மிகப் பெரிய பிரமாண்டமான மனிதனைபோன்றகருப்பு உருவம் நின்றுக் கொண்டிருப்பது தெரிந்தது.

'யார் நீ? ஏன் என்னை எழுப்பினாய்? உனக்கு வேறு வேலையில்லையா?' இளைஞசன் கூறினான்.

தயவு செய்து எனக்கு வழி விடு, நான் உள்ளே போக வேண்டும்.

அது சரி, முதலில் நீ, யாரென்று கூறு.

புனிதமானவனே! உன்னிடம நான் பொய்யுரைக்

கலாகாது, நான் ஒரு அரக்கன் (பிரம்ம ராக்ஷஸன்) இந்த தேசாய் குடும்பத்திற்கு பகைவன். இந்த குடும்பத்திற்கு வாரிசேயில்லாமல் நிர்மூலமாக்குவதற்கே நான் இங்கு வந்தேன். இப்போதுதான் தேசாயின் மனைவி ஒன்பதாவதாக ஓர் ஆண் குழந்தையை பெற்றெடுத்திருக்கிறாள் இதற்கு முன் பிறந்த எட்டு குழந்தைகளையும் கொன்று விட்டேன். உன்னுடைய ஆடையில் நீ நெருப்பு பந்தை வைத்திருக்கின்றாய் எனவே உன்னை கடந்து என்னால் போக முடியாது என்றான் அவ்வரக்கன்.

அப்போது தான் எவ்வளவு மதிப்பு மிக்க ஆஸ்தியை ஆடையினுள் வைத்திருக்கின்றான் என்று அவனுக்கு தெரிய வந்தது உடனே அவ்விளைஞன் இராணுவவீரனை போல நின்று கொண்டு அம்மண்ணுருண்டையை எடுத்து "ஓம் இராகவேந்திராய நமக," என்று உச்சரித்தபடி அந்த அரக்கன் மீது விசி எறிந்தான் அம்மண்ணுருண்டை மேலே பட்ட உடனேயே அந்த பிரம்ப இராஷஸன் அந்த இடத்திலேயே பயங்கரமாக அலறியபடி எரிந்து அழிந்தான்.

அந்த இராக்ஷஸனின் பயங்கர அலறலை கேட்டு வீட்டினுள் இருந்த அனைவரும் விளக்குடன் ஓடி வந்து கதவை திறந்து பார்த்தனர். வாலிப முறுக்கோடு கம்பீரமாகவும் ஒரு இளைஞன் கதாநாயகனைப்போல நின்று கொண்டிருப்பதை கண்டு அவனிடம் அப்போது ஏற்பட்ட பயங்கரமான அலறலை பற்றியும், அவனை பற்றியும் விசாரித்தனர்.

இளைஞன் கூறினான். 'நான் ஸ்ரீ இராகவேந்திர

சுவாமிகளின் மடத்தை சேர்ந்த திருமணமாகாத இளைஞன். அது இருக்கட்டும் சற்று நேரத்திற்கு முன் இந்த வீட்டில் ஆண் குழந்தை பிறந்ததா? முதலில் அதை சொல்லுங்கள் எனக்கு ........

அவன் கேட்ட கேள்விகள் அனைத்திற்கும் எந்த வித மறுப்பும் இல்லாமல் அவர்கள் சொன்ன பதிலை கேட்டதும், தேசாய் குடும்பத்தின் பகைவன் ஒருவன் ர்ராட்ஷவடிவம் கொண்டு வாரிசு இல்லாமல் குடும்பத்தையே நாசமாக்க முடிவு செய்து விட்டான் இதுவரை எட்டு முறை குழந்தை பிறந்த உடனேயே கொன்று விட்டான் ஒபன்தாவது முறையாக மறுபடியும் அவன் வந்தான். நான் வாயில் படுத்திருந்ததால் நேரடியாக வீட்டினுள் அவனால் நுழைய முடியவில்லை. எனவே என்னை எழுப்பி வழி விடும்படி கேட்டான், அவனுடைய கெட்ட நோக்கத்தை அவன் மூலமாகவே தெரிந்துக் கொண்ட நான் தண்டனையாக அவனை எரித்து சாம்பலாக்கி விட்டேன். இப்போது உங்களுடைய ஆண் குழந்தை பாதுகாப்பாகவும் நீண்ட ஆயுளும் பெற்று வாழும்' என்றான்.

தேசாயுக்கு சந்தோஷம் தாளமுடியாமல் அவனுடைய சொற்களை கேட்டதும், அவனை கட்டித் தழுவி மரியாதையோடு வீட்டிற்குள் அழைத்துச் சென்று கௌரவித்தார். தேசாய் அதனைப் பற்றியும் அவன் சொந்த ஊருக்கு போய் கொண்டிருக்கும் நோக்கம் பற்றியும் கேட்டுத் தெரிந்துக் கொண்டார். அதிசக்தி கொண்ட புண்ணியவானாகிய ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தருடைய ஆசி பெற்ற அவ்விளைஞனை விட்டு விட

விரும்பாமல் அவருடனேயே வைத்துக் கொண்டால் அவருடைய குடும்பமும் மண்ணையும் நல்ல முறையில் நீண்ட நாட்கள் பாதுகாப்பாக இருக்குமென்று நினைத்தார் தேசாய்.

எனவே தேசாய் அவருடைய சகோதரனின் மகளையே மணந்துக் கொள்ளும்படியும் திருமணத்தை வெகு சிறப்பாக நடத்தி வைப்பதாகவும் அவ்விளைஞனிடம் கேட்டுக் கொண்டார். பிறகு பெரிய வீடு ஒன்றையும், பண்ணை ஒன்றையும் புதிய மனைவியுடன் சந்தோஷமாக வாழக்கொடுத்ததோடு மட்டுமல்லாமல் தேசாயின் கௌரவத்திற்கு இணையாக அவ்விளைஞ்னையும் நடத்தினர். சாதாரண நீர் கொண்டு வருபவன் புகழ் மிக்க பணக்கார குடும்பத்திலிருந்து அழகான பெண்ணை மனைவியாக அடைந்ததுமல்லாமல் கௌரவமிக்க ஜகீர்தாராகவும் விளங்கினான். அவன் கண் மூடித்தனமாக நடத்துகொண்டானே யாயினும், இவ்வளவும் அவனுடைய குருவின் அருளாசியினால் விளைந்த பயனே யாகும்.

# 12. தீர்த்தம்

தார்வார் மாவட்டத்தை சேர்ந்த சிரகட்டி தாலுக்காவில் உள்ள பிதரகல்வி என்ற கிராமத்தில் கிருஷ்ணாச்சாரியார் என்பவர் திருமலம்பாள் என்ற மனைவியுடன் வாழ்ந்து வந்தார். இந்த தம்பதிகள் ஆழ்ந்த சமய ஈடுபாடுகொண்டவர்கள். தெய்வ பக்தி மிகுந்தவர்கள். ஸ்ரீ மாதவரால் உருவாக்கப்பட்ட சமய சட்ட திட்டங்களை சிறிதும் வழுவாது கடை பிடித்து நடப்பதில் மிக நம்பக்கை கொண்டவர்கள். அவர்கள் குல தெய்வமான திருப்பதி ஸ்ரீனிவாச பெருமானின் தீவிர பக்தர்கள். அவருடைய ஆசியின் காரணமாக கடைசி காலத்தில் ஓர் ஆண்மகவை பெற்றெடுத்தனர் அவர்களுடைய குல தெய்வத்தின் நினைவாக அக் குழந்தைக்கு ஸ்ரீனிவாசன் என்று பெயரிட்டு அழைத்த னர். அக்குழந்தை வளர்ந்ததும் கிருஷ்ணாச்சாரியார் அடிப்படை கல்வியை கற்றுத் தந்தார். பிறகு ஸ்ரீ மாதவ சித்தாந்தங்களை போதிக்கும் பொருட்டு எக்குண்டியில் வாழ்ந்து வந்த மகான் ஸ்ரீ யாதவராய ரிடம் ஸ்ரீனிவாசனை ஒப்படைத்தார் கிருஷ்ணாச்சா ரியார். ஸ்ரீ யாதவராயர் மனிதனை போன்ற ஒரு முனி வர் தான் அவர் இல்லற நாழ்க்கையில் பங்கு கொண்ட குடும்பஸ்தர். பழங்கால சன்னியாசிகளுக்கு உரிய முறையில் அவரும் வாழ்ந்து வந்தார், நேன்பு இருப்ப திலும்; தியானம் செய்வதிலும், கர்ம அனுஷ்தானங் களை கடை பிடிப்பதிலும் சன்னியாசிகளுக்கு இணை யாக விளங்கினர். இவர் வேதியாசருடைய பக்தரும் அவரை வழிபடுபவருமாவார்.

எப்போதெல்லாம் ஸ்ரீ வேதியாசரை பார்க்க வேண்டும் என்று எண்ணுகிருரோ அப்போதெல்லாம் ஸ்ரீ வேதியாச கடவுள் அவருக்கு காட்சியளிப்பார்.

அத்தகைய சிறப்பு வாய்ந்த மனிதனைபோல வாழ்ந்து வந்த மகான் ஸ்ரீ யாதவராயர் பிதரகல்வியிலிருந்து வந்த சீனிவாச ஆச்சாரியாரை அவருடைய சீடர்களுள் ஒருவராக ஏற்றுக்கொண்டார். சிறுவன் சீனிவாச ஆச்சாரியாருக்கு புரிந்துக் கொள்ளும் சக்தியையும் ஆவலையும் கண்டு அவனுக்கு ஸ்ரீ மாதவ சித்தாந்தங்கள் முழுவதையும் கற்றுத் தந்து முழு சித்தாந்த வாதியாக மாற்றுவதாக ஆசி கூறியதோடு மட்டுமல்லாமல் அவனிடம் தனி பரிவும் காட்டினுர். ஸ்ரீ மாதவ சித்தாந்தங்கள் முழுவதும் கற்று தேர்ந்த சீனிவாச ஆச்சாரியார் பிதரகல்வி திரும்பிய பின் குருவை போலவே ஒரு நல்ல குடும்பத்தில் பெண் பார்த்து மணம் செய்துக் கொண்டு இல்லற வாழ்வை நடத்தலானுர்.

பிதரகல்வி சீனுவாச ஆச்சாரியார் குரு எக்குண்டி ஸ்ரீ யாதவராயருடன் தீகாச்சாரியாரையும் ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தரையும் போல ஸ்ரீ மதானந்த தீர்த்தரின் நூல்கள் அனைத்திற்கும் விளக்க உரை எழுதினுர் சீனுவாச ஆச்சாரியார் இராகவேத்திர தீர்த்தரை பற்றி அவர் ஒரு கடவுளின் அவதாரம் என்றும், கடந்த, நடக்கின்ற நடக்க இருக்கும் முக்காலங்களையும் பற்றியும் நன்கறிந்த முக்காலமும் உணர்ந்த ஞானி என்றும் சபிப்பதிலும், அருளாசி வழங்குவதிலும் சக்தியுள்ளவர் என்றும் ஸ்ரீ மாதவ சித்தாந்தத்தில் அளவிடற் கரிய

ஞானமுடையவர் என்றும், அவர் பெற்றுள்ள புண்ணிய யங்கள் மலைகள் போல குவிந்து கிடக்கின்றன வென்றும் அவருடைய மகிமையை பற்றி பலவாறு கேள்விப்பட்டிருத்தார்.

பிதரகல்வி ஸ்ரீனிவாச ஆச்சாரியார் அடிக்கடி மாஞ்சாளிக்குச் சென்று ஸ்ரீ மாதவ சித்தாந்தங்கள் பற்றி விவாதிப்பது வழக்கம். சில சமையங்களில் நாள் கணக்காக, மாதகணக்காக பல புண்ணியவான்களுடன் மாஞ்சாளியிலேயே தங்கிருந்து திரும்புவதும் உண்டு. இப்படித்தான் ஒரு முறை பிதரகல்வி சீனுவாச ஆச்சாரியார் மாஞ்சாளியில் தங்கிருந்தபோது ஒரு நிகழ்ச்சி நடந்தது.

ஒரு முறை ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவர் எழுதிய குறிப்புகளை மறுபடி புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்த போது சில திருத்தங்கள் செய்ய வேண்டும் என்று தோன்றியதால் பேனாவும் மையும் கொண்டுவர அருகே எவரேனும் இருக்கின்றனரா என்று சற்றும் முற்றும் பார்த்தார். சற்று தூரத்தில் பிதர கல்வி சீனிவாச ஆச்சாரியார் அமர்ந்து படித்துக் கொண்டிருந்தார். அவரை தவிர வேறு யாரும் அங்கு இல்லையாமையால் மகான் அவரை அழைத்து பேனா மையும் அனுப்பி வைக்கும் படி கூறினார். ஸ்ரீனிவாச ஆச்சாரியார் எழுந்து சென்று அவர் அணிந்திருந்த ஆடையை நீக்கி நனைந்த வேட்டியை கட்டிக் கொண்டு பிறகு தபறி என்னும் ஒருவகையான மரவுரியை தரித்துக் கொண்டு பேனாவையும் மை கூட்டையும் எடுத்து வநது ஸ்ரீ ராகவேநதிர தீர்த்தரிடம் தநதார்.

மகான் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவருடைய செயலை கண்டு ஆச்சரியம் அடைந்தவராக ஓ.... ஆச்சாரியாரே; உங்களை இந்தபேனாவையும் மைக்கூட்டையும் எடுத்துவரும்படி யாம் பணிக்கவில்லையே? அனுப்வைக்குபடிதானே கூறினேன். அது தானிருக்கட்டும் பேனாவையும் மைகூட்டையும் கொண்டுவருவதற்கு நனைந்த உடையையும் மரவுரியையும் தரித்து ஏன் புனித கோலம் பூண வேண்டும்? எதற்காக இப்படி? என்று வினவினார்.

'ஆமாம் சுவாமிகளே!

ஆகவே இந்த மை புனிதமானது. தினமும் குளித்து முடித்தபிறகே எழுதுவதற்காக இந்த மைக்கட்டையை எடுப்பேன். அது போல எழுத வேண்டியதை எழுதி முடித்தஉடனேயே புண்ணிய இடமான கடவுளுக்கு அருகிலேயே வைத்து விடுவேன். வேறு யாரும் ஏன் நான் கூட அதற்கு பிறகு அதைதொடக்கூடாது, தொட மட்டேன்........

'அப்படியா! உங்களுடைய இநத மையும், பேனவும் அவ்வளவு புனிதமானல் இவைகளால் எழுதப்பட்ட எழுத்து எவ்வளவு சிறப்புயுடையதாக இருக்க வேண்டும்? தயவு செய்து இந்தமையால் எழுதப்பட்டவைகளை எடுத்து வாருங்கள், யாம் படித்துப் பார்க்க விழைகிறேன்..... ..

சீனுவாச ஆச்சாரியார் மிகுந்த ஆர்வத்துடனும் உற்சாகத்துடனும் சென்று தாம் எழுதிய நோட்டு புத்தகங்களை எடுத்து வந்து ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர்

முன் பணிவாக வைத்தார். ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவருடைய விமர்சனங்களை தொடர்ந்து சில நாட்கள் படித்தார். ஸ்ரீ மாதவ சித்தாந்தங்கள் பற்றிய இந்த உயர்ந்த விளக்க உறையை கண்டதில் பெரு மகிழ்ச்சி கொண்டார்.

அந்த சிறந்த விளக்கங்களை கண்ட ஆனந்தத்தால் கண்களில் கண்ணீர் பெருகெடுக்க ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர், 'ஆச்சாரியாரே ! உண்மையிலேயே மிகவும் உயர்ந்தவர் தாங்கள் மாதவ சித்தாந்தங்களில் ஈடு இணையற்ற நுண்ணறிவு கொண்டவர். சித்தாந்தங்களை கற்று தேர்ந்தமையால் உங்களுடைய வாழ்க்கை தூய்மையானது, நோன்பு இருப்பதாலும் ஆண்டவனை தியானிப்பதாலும், கர்ம அனுஷ்தானங்களை தினமும் கடைப்பிடிப்பதிலும் உங்கள் வாழ்க்கை தூய்மையானது நீங்களும் சன்னியாசியை போன்றவர்தான் உங்களுடைய என்றும் அழிவில்லா விளக்க உரையை படிப்பதாலும், உங்களுடன் இருப்பதாலும் நான் மிகவும் பெருமகிழ்ச்சியடைகிறேன்'. என்று புகழ்ந்துரைத்தார்.

மறு நாள் கடிதங்கள் மூலம் பலருடன் தொடர்பு கொண்டு ஒரு பெரிய கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தார் அந்த திறந்த வெளி மாநாட்டில் பிதர கல்வி சீனுவாச ஆச்சாரியாரைப் பற்றி இதய பூர்வமாக பாராட்டி பேசினார். சன்னியாசிகள் மட்டுமே அமர்வதற்காக செய்யப்பட்ட பின் புற மரத்தால் ஆன ஆசனத்தில் அமரச்செய்து. 'தீர்த்தர்' என்ற பட்டத்தை பெயருடன் இணைத்து கௌரவித்தார். அது மட்டுமல்லாது,

ஓரங்களில் தங்க சரிகைகளால் நெய்யப்பட்ட விலையு யர்ந்த கம்பளிப் போர்வை ஒன்றை அவருக்கு போர்த்தி வெள்ளித் தட்டு நிறைய காசுகளை நிறப்பி, தட்சணை யாக அளித்தார்.

அது முதல் அவர் திருமணமாகி மனைவியுடன் வாழ்ந்து வந்தாலும்; பலராலும் பிதரகல்வி சீனுவாச தீர்த்தர் என்று சிறப்பாக அழைக்கப்பட்டு புகழடைந் தார். ஸ்ரீனுவாச தீர்த்தர் எதிர்பாராத விதமாக கிடைத்த இந்த வெகுமதிகளாலும் பெருமைகளாலும் பேராணந் தம் அடைந்தார். இவ்வளவு பெருமையும் மதிப்பும் அவருக்கு கல்வி புகட்டிய குரு ஸ்ரீ யாதவராயரையே சாரும் என்று எண்ணியதால் அவருக்கு தம் நன்றி யை தெரிவிக்கும் பொருட்டு, மாஞ்சாளியை விட்டு எக்குண்டிக்குச் சென்றுவர சீனுவாச தீர்த்தர் தீர்மா னித்தார்.

மூக்தியை அடைவதற்கு முன் சஞ்சிதம், ஆகாமி பிராப்பதம் என்கிற மூன்று வித கர்ம வினைகளின் பய ஞக மனிதன் துன்பப்பட வேண்டியுள்ளதாக சொல் லப்படுகிறது.

சஞ்சித, ஆகாமி கர்ம வினைகள் சக்தி வாய்ந்த குருக் களின் ஆசீர்வாதங்களாலோ அல்லது புண்ணியங்களை பெறுவதன் மூலமோ நீக்கி அழித்து விடலாம். ஆனல் எவ்வளவு பெரிய மகாஞக இருந்தாலும் சரி அல்லது எவ்வளவுதான் புண்ணியங்களை குவித்திருந்தாலும் சரி, பிராப்தம் என்கின்ற கர்மவினையை அனுபவித்து உணர்ந்தாலொழிய முக்தியை அடைய முடியாது.

எவ்வளவுதான் நற்குணங்களும், திறமைகளும் பிதர கல்வி ஸ்ரீனுவாச தீர்த்தர் பெற்றிருந்தாலும் அவருக்கு பின்னிருந்த பிராப்தம் என்ற கர்ம வினை கெட்டதாக இருந்தது. பிதரகல்வி ஸ்ரீனுவாசருடைய குடும்பம் உத்தராதி மடத்தை சார்ந்ததாக இருந்தது. இப்போது இருக்கின்ற ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளுடைய மடம் தக்ஷிணாதி மடம் என்று பலராலும் அழைக்கப்பட்டு வந்தது.

எல்லா வைஷ்ணவர்களிடையே சமய ரீதியாக விரதம் இருப்பது வழக்கமாக இருந்தது. அதாவது சில உணவு வகைகளை வருடத்தின் சில மாதங்களில் உண்ணுமல் தவிர்த்து விடுவது. உதாரணமாக ஆஷாட சுதா துவைதசி மாதம் முதல் ஸிரவண துவைதசி மாதம் முடிய புளிப்புச் சுவையையும் பச்சை மிளகாயையும், கடுகையும் உணவில் சேர்த்தக் கொள்ளாமல் நீக்கி விடுவார்கள். இந்த வகையான சில உணவு பொருள்களை தவிர்த்து உண்ணும் வழக்கத்திற்கு 'விரதம்' என்றழைப்பார்கள். எல்லா சமைய பற்றுள்ள வைணவ மடத்தை சேர்ந்தவர்கள் இந்த விரத முறையை கடைப்பிடிப்பது வழக்கம். ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தருடைய காலத்தில் கடுகை உண்பது தவிர்க்கப்பட்டது. அதாவது ஆஷாட சுதா மாதம் முதல் ஸிரவண சுதா மாதம் முடிய உள்ள விரத காலங்களில் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தருடைய மடத்தை சேர்ந்தவர்கள் கடுகை உணவுடன் சேர்த்து உண்டனர். தக்ஷிணாதி மடத்தை சேர்ந்தவர்கள் கடுகு தவிர்க்காமல் விரதம் மேற்கொள்வதற்கான ஒரு கதை சொல்லப்படுகிறது. பதினைந்தாம் நூற்றாண்டின் போது விஜய நகர அரசர்கள் நாட்டை ஆட்சி

செலுத்திய சமயம் ஸ்ரீ வியாச ராஜர் அவருடைய ஆசிரியரான ஸ்ரீ வாதிராஜ தீர்த்தருடனும், புரந்தர தாசர் என்கின்ற பக்தி பாடல் ,ளை கன்னடத்தில் இயற்றிப் பாடி புகழ் பெற்ற க பீருருடனும் கலந்து உரையாடுவது வழக்கம். அச்சம யங்களில் இவர்கள் தினமும் சிறிது நேரம் சித்தாந்தங்கள் பற்றியும் ஸ்ரீ ஹரிவாயுக்களினுடைய மாயை பற்றியும் பயனுள்ள வழியில் விவாதிப்பது வழக்கம். ஒரு முறை இப்படி விவாதித்துக் கொண்டிருந்த போது பிறப்பு, மறுபிறப்பு பற்றி பேச்சு எழுந்தது. ஸ்ரீ வியாசராச தீர்த்தர் 'நம்மு டைய வாழ்க்கையின் கடைசி கால் வரை ஸ்ரீராமரை வழிபட்டாலும் முழுமையான திருப்தி ஏற்படுவதில்லை ............' என்றார்.

'அப்படியானல் நீங்கள் மறுபடியும் இவ்வுலகில் பிறப்பெடுப்பீர்கள்'. என்றார் கனகதாசர்.

இந்த பிறவி முடிந்ததும் ஸ்ரீ புரந்தர தாஸர் எல் லோருடைய நலனுக்காக முக்தி பெறுவார் இல்லையா?

அது எப்படி முடியும்? இன்னும் அவர் ஆறு பிறவிகள் எடுக்க வேண்டுமே.......

மகான் வாதிராஜ தீர்த்தரின் நிலை என்னவோ,

ஓ........ அவர் இன்னும் இளமையானவர், அவர் இவ்வுலகில் இன்னும் ஆயிரம் ஆண்டுகளுக்கு மேல் வாழ வேண்டியுள்ளது. அவரைப் பற்றி இப்போது நினைக்கவேண்டும்?

அதிருக்கட்டும் கனகதாஸரே ! நீங்கள் மறுபடி யும் ஒரு முறை பிறவி யெடுங்கோன்... ....

ஏதற்காக ஆட்டிடையனாக இன்னும் ஒரு பிறவி யெடுக்க வேண்டும் ஐயா, எல்லோருடை நன்மை யின் பொருட்டு என்னை போகவிடுங்கள்.

ஆட்டிடையனோ அல்லது தெரு கூட்டுபவனோ எங்களுக்கு தெரியாது. யாம் கூறுகிறோம், நீங்கள் மறுமடியும் பிறக்க வேண்டும் கனகதாசரே........ இப்படியாக வியாசராஜ தீர்த்தர் கட்டளை யிட்டார்.

இது தான் அவர்களுடையே அன்று நடந்த உரையாடல் மகான் வியாச ராஜ தீர்த்தர் மறு படியும் ஸ்ரீஇராகவேந்திர தீர்த்தர் என்ற பெயரில் பிறப்பெடுத் தார். ஒரு சமயம் சதூர்மசய விரத நாட்களின் போது மகான் ஒரு கிராமத்தில் இருந்த (கிராமத்தின் பெயர் தெளிவாக தெரியவில்லை) கோயிலில் விரதத்தை மேற் கொண்டிருந்தார். அப்போது தெரு கூட்டுபவன் (தோட்டி) கைநிறைய கடுகுடன் வந்து அவனுக்கு கிடைத்தது அதுதான்என்று கூறி மகானிடம் தந்தான் அப்போது முற் பிறப்பில் கொடுத்த சத்தியத்தை நினைவு படுத்திய பின் கடைசி மூச்சையும் விட்டு விட்டான். அவனுடைய ஆத்மா எமலோகம் சென்றது.

ஸ்ரீஇராக வேந்திர தீர்த்தர் அந்த கடுகை எடுத்து கடுகுசேர்க்கா விரதநாளாக இருந்தாலும்பரவாயில்லை யென்று கூறி அன்றைய உணவில் சேர்க்கும் படி கூறினார். அப்போது முதல் தக்ஷிணாதி மடத்தில் விரதத்தின் போது கடுகு தவிர்ப்பது கிடையாது.

இந்த கதை எந்தளவிற்கு உண்மையென்று நமக்குத் தெரியாது. ஆனால் ஸ்ரீ ராகவேந்திர

தீர்த்தருடைய மடமாகிய தக்ஷிணாதி மடத்தில் கடுகு நீக்கி விரதமிருப்பது நீக்கப்பட்டதென்னவோ உண்மை.

பிதரகல்வி சீனுவாச தீர்த்தர் ஆஷாட சுதா தசி நாளில் உணவை முடித்துக்கொண்டு மாஞ்ராளியை விட்டுப் புறப்பட தீர்மானித்தார். உணவின் போது பிதரகல்வி சீனுவாச தீர்த்தர் வழக்கம் போல ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தருக்கு எதிரில் அமர்ந்தார். எல்லோரும் உணவருந்த தொடங்கினர். உணவு பரிமாறுபவன் சைவ ரசம் கொண்ட வந்து அனைவருக்கும் பறிமாறினன். அப்போது ஸ்ரீனிவாச தீர்த்தருக்கும் பறிமாற எத்தனித்த போது சீனுவாச தீர்த்தர் பரபரப்புடன் உணவு பறிமாறுபவனிடம்.

'இதில் கடுகு கலக்கப்பட்டுள்ளதா ? என்று வினவினர்,

'ஆம் ஐயா'....

'அப்படியானல் யான் இவை உட்கொள்ளேன் விரத நாட்கள் கடுகு சேர்த்துக்கொள்ளல் கூடாது.'

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் இதைக் கேட்டு இடைமறித்து உணவு பறிமாறுபவனிடம், சீனுவாச தீர்த்தர் உத்திராதி மடத்தை சேர்ந்த பக்தர் என்று நீ அறியாயோ ? கடுகு சேர்க்கப்படாத ரசம் கொண்டு வந்து கொடு,' என்றார்.

உணவு பறிமாறுபவன் கடுகுசேர்க்காத ரசம் கொண்டுவந்து சீனுவாச தீர்த்தருக்கு பறிமாறினன். உணவு முடிந்த பிறகு சீனுவாச தீர்த்தர் அவசரமாகவே புறப்பட தயாரானர். மகான் பால மந்திராக்ஷம் தந்து

மரியாதையுடன் வழியனுப்பி வைத்தார். நான்கைந்து நாட்கள் பயணத்திற்கு பிறகு சீனிவாச தீர்த்தர் எக் குண்டிக்கு வந்து சேர்ந்தார்.

ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தர் அவருடையமாணுக்கன் கடவுளுக்கு நிகரான ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரால் கௌரவிக்கப் பட்டுள்ளார். முதலிலேயே கேள்விப் பட்டிருந்தார். எனவே அவரை மகிழ்வுடன் வரவேற்க் கும் பொருட்டு அவருடைய வரவை எதிர் நோக்கிக் காத்திருந்தார். சீனுவாச தீர்த்தர் ஸ்ரீ யாதவராய தீர்த்தரை அணுகியதும் அவருடைய பாதங்களில் விழுந்து வணங்கினர். ஸ்ரீனிவாச தீர்த்தர் நீண்ட தூரம் பயணம் செய்து வந்திருந்த போதிலும் அவருடைய முகத்தை பார்த்ததும் ஸ்ரீ யாதவராய தீர்த்தர் கலக்க மடைந்து கூறலானுர்.

'யாது நிகழ்ந்தது ? உனக்கு என்னவாயிற்று தூரவே நில், என்னை தொடாதே உன் வீட்டில் யாரே னும் இறந்து விட்டனரா ? அன்றி நீ ஏதேனும் குற்ற புரிந்தனையா அல்லது ஐந்து மகா பாதகங்களை செய்து விட்டாயா ? என்ன விஷயம் ? உன் முகத்தை பாவ கெட்டக்ககற்று சூழ்ந்திருப்பதன் காரணம் யாது?

ஏதும் நிகழ்வில்லையே குருதேவா ! நான் தூய்மை யானவன்: அது மட்டுமல்ல, ஸ்ரீ இராகவேந்திர தீர்த் ரால் மரியாதையுடன் கௌரவிக்கப் பட்டவன். அவர் பலர் முன்னிலையில் எனக்கு தீர்த்தர் என்ற சிறப்பு பெயரையும் சூட்டி கௌரவித்தார். பல பரிசு பொருள் களுடன் மகிழ்சிவுடன்தான் என்னை வழியனுப்பி வைத்தார் அவர்.........'

'நடந்த அனைத்தையும் நான் அறிவேன், ஆனால் ... .... நன்று மாஞ்சாளியை விட்டு புறப்படுவதற்கு முன் மகானிடமிருந்து பால மந்திராக்ஷத்தை பெற்ற னையா ?'

ஆம் குருதேவா இதோ பாருங்கள்' என்று கூறிய படி ஆடையின் முனையை அவிழ்த்து காட்டினார். ஸ்ரீனுவாச தீர்த்தருக்கு அதை பார்த்த போது திகிலும் அதிர்ச்சியும் அடைந்தார். அது சிகப்பாக இருப்பதற்கு பதில் கருப்பாக மாறிருந்தது. ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தர் யூகித்துக் கூறலானார். ' நீ மகானிடமிருந்து கெட்ட தை சம் ாதித்திருக்கிறாய், மாஞ்சாளியில் நீ என்ன செய்தா ? யாது நிகழ்ந்தது ? ஒன்று விடாமல் எண்ணிடம் கூறு. நான் நீ செய்த குற்றத்தை கூறு கிறேன்....'

ஸ்ரீனுவாச தீர்த்தர் கடுகுரசம் வேண்டாம் என்று மறுத்தது உள்பட அனைத்தையும் ஒன்று விடாமல் ஸ்ரீ யா வராய தீர்த்தரிடம் கூறினார்.

'ஆ........ அது தான், மகான் முன் இப்படி மரி யாதையின் நடக்கலாமா ? மகானின் வழியை பின் பற்றாமல் அவர் முன் உன் பிரத்தியோக குணத்தை காட்டிருக்கின்றாய், அவர் முன்பு நீ உத்திராதி மடத்தை சேர்ந்தவன் என்பதை பிரித்துக் காட்டிருக் கிறாய், அதோடு விரதத்தின் போது கடுகு சேர்த்துக் கொள்ளலாகாது என்று சுட்டி வேறு காட்டிருக்கிறாய், முட்டாள் தனமாக நடந்துக் கொண்டாயே ! ஸ்ரீ இராக வேந்திர தீர்த்தர் பற்றி நீ என்ன நினைத்துக் கொண் டிருக்கிறாய் ? மற்றவர்களை போல அவர் என்ன

சாதாரண சன்னியாசியா? அவர் முக்காலும் உணர்ந்த சர்வ ஞானி. அவர் நினைத்தாராஞல் உன்னை எரித்து சாம்பலாக்கக் கூட முடியும். ஆனல் அவர் மிகவும் கருணைஉள்ளம் கொண்டவர். நீ அறிவாயா, சர்வ வல்லமை கொண்ட ஆண்டவனே அவருக்கு பின்னல் இருக்கிருர் என்பதை. இவ்வளவும் ஒருபுறமிருந்தாலும் அவர் ஒரு தூய சன்னியாசி, நீயோ கிரகஷ்தன். சன் னியாசிகளுக்கு முன் எப்படி நடந்துக்கொள்ள வேண டும் என்று உனக்கு தெரியாதா? இவைகளையெல்லாம் மறந்து விட்டு நீ நடந்துகொண்ட முறை சரியில்லை. போ........ மாஞ்சாளிக்கு சென்று அவருடைய பாதங் களில் விழுந்து மன்னித்தருளும்படி கெஞ்சிக் கேட்டுக் கொள். பிறகு என்னிடம் வா ........ என்று அறிவுரை கூறி மறுபடியும் மாஞ்சாளிக்கு அனுப்பிவைத்தார் ஸ்ரீ யாதவராயதீர்த்தர்.

சீனிவாச தீர்த்தர் உண்மையிலேயே மிகவும் நல்லவர், தூயவர், நன்நடத்தையாளர், இரக்கமுள்ள இதயம் கொண்டவர், அமைதியான வாழ்க்கையை நடத்தி வருபவர், ஆனல் அவருடைய முற்பிறப்பின் பரரபாத கர்ம வினையின் பயனல் அவரே அறியா வண்ணம் நிகழ்ந்து விட்ட நிகழ்ச்சி இது. உடனே சீனிவாச தீர்த்தர் மாஞ்சாளிக்கு ஓடிச்சென்று மகான் ஸ்ரீஇராகவேந்திர தீர்த்தருடைய திருவடிகளில் விழுந்து வணங்கி மன்னிக்கும்படி வாய் விட்டு அழத் தொடங்கினர்.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவரை கண்டு புன் னகைத்து எழுந்திருக்கும் படி சைகை செய்து

'உன்னுடைய வித்ய குருதான் உன்னை மறுபடியும் இங்கு உன்னை அனுப்பித்தார் இல்லையா ? ' என்றார்.

'சுவாமி, முக்காலமும் அறிய வல்ல தாங்கள் அறியாததா ? நான் புத்தியில்லாதவன், முட்டாள் என்னுடைய இந்த தவறான நடத்தைக்காக எக்குண்டிக்கு அனுப்புவதற்கு பதிலாக இங்கேயே எனக்கு தண்டனை அளித்து விடுங்கள், தயவு செய்து என் மீது கருணை காட்டி நடந்ததை மறந்து என்னை மன்னித்தருளுங்கள்........ என்று மீண்டும் மீண்டும் வேண்டிக் கேட்டுக்கொண்டார்.

அதே நாளில் சீனிவாச தீர்த்தரை மகான் முன்னிலையில் அமரும்படி செய்து உணவு பரிமாறப்பட்டது ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தருக்கும் பரிமாறப் பட்டது போலவே கடுகு சேர்க்கப்பட்ட ரசம் அளிக்கப் பட்டது உணவு முடிந்த பிறகு ஸ்ரீனிவாச தீர்த்தர் மகான் முன் வந்து பணிவுடன் கைகட்டி நின்றார். ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் சன்னியாசிகளிடம் எப்படி நடந்துக் கொள்ள வேண்டும் என்பது பற்றி அறிவுரை கூறிய பின் பால மந்திராக்ஷத்தை அவருக்கு அளித்து மகிழ்ச்சியுடன் வழியனுப்பிவைத்தார்.

# 13. விருந்தினர்கள்

அக்காலங்களில் ஒவ்வொரு சமய வாதியும் கோயில் களுக்கும், புண்ணியதலங்களுக்கும், புண்ணிய நீராடு தற்பொருட்டு பல புண்ணிய நதிகளுக்கும் யாத்திரை செல்வது வழக்கம். போக்குவரத்து வசதிகள் இல்லாத இடங்களுக்குகூட மாட்டுவண்டிகள் மூலமோ அல்லது கால் நடையாகவோ பல வருஷங்கள் பயணம் செய்து சென்றடைவதுண்டு. இப்படி புண்ணிய தலங்களை நாடி மேற்கொள்ளும் பயணத்திற்கு 'தீர்த்த யாத்திரை என்று பெயர். இப்படியாக, நல்ல புகழ் மிக்க குடும் பத்தில் பிறந்த மாதவ சித்தாந்தங்களில் தேற்சி பெற்று அந்நெறியினின்றுவழுவாது கடுமையாக பின்பற்றுபவர் களும் சமயப் பற்றும் தெய்வ பக்தியும் நிறைந்தவர் களுமாகிய மூவர் தென்னிந்தியாவிலிருந்து தீர்த்த யாத்திரை மேற்கொண்டனர். அவர்கள் யாத்திரை யை தொடர்ந்து பெல்லாரியை நெருங்கிய போது ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் என்ற புகழ் மிக்க மாதவ சன் னியாசி ஒருவர் அத்வைணிக்கு அருகில் உள்ள மாஞ்சாளி என்ற இடத்தில் இருப்பதாக கேள்விப்பட் டனர், எனவே துங்கபத்திரை நதியில் புனித நீராடி அவ்விடம் சென்று அம்மகானை கண்டு செல்ல முடிவு செய்து மாஞ்சாளி நோக்கி பயணத்தை தொடர்நதனர் மாஞ்சாளியை நெருங்குவதற்குள் மகானைப்பற்றி அதி கம் கேட்டுத் தெரிந்துக் கொண்டனர், மகானின் மகத் துவம் பற்றியும், நோன்பு, தியானம் போன்ற வற்றில் அவர் செய்த சாதனைகள் பற்றியும் அருளாசி வழங்கு வதிலும் அவர் பெற்றுள்ள அதிக படியான சக்தியை

பற்றியும் மாதவ சித்தாந்தங்களில் அவருக்கு இருந்த ஆழ்ந்த ஞானம், எல்லாமறிந்த அபரோக்ஷ ஞானம் கொண்டவரென்றும தெரிந்துக் கொண்டனர்.

இவைகளனைத்தும் கேள்விபட்டு மகான் மீது பக்தி பூர்வமான பயமும், ஆச்சரியமும் அடைந்த போதிலும், அம்மகான் அவ்வளவு உயர்நதவராக இருக்க முடியாது. பணம்பறிப்பதற்காக அவரை சார்ந் தவர்கள் பரப்பி விட்ட வதந்தியாகத்தான் இருக்கும் இது, மக்களிடம் நல்மதிப்பை பெற கூறப்பட்ட பொய் களாக இருக்கக் கூடும் என்று நினைத்தனர்,

எப்படி இருந்தாலென்ன ? அவர் ஒரு மாதவ சன்னியாசி, சென்றுதான் பார்த்து செல்வோமே! என்ன குறைந்து விட போகிறது ? அதோடு மக்களி டம் பரப்பப்பட்டுள்ள இச் செய்திகள் உண்மையாக இருக்கக் கூடுமோ என்று தெரிந்துக் கொள் அவரு டைய திறமையை சோதித்து பார்க்கவும் ஒரு வாய் பாக இருக்கட்டுமே ........' என்ற முடிவோடு மாஞ் சாளியை நோக்கி வேகமாக நடை போட்டனர். போகும் போது அம்மகானை சோதிப்பதற்காக ஒரு திட் டம் தீட்டினர் ஆளுக்கொரு விதமான உணவை மன நினைத்துக் கொண்டு மஞ்சாளிமடத்தில் நாம் கேட்கா மலேயே நாம் நினைத்துள்ளதையே நமக்கு பரிமாறு கிறார்களா என்று பாரக்க வேண்டும். அப்படி நாம் எண்ணியதை வழங்குவாரானல் சர்வமும் அறிந்த ஞானி என்று ஒப்புக்கொள்வோம். இன்றேல் அதுவே இவ்வுலகில் உள்ள பலரை போல ஒருபோலிசாமியார் என்று நிர்மாணமாகி விடும்.

' ஆமாம்.... .. ஆமாம்....அதன் படியே செய்து பார்ப் போம்........' என்று மூவரும் ஒருமனதாக தீர்மானம் கொண்டு ஆளுக்கொரு உணவை அவர்கள் மனதில் எண்ணிக் கொண்டனர். அவர்கள் மாஞசாளியை அடையும் போது நன்பகல் வேளை. குளித்து பூஜை யை முடித்த பின் சுவாமிகளை பார்ப்பது நல்லது எனக் கருதி தங்களுடன் கொண்டு வந்திருந்த பொருட்களை ஒரு மடத்தின் ஒரு மூலையில் வைத்து விட்டு நேராக துங்கபத்திரை நதிக்கு வந்து சேர்ந்தனர்.

நதிக்கரையில் நின்று கொண்டுருந்த சுவாமிகளின் ஆடைகளை துவைப்பவன், இப் பெருந்தன்மை மிக்க வர்களை நோக்கி 'மேன்மை மிக்க ஆச்சாரியார்களே நீங்கள் விரும்பிய உணவு வகைகள் முதலிலேயே செய்ப்பட்டு தயாராக உள்ளது. விரைவாக குளித்து முடித்து உணவருந்த வாருங்கள், என்று சொல்லிய தும் கையிலிருந்த மகானின் ஆடைகளை படிக்கல் மீது வைத்து விட்டு நின்ருன்.

அம்மூன்று யாத்திரிகர்களும் அதிசயத்து ஆச்ச ரியம் அடைந்ததோடு மட்டுமல்லாமல் பயமும் கொண்டு ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர் பின் அவர்கள் ஒருவர் 'ஆ' கொஞ்ச நேரத்திச்கு முன் என்ன சொன்னுய்? யார் கூறியது உனக்கு எங்க ளுக்கு தனித்தனியே குறிப்பிட்ட உணவு வேண்டு மென்று? என்ருர் அச்சிறுவனைப்பார்த்து.

ஒன்று மறியா அப்பாவிப்போலத் தோன்றிய அச் சிறுவன், ஏன்ன ஐயா? நான் என்ன சொன்னேன் நீங்கள் யார் எங்கிருந்து வருகீறீர்கள் என்று வினவினுர்

அவனுடைய இந்த வார்த்தையை கேட்டதால் யாத்திரிகர்கள் அவனுடைய தோற்றத்தை கொண்டு அவன் அம்மடத்து வேலைக்காரன் என்று தெரிந்து கொண்டு அதற்கு மேல் அவனிடம் பேசவிரும்பாமல் அவனையும் பொருட்படுத்தாமல் குளிப்பதற்காக ஆற்றினுள் இறங்கினர். அம் மடத்து பையன் மீண்டும் மகானின் ஆடைகளை எடுத்து தலையில் வைத்துக் கொண்டு போக எத்தனித்தபோது மீண்டும் அம் மூன்று யாத்திரிகர்களை பார்த்து. 'நல்லது ஆச்சரியார்களே.... உச்சி வேளை கடந்து விட்டது, மகான் குளித்துமுடித்து ஆண்டவனை தொழுவதற்காக அவருடைய இருக்கையில் அமர்ந்துள்ளார். எனவே சீக்கிரமாக குளித்து விட்டு நேரத்தோடு வந்து சேருங்கள் உங்களுடைய விருப்பப்படியே செய்து வைக்கப்பட்டுள்ள உணவை மகான் வழங்குவார்....' என்று சொல்லிவிட்டு அவர்கள் பதிலுக்குக்கூட காத்திராமல் நடந்து சென்று விட்டான்.

மூன்று யாத்திரிகர்களும் ஒன்று மறியாத துணி துவைப்பவன் கூறிய புதுமையான வார்த்தைகளை கேட்டு நடுக்கம் கொண்டனர். கையில் ஒன்றுமில்லாத நின்ற போது எதுவுமே அறியாதவன் மகானின் ஆடைகளை தொட்ட மாத்திரத்திலேயே எல்லாம் அபரோக்ஷ்ஞானியை போல பேசுகிறானே.... சன்னிதானத்தில் மகானின் சக்தி எவ்வளவு அபரிதமாக இருக்ககூடும்! கொழுந்து விட்டெரியும் நெருப்பு சுவாலை போன்ற அம்மகானைத் தான் பார்த்தப் போக வந்திருக்கிறோம். என்று எண்ணியவாறு குளித்து அங்கேகம்

செய்து முடித்துக்கொண்டு பயம் மிகுந்தவர்ளாக மடத்தை நோக்கி சென்றனர்.

மகானே அவர்களை முன்னமேயே சந்தித்துப் பழகியவர்களை போல வரவேற்று, 'பிரமணர்களே ... .... மதிய உணவிற்காக சரியான நேரத்திற்கு தான் வந்து சேர்ந்திருக்றீர்கள். நீங்கள் எங்களுடைய விருந்தினர்கள். தயவு செய்து உணவிற்காக அமருவீர்களாக ! என்று கூறி அவர்களை சிறப்பான இருக்கைகளில் அமரச் செய்து அவர்கள் தனித்தனியே எண்ணியிருந்த உணவை உண்ண உணவு மரிமாறுபவனிடம் கூறி, எப்போதும் மடத்தில் தரப்படும் உணவோடு சேர்த்து தரும்படி கட்டளை யிட்டு உணவருந்த அவருடைய இருக்கைக்கு சென்று விட்டார்.

அம் மூவரும் மகானின் உபச்சாரங்களை கண்டு வாயடைந்துப் போயினர். ஏதேனும் கெட்ட காலம் வந்துவிட்டதோ என்று கூடபயந்தனர். உணவை முடித்ததும் மகானை நோக்கி ஓடிச்சென்று அவருடைய திருவடிகளில் விழுந்து சுவாமி ........ நாங்கள் குற்றம் செய்த குற்றவாளிகள், தயவு செய்து மன்னித்தருள வேண்டும் தாங்கள் தங்களுக்கு மரியாதை செலுத்தி ஆசி பெற வரவில்லை. உங்களுடைய தகுதியையும் தவ வலிமையையும் சோதிக்கவே வந்தோம். நாங்கள் செய்து விட்ட தவறுக்காக மிகவும் வருந்துகிறோம் உங்களை மிகவும் வேண்டிக் கேட்டுக்கொள்கிறோம் எங்கள்மீது கருணை காட்டுங்கள் நாங்கள் வேலைக்காரர்களாக உங்களுக்கு தொண்டு செய்ய விரும்புகிறோம் தயவு செய்து அனுமதித்து ஆசி வழங்கும் படி

வேண்டுகிறோம்.' என்று சொல்லியபடி அழத் தொடங்கிவிட்டனர்.

'நல்லது பிராமணர்களே! யாம் அறிவோம் நீங்கள் நல்லவர்கள், மேன்மை மிக்கவர்கள் என்று ஏதோ சில கெட்ட சக்தி தான் இந்த பாவ செயலை செய்ய நினைக்க வைத்தது. இது எல்லோருக்குமே சாதாரணமாக நிகழக்கூடியது தான். அந்த கெட்ட சக்தியால் தான் இப்போது குற்றவாளியாகி விட்டீர்கள். வேறொன்றுமல்ல. இப்போது நீங்கள் எண்ணிய எண்ணத்திற்காகவும் செய்த செயலுக்காகவும் உணர்ந்து வருந்துகின்றீர்கள் நன்று யாம் உங்களை ஆசீர்வதிக்கிறேன், உங்கள் விருப்பப்படியே யாம் உங்களின் பணிவிடைகளை ஏற்றுக்கொள்கிறோம் ஆனால் இப்போதல்ல இன்னும் சில வருடங்களில் யாம் பிருந்தாவனத்தில் இருப்போம்' நீங்கள் மாஞ்சாளியில் தங்கிருந்து வருடம் ஒருவராக மாற்றி மாற்றி வழிபாடு செய்வீர்களாக ........' என்று சொல்லி மகான் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் பால மந்திர தொடர்ந்து யாத்திரை மேற்கொள்ளும்படி அருளிச் செய்தார்.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் பிருந்தாவனத்தில் நுழையும் முன் அவர்களை பிருந்தாவனத்திற்கு உரி உடையவர்களாகவும், புரோகிதராகவும் நியமணம் செய்தார். அவரவர்களுக்கு நிலமும், தனித்தனியாக மூன்று வீடுகளையும் கட்டித் தந்து பிருந்தாவன கன்காணிப்பதற்காக இன்றும் பிற வசதிகளும் செய்து தந்தார். அவரவர்களுக்கு ஆராதகர் என்ற சிறப்பு பெயரையும் தந்து அவர்களுக்குப் பிறகு அவர்களின்

பரம்பரையே அவர்களுடைய பணியை தொடர்ந்து செய்து வரும்படியும் கட்டளையிட்டார். மேற்கண்ட பணியை,சுவாமிகளே அவருடைய கையால் மூன்று உரிமைபத்திரங்கள் அவர்களுடைய பெயருக்கு எழுதி மடத்தினுடைய முத்திரையையும் பதித்து மூவரிடமும் ஆளுக்கு ஒவ்வொன்று தந்தார் இப்போதுபிருந்தாவன மந்திராலயத்தில் உள்ள .புரோகிதர்கள் அந்த மேன்மை பொருந்திய பிராமணர்கள் வழிவந்தவர்கள் தான். அவர்களிடம் ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் அளித்த உரிமை பத்திரங்கள் இன்னும் இருக்கிறது.

# 14. சோதிடர்கள்

இக் காலம் கேரளம் என்றழைக்கப்படும் மலை யாளம் அக்காலத்திலிருந்தே சோதிடம், கைரேகை, ஆருடம், கடவுள் கொள்கை; பில்லி சூனியம், மாயம் சூன்னியம், மாந்திரீகம், தந்திரம் போன்ற கலைகளில் பேர் பெற்று விளங்கியது. மலையாளத்து பிராமணர்கள் சிலர் இன்றும் மேற்கூறிய கலைகளில் வல்லுனர்களாக விளங்குவது கண்கூடு.

பதினேழாம் நூற்றுண்டின் இடை காலத்தில் சோதிடக் கலையில் மிகுந்த வல்லுநர்களையும் ஜாத-கங்களை பார்த்து எதிர் காலத்தை மிகத்துள்ளியமாக கணக்கிடுவதில் தேற்சி பெற்றவர்களாகவும் மூன்று மலையாள பிராமணர்கள் வாழ்ந்து வந்தனர். அவர்கள் இந்தியா முழுவதும் பயணம் மேற்கொண்டு தம் பெரு மைகளைபறை சாற்றியும், அந்தந்த பகுதிகளில் வாழ்ந்து வந்த அறிஞர்களையும் சோதிட வித்துவான் களையும் விவாதத்திற்கு அழைத்தும் பெரும்பாலும் சொற்போர்களில் அவர்களே வென்றும் வந்தனர்.

இவ்வாறு சோதிடப் புலவர்கள் பயணம் மேற் கொண்டு தக்காணம் வந்த போது மஞ்சாளி மகானின் பெருமைகளை கேள்விப்பட்டு அவரை பார்க்க முடிவு செய்தனர். அதோடு முடிந்தால் அவருடைய மடத்தில் சோதிட வல்லுநர்கள் எவரேனும் இருப்பின் அவர்க ளுடன் விவாதிக்கவும் முடிவு செய்தனர். எனவே அவர்கள் நேராக மஞ்சாளிக்கு வந்து ஸ்ரீ இராகவேந் திர தீர்த்தரை கண்டு அவர்களே அறிமுகம் செய்துக் கொண்டனர்.

ஸ்ரீ இராகவேந்திரர் மிக்க மகிழ்ச்சியுடன் வரவேற்று தம் மடத்திலுள்ள பண்டிதர்களுடன் விவாதத்திற்கு ஏற்பாடு செய்வதாகவும், மறு நாள் அவர்கள் சோதிட டத்தில் அவர்களுக்குள்ள புலமையை வெளிப்படுத்த லாமென்று கூறினார். தம்மைப்பற்றியும் தாம் அவதரித் திருக்கும் நோக்கம் பற்றியும் மக்களுக்கு சிறு விளக்க மளிக்க இதுவே தக்க தருணம் என்று ஸ்ரீ இராகவேந் திரர் நினைத்துக் கொண்டார். இதனால் மக்கள் தம்மை பற்றி ஓரளவு அறிந்துக் கொள்ளக் கூடுமென்றும் அதன் பின் உலகின் நலனுக்கு எவ்வாறு அவர்களை பயன் படுத்தக் கூடுமோ அதன் வழி நடத்த எளிதாக கூடுமென்றும் அவர் கருதினார்.

மறு நாள், உணவருந்திய பின் மாஞ்சாளியையும் அதனை சுற்றியும் உள்ள கிராமங்களிலும் வாழ்ந்துக் கொண்டிருந்த கல்வி கேள்விகளில் சிறந்த அறிஞர் பெருமக்களை - குறிப்பாக சோதிடக் கலைஞர்களை - அழைத்து கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தார். அதன் படி அங்கே கூடிய அப்பெரும் கூட்டத்தின் மத்தியில் அம் மூன்று மலையாள சோதிடர்களும் மிகுந்த படோ டோபத்துடனும் பகட்டுடனும்அவர்களுடையபெருந் தன்மைக்கேற்ப தற்பெருமை மிக்க கம்பீரத்துடன் அமர்ந்திருந்தனர். ஸ்ரீ இராகவேந்திரர் அம் மூன்று வல்லுநர்களையும் கூட்டத்தினருக்கு அறிமுகம் செய் வித்து பின் ஒரு ஜாதகத்தை தருவித்து அதை மூன்று பிரதிகளாக்கி ஒவ்வொன்றினையும் ஒவ்வோர் சோதிட புலவரிடம் தந்து அந்த ஜாதகத்திற்குரியவனின் ஆயுளை கணக்கிடும்படி கேட்டுக் கொண்டபின்

அவர்களை தனித்தனியறையில் இருக்கச் செய்து வெளியே பூட்டி விட்டனர். சோதிடத்தை கனிக்க அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட கால அளவு அரை மணி நேரம்.

அரை மணிக்கு பிறகு கதவுகள் திறந்து சோதிடர் களை கூட்டத்தினர் முன் வந்து அமரும்படி கூறினர் மலையாள பண்டிதர்கள் உண்மையிலேயே வல்லுநர் களாதலால் அந்த ஜாதகத்தை மிகவும் கவனமாக ஆராய்ந்து மிகத்துள்ளியமாகக் கணக்கிட்டு வைத்தி ருந்தனர். அவர்க்ள் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் முன் வந்து அமர்ந்ததும் அவர்களுடைய சோதிட முடிவுகளை வெளியிட தயாரானர். முதல் சோதிடர் எழுந்து கூறினர்.

ஐயன்மீர் ! என்னுடைய கனிப்புப்படி இந்தஜாத கனுடைய ஆயுள் நூறு ஆண்டுகளாயினும், மக்களின் கண்களுக்கு முன்னல் எழுபத்தி மூன்று ஆண்டுகளே தெரிவான்.........

இரண்டாவது சோதிடர் இடைமறித்து, தவறு.... தங்களுடைய கணிப்பு தவருனது. இச்ஜாதகத்திற்கு உரியவன் நீண்ட ஆயுள் உடையவன் எழுநூறு ஆண்டுகள் வாழ்வான். என்று உரைத்தார்

இல்லவே இல்லை, நீங்கள் இருவருமே தவருக சொல்கின்றீர்கள் என்று சொல்லிய மூன்ருமவர் சற்று மௌனத்திற்கு பிறகு :

இந்த ஜாதகத்திற்குரியவன் முன்னூறு ஆண்டு கள் வரை வாழக் கூடும் என்ருர்.

கூட்டத்தினர் அனைவரும் ஒரு நிமிஷம் பேச்சிழந்து நின்றனர். பின்னர் அனைவரும் இம்மூன்று பண்டிதர்களை பற்றி தமக்குள்ளாகவே நிந்தித்து பேசலானர் பலர் அவர்களை நோக்கி,

ஒரே ஜாதகத்திற்கு மூன்று விதமான முடிவுகள் எப்படியிருக்க முடியும் நீங்கள் சொல்வது தவறு. உங்களைபண்டிதர்கள் என்று எங்களால்ஒப்புக்கொள்ளமுடியாது? என்று கத்தினர். அப்போது ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் குறுக்கிட்டு, 'அப்படி யாரும் கூறலாகாது, அவர்கள் உண்மையான திறமை மிக்க பண்டிதர்களே, அவர்களை வீணே தாக்கலாகாது ..........' என்று கூறினர்.

'அது எப்படி முடியும் குருவே?........ நல்லது அது யாருடை ஜாதகமென்று கூறுவீர்களா ?'

ஸ்ரீ மூல ராமரின் எளிய பக்தனை இந்த துறவியினுடையது தான். என்று ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவருடைய நெஞ்சை தொட்டு காட்டியபடி கூறினர்

கூட்டம் முழுவதும் திடுக்கிட்டு ஆச்சரியத்துடன் பயம் கலந்த பக்தியுடனும் ஸ்ரீ இராகவேந்திரரை இம்மூன்று வகையான கணிப்புகளின் முடிவுகளுக்கான விளக்கங்களை கூறுமாறு கேட்டுக்கொண்டனர்

சுவாமிகள் கூறலானர்.

பாருங்கள் ........ பொதுவாக மனித இனத்திற்கு வரையறுக்கப்பட்டுள்ளவாறு முதலாமவர் கூறிய கணிப்புப்படி யாம் உங்கள் முன்னிலையில் சாதாரண மனிதர்களுடைய கடமைகளை நிறைவேற்றும் பொருட்டு மனிதர்களை போல யாமும் குறுகிய காலம்

வாழ்வோம். அதன் பின்னர் இரண்டாமவர் கூறியது பிருந்தாவனத்தில் எழு நூறு ஆண்டுகள் வாழ்ந்து நம்மை நாடி வருபவர்களுக்கு அருளாசி வழங்க வேண்டும், அவர்களுடைய உலகியல் துயரங்களை துடைத்துக் கொண்டும் அவர்களுக்கு அர்த்தம், காமம் மோட்சம், லாபம் என்கிற புருஷர்த்தங்களை வழங்கிக்கொண்டும் தியான பக்தி, வைராக்கியம், ஆகியவற்றை எம்மை நாடி வரும் பக்தர்களுக்கு அருளி அவர்களை வீடு பேருடைவதற்கான பாதையில் செலுத்திக் கொண்டிருப்போம், மூன்றமவருடைய கனிப்புயாதெனில் யாம் எழுதிய நூல்கள் அனைத்தும் முன்னூறு ஆண்டுககளில் பிரபலப்படுத்தப்பட்டு பெருமை பெரும் என்பதாம்... ....

'ஐயன்மீர் அதன் பிறகு ........

அதன் பிறகு இத்தனையென்று வரையறுத்துக் கூற இயலாத கால் அளவிற்கு யாம் இயற்றிய நூல்கள் பக்தியையும் முக்தியையும் நாடும் மனித இனத்திற்கு வழிகாட்டிகளாக நின்று என்றும் நிலைந்திருக்கும். இவன் குழுமியுருக்கும் அறிஞர் பெருமக்களே ! இச்சோதிட புலவர்களை சாதாரணமானவர்கள் என்று கருதுதல் வேண்டாம், இவர்கள் இத்துறையில் ஈடு இணையில்லா திறமை கொண்டவர்கள். என்று கூறி அவர்களுக்கு விலையுயர்ந்த சால்வையை தந்து கௌரவித்து ஆசீர்வதித்து வழியனுப்பி வைத்தார்.

இவ்வாறு அன்றைய கூட்டம் முடிய, அக்கூட்டத்தில் பங்கேற்ற அனைவரும் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவர்கள் சாதாரண துறவியல்லர், இறைமை தன்மை பெற்ற பெருமகனார் என்றும். அவரால் அளவிடற்கறிய புண்ணியங்களை தாம் பெருதல் கூடுமென்று அறிந்தவர்களாக பல முறை வணங்கி அவரவர் இல்லம் ஏகினர்.

# 15. பிந்ருதாவனம்

மகான் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அத்வைணிக்கு அருகில் உள்ள மாஞ்சாளிக்கு வந்துள்ளார் என்பதை கேள்வி பட்டதும் வெங்கண்ணு பந்த் மிகவும் மகிழ்ச்சி யடைந்தார் அடிக்கடி பாஞ்சாளி சென்று மகானுக்கு சேவை செய்வதை வழக்கமாக கொண்டார், இதனுல் இவர் மகானின் உள்ளத்தில் தனியிடத்தையே பெற்ற தோடல்லாமல் அன்பார்ந்த நம்பிக்கைக்குறிய ஆப்த னுகவும் திகழ்ந்தார் இதனுல் வெங்கண்ணு பந்த் வாழ் கையில் எல்லா நலன்களும் பெற்றதோடு மட்டுமல் லாமல் முக்த ஜீவமும் எய்தினுர்.

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தரால் மிகவும் கவரப்பட்ட மற்ருெரு நபர் பிராமண குலத்தில் உதித்த பெரியார் அப்பண்ணுச்சாரியார் ஆவார். உதிர்த்த குணங்கள் கொண்ட அவர் தூரமையானவர், சாந்தமானவர். சமயத் துறையில் மிகவும் ஈடு பாடு கொண்டவர்; ஸ்ரீ மாதவ சித்தாந்தங்களை நெறிவழுவாது கடைப்பிடிப்பவர் துவைத்த தத்துவத்தில் மிகவும் தேற்சி பெற்றவர் சமஸ்கிருதத்தில் பிறவிக் கவிஞர் மகானுடன் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்ட செல்வாக்குடையவர் துங்கபத்திரை நதியின் கரையில் மாஞ்சாளி கிராமத் திற்கு நேர் எதிரில் அமைந்துள்ள பிச்சாலே என்ற கிராமத்தில் பிறந்தவராஞலும் அவர் மகானுக்கு தொண்டு செய்தற்காகவே ஒவ்வொரு நாளும் அதிக படியான நேரத்தை மாஞ்சாளியிலிலேயே செலவிடு வதை வழக்கமாக கொண்டார்.

கிருத யுகத்தின் போது வெங்கண்ணு பந்தும், அப்பண்ணுச்சாரியாரும் ஸ்ரீபிரகலாதராஜவின் இளமை

நண்பர்கள் என்றும், நேரடி உபதேசங்களை பெற்றவர் கள் என்றும் பலராலும் கூறப்படுகிறது. கலியுகத்தில் அவர்களுடைய மகானுக்கு அதாவது ஸ்ரீ பிரகலாத ராஜாவின் அவதாரமான ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தருக்கு அவருடனேயே இருந்து சேவை செய்யும் பொருட்டு பிறவி எடுத்ததாக கூறப்படுகிறது.

சங்கு கர்ணன் இந்த பிறவியை எடுத்ததன் நோக்கமே அவருடைய அனுஷ்ட புண்ணியங்களை இந்த அவதாரத்திலேயே பக்தர்களுக்கு அளித்து தீர்த்து விட வேண்டும் என்பதற்காகத்தான். இப்படி அவரை அனுகி அவருடைய பாதங்களை தொட்டு வழிபடுபவர்களுக்கு புண்ணியங்கள் அனைத் தையும் அறிந்த பிறகுதான் அவர் பிரம்மனிடம் பழைய இடத்தை சென்றடைவார் அவரிடம் குவிந் துள்ள அந்த அனுஷ்ட புண்ணியங்களை தீர்ப்பதற் காகவே மறுபடியும் பூமியில் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்த ராக பிறப்பெடுத்து சர்வதிகாச்சர்ய பீடத்தில் ஐம்பத்தி ஏழு ஆண்டுகள் அமர்ந்து, உடலாலும் உள்ளத்தாலும் ஸ்ரீ மூல இராமரை வணங்கி, வழிப்பட்டு அவரை நாடி வரும் பக்தர்களுக்கு புண்ணியங்களை வழங்கியபடி இன்னும் இருக்கிறார் ஸ்ரீ தீகாச்சாரியாரின் விமர்சனங் களுக்கு படித்து புரிந்து கொண்டு அதன் வழி நடந்து முக்தி பெறும் வழியை எளிதாக பல விளக்கங்களுடன் எழுதியதோடு மட்டுமல்லாமல் ஸ்ரீ ஹரி வாயுகளின் பரிபூரண நிலையையும் அவர்களை பற்றிய தெளிந்த அறிவையும் பலரும் அறிந்துக் கொள்ளும் பொருட்டு எளிய முறையில் ஸ்ரீ தீகாச்சாரியாரின் சேவ மோத

கிரந்த ஸ்ரீ மச்சாந்த தீர்த்த சர்யகா பற்றி விளக்கங்களும் எழுதியுள்ளார்.

மக்களுடையகண்களுக்கு தெரியுபடியாக இருந்து செய்யும் தொண்டு முடிவு பெறும் நிலைக்கு வந்து விட்டதாகவும் இனிமேல் பிருந்தாவனத்தினுள்ளிருந்து செய்ய வேண்டியதே மீதியிருப்பதாகவும், மகான் உணர்ந்தார் பிருந்தாவனத்திற்குள் இருந்து செய்ய வேண்டிய இந்த தொண்டு எழு நூறு ஆண்டுகள் நீடிக்கும் என கணக்கிட்டார். எனவே பிருந்தாவனம் அமைந்நற்பொருட்டு வெங்கண்ணு பந்தை அழைத்து வர ஆள னுப்பி வைத்தார்.

திவான் வெங்கண்ணு பந்த் மகான் முன் வந்து பணிவுடன் கைகட்டி நின்றார்.

நல்லது வெங்கடேஷ், இவ்வுலகின்று நான் மறையும் காலம் நெருங்கி விட்டது எனவே பிருந்தாவனம் அமைப்பதற்கான அனைத்து ஏற்பாடுகளையும் செய்வாயாக ........

வெங்கண்ணு பந்த் அது கேட்டு அழத் தொடங்கி விட்டார். 'தாங்கள் இவ்வுலகை விட்டு மறைந்த பின் யான் எப்படி வாழ்வேன் சுவாமி' என்றார்.

ஓ... ஏன் அழுகிறாய்? நான் இறக்கமாட்டேன் யாம் தொடர்ந்து வாழ்வோம்! யாம் சொல்வது யாதென்று சற்று கவனமாகக்கேள்.... நன்று. முதலில் பிருந்தாவனம் அமைப்பவற்கு நல்ல கற்களை சேகரிக்க வேண்டும். துவா தஷ ஷேத்ர சாலிகிராம கற்கலாலும், நாராயன், வாசுதேவன், நரசிம்மன், ஹக்கிய வதன போன்ற வேறு எழுநூறு வகை சாலிகிராம

கற்களேயும் கண்டக நதியிலிருந்து எடுத்து வர வேண்டும் மற்ற பொருள்கள் யாவும் அத்வைணியிலி ருந்து பெற்றுக்கொள்ளலாம் ........

இவைகளெல்லாம் உண்மையில் தாங்களுக்கு எப்போது தேவை குரு தேவா ?........

எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாக............

வெங்கண்ணு பந்த் வேதனை'நிறைந்த உள்ளத் துடன் மாஞ்சாளியை விட்டுப் புறப்பட்டுச் சென்ருர் அவருடைய குரு அவரை விட்டு வெகு விரைவிலேயே பிரிந்து விடுவார் என்று நினைத்தார், அதற்காகவே மிகவும் வேதனைப்பட்டார். கடமையின் உந்தல் கார ணமாக சாலிகிராம கற்களைப்பற்றி நன்கு அறிந்த சில பிராமணர்களை இமயமலேயில் ஓடுகின்ற கண்டக நதிக்கு அனுப்பி தேர்ந்தெடுத்த நல்ல சாலிகிராம கற்களை கொண்டு வரும்படி செய்தார். சிறந்த கை தேர்ந்த கல்லுடைப்பவர்களே கொண்டு அழகிய வேலேப்பாடுகளுடன் பெரிய பிருந்தாவனம் ஒன்றை அமைத்தார். வெகுவிரைவிலேயே பிருந்தாவன வேலே முடிவு பெற்று விட்டது. வெங்கண்ணு பந்த் அதை அவருடைய மகானுக்கு காண்பித்தார்.

'ஓ........ எவ்வளவு அழகாக அமைத்திருக்கிருய்? அருமையாகவும் பிரகாசமாகவும் உள்ளது. இதுவும் யமக்காக இருக்கட்டும், என்று கூறிய ஸ்ரீ இராகவேந் திர தீர்த்தர் வெங்கண்ணு பந்த் அழைத்துக் கொண்டு துங்கபத்திரை நதிக்கரையில் மாஞ்சாளியில் இருந்து ஐந்தாறு மையில் தொலேவில் இருந்த மாதவர் என்ற

கிராமத்திற்குச் சென்றூர் இருவரும் ஆற்றை அடைந்தனர். ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் கரையிலிருந்து ஆற்றினுள் சற்று தொலேவில் இருந்த பிரகாசமில்லாத மங்கிய பாறை ஒன்றை காண்பித்தார்,

'நம்முடைய பிருந்தாவனமும், ஸ்ரீ மாருதி விஹாரகமும் இந்த கல்லில் செதுக்கி எமக்கு முன் அமைக்கபட வேண்டும் ............ என்று ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் சொன்னதை முடிக்குமுன்னே.

'சுவாமி ! முதலில் செதுக்கி அமைக்கப்பட்டுள்ளவற்றை என்ன செய்வது ? என்று வெங்கண்ணு பந்த் இடைமறித்தார்.

அதுவும் எமக்குத்தேவை ! அது எமக்குப்பின் வர இருக்கிற ஐந்தாவது பீடாதிபதிக்குப் பயன் படும் என்றூர்.

வெங்கண்ணா பந்த் இரண்டு மூன்று முறை அந்த மங்கிய கல்லே சுறறிப் பார்த்தபின்.

ஐயா.... இந்த பாறை பிருந்தாவனம் அமைப்பதற்கு போதுமான கனம் இல்லேயே.... அதோடு பிராகசிக்கத் தக்க கருமை நிறமின்றி மங்களாக அல்லவா இருக்கிறது. இருந்தாலும் இந்த பாறையில் தான் பிருந்தாவனம் அமைக்கவேண்டும் என்கிறீர்கள் காரணத்தை யான் அறியலாமோ ? நம்மிடம் தான் இதைவிட பெரிய பிராகசிக்கத் தக்க கருமை நிறம் கொண்ட வேறு பாறை இருக்றதே........

இல்லே வெங்கடேஷ். யாம் இந்த பாறையில் தான் பிருந்தாவனம் அமைக்க விழைகின்றூம். உனக்குத் தெரியுமா ? திருதயுகத்தில் ஸ்ரீ இராமரும்

இலட்சுமணனும் சீதையை தேடி இவ்வழியாகத்தான் வந்தனர் பல மணி நேரங்கள் இடைவிடாமல் நடந்த தால் களைத்து போன அவர்கள் சற்று நேரம் இப் பாறை மீது அமர்ந்து இளை பாரினர் ஆகை பால் இப் பாறை மிகவும் புனிதமானது எனவே தான் பிருந்தா வனத்தின் மேல் தளமாக இதனை அமைக்க யாம் விழைகிறோம்...........

வெங்கண்ணு பந்த் இக்கதை கேட்டு மிகவும் ஆச்சிரியம் அடைந்தார். அதோடு அவருடைய குரு மீது கொண்ட பக்தியின் காரணமாக அவருடைய திரு வடிகளின் மீது தலைப்பதித்து வணங்கி கட்டளையை சிரமேற்கொண்டார்.

பிருந்தாவனமும், மாருதி விஹரகமும் அந்த பறையில் செதுக்கப்பட்டு தயாரானது. ஸ்ரீ இராகவேந் திர தீர்த்தர் பூர்வாசிரம சகோதரனுடைய அதாவது குருராஜா அச்சாரியாருடைய மூன்றுவதும் கடைசியு மான மகன் வெங்கண்ணுச்சாரியரை வரவழைத்து சன்னியாசத்தை அவரிடம் தந்து ஸ்ரீ யோகேந்திர தீர்த்தர் என்ற பெயரில் பீடாதிபதியாக்கி ஸ்ரீ மூல ராமரையும் ஏனைய மற்ற விஹரகங்களையும் பூஜை செய்யும் உரிமையையும் அவருக்கே உரியதென பல ரும் அறயும் படி பிரகடனப்படுத்தினர்.

இதை கேள்வியுற்றதும் குருவின் கடைசி நாள் நெருங்கி விட்டது என வெங்கண்ணு பந்த் தெரிந்துக் கொண்டார். ஆகவே அவருடைய குடும்பத்துடன் மாஞ்சளியிலேயே தங்கிருந்து மகானுக்கு தொண்டு செய்ய தீர்மானித்தார்.

மகான் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் வெங்கண்ணா பந்தைஅழைத்து இரகசியமாக, பிருந்தாவனத்திற்குள் பூமிக்கடியில் அமர்த்து தியானம் செய்வதற்கு ஒரு அறை அமைக்கும்படி கேட்டுக் கொண்டார். அந்த இடம் தான் ஸ்ரீ பிரகலாத இராஜா கிருதயுகத்தில் புண்ணியங்களை சேர்க்க யாகங்கள் போன்ற பல நிகழ்ச்சிகள் நடத்திய இடமாகும். மகான் கூறிய படியே பூமிக்கடியில் பிருந்தாவனத்திற்குள் உள்ளறை ஒன்று கட்டப்பட்டது. எல்லாவேலைகளும் முடிக்கப் பட்டு பிருந்தாவனம் குறைகளேதுமின்றி தயாரான நிலையில் இருந்தது.

விரோதி நமசம்வட்சர் ஷாவணபகுல துவித்யு ஷா ஆண்டு 1593 செய்வாய்க்கிழமை (ஆகஸ்டு மாதம் கி.பி. 1621 இல்) விடியற்காலை மகான் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் அவருடைய பக்தர்களையும் சிஷ்யர்களையும் அழைத்து உயிருடன் பிருந்தாவனத் தில் நுழைய இருப்பதை கூறினர்.

வெங்கண்ணு பந்த் குழந்தையை போல அழத் தொடங்கி விட்டார். அது கேட்ட மகான் அவருக்கு துணிவுடனும் நெஞ்சில் திரனும் கொண்டு இருக்கும் படியும், எப்போதெல்லாம் மகானுடன் பேச விரும்பு கின்ருயோ அப்போதெல்லாம் கணவில் தோன்றி பேசுவதாகவும் உறுதியளித்து ஆறுதல் கூறினர். பிறகு கடைசி முறையாக மகான் அவருடைய பக்தர் களுக்கி தனித்தனியே அவர்களுடைய தகுதிகுட் திறமைக்கும் ஏற்ப உபதேசங்கள் வழங்கியதோடு மட்டுமல்லாமல் பால மந்திராக்ஷத்தையும் அருளிச் செய்தார்.

பின், மகான் ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் குளித்து முடித்து ஸ்ரீ மூலராமரை முழு மனதுடனும், மனத் திருப்தியுடனும் வழிப்பட்டார். பின் ஜபமாலையை கையில் ஏந்திய படி பிருந்தாவனத்தின் உள் அமைக் கப்பட்டுள்ள உள்ளறையின் பத்மாசனத்தில் சென்று அமர்ந்து தியானம் பெய்யத் தொடங்கினார். அவர் தியானம் செய்யத் தொடங்கிய அடுத்த வினாடியே அசம்பிரதன சமாதி நிலையை அடைந்தார். உடனடி யாக உள்ளறையை கற்பலகையால் மூடி சாத்திட்டு பூசினர். துவா ஷ ஷேத்ர சாலிகிராமங்களாலும், வேறு பல வகைப்பட்ட எழுநூறு சாலிகிராம கற்களாலும் அமைக்கப்பட்ட மற்ற தெய்வங்களை உள்ளறையை சுற்றி வைத்து பிருந்தாவனத்தை மருத்திகா Murttika வால் முத்திரையிட்டனர்.

அங்கு குழுமியிருந்த அனைத்து பிராமணர்களும் வேதங்களை ஓதினர். மணி ஓசை காதை பிளந்த நகரி நவபதிகள் அதிர்ந்தன. காஞ்சி ஊதப்பட்டன. இவை களின் ஒலிகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து சொர்க்-கத்தை எட்டுவனவாக இருந்தன.

புதியதாக நியமிக்கப்பட்ட சன்னியாசி ஸ்ரீ யோ கேந்திரதீர்த்தர் முன் வந்து பதினாறு வகை பூஜைகளை செய்வித்து பிருந்தாவனத்தை வழிப்பட்டார். பிறகு ஸ்ரீ மூலராமரையும் மற்ற கடவுட்சிலைகளையும் பிருந் தாவனத்தின் மீது வைத்து பஞ்சாமிர்த அபிஷேகங் களையும், ஜல அபிஷேகங்களையும், பக்தியோடும் வேதனையோடும் ஸ்ரீ குரு இராகவேந்திர சுவாமி களுக்கு ஸ்ரீ யோகேந்திர தீர்த்தர் செய்துவித்தார்.

பிறகு நெய்வேதம் (பிரசாதம் வழங்குதல்) முடித்துக் கொண்டு அனைவருக்கும் ஹஸ்டலோகம் அளித்தார். மிகவும் உயர்ந்த பிரமணர்களை அமர்த்தி 'அலங்கார் பஜனை' நடத்தும் படி கேட்டுக் கொண்டார். அனைத்து குழுமிருந்த பிராமணர்களுக்கும, பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் சிறப்பான விருந்து அளிக்கப் பட்டது. சிறந்த முறையில் தஷணங்கள் தரப்பட்டன. இப்படியாக அன்றைய நிகழ்ச்சி நிறைவு பெற்றது.

திவான் வெங்கண்ணா பந்த் வேதனை நிறைந்த இதயத்துடன் பொங்கி வந்த அழுகையை அடக்க முடியாமல் அத்வைணி வந்து சேர்ந்தார்.

ஆனல் உண்மையிலேயே பெரியவர் அப்பண் ணாச்சாரியார் அந்த நிகழ்ச்சிக்கு அங்கு இல்லாதது பெருங்குறைமட்டு !மல்லாமல் வேதனையையும் ஏற்ப படுத்திய தென்றல் அது விதியின் விளையாட்டு என்று தான் சொல்ல வேண்டும்,

அந்நிகழ்சியின் போது அவர் அவருடைய ஊரை விட்டு வேலைக்காரணமாக வெளியே சென்றி ருந்தார், நிகழ்ச்சி முடிந்த நான்காம் நாளன்றுதான் வீடு திரும்பினர். வீடு திரும்பியவர் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் உயிருடன் பிருந்தாவனத்தில் புகுந்ததை கேள்விப்பட்டு இடியால் தாக்குண்டது போலானர்.

ஓ........ என்னுடைய நம்பிக்கைக்குறிய குருவே எப்படி என்னிடம் உரைக்காமலே தங்களால் செல்ல முடிந்தது. ? எனக்கு தாங்கள் தங்களுடைய கடைசி தரிசத்தையும் உபதேசத்தையும் தராமலே சென்று விட்டீர்களே ... .... என்ற படி குழந்தையை போல

அழத் தொடங்கி விட்டார். கடைசியாக அவரைக் காணத்தான் பாக்கியம் செய்திருக்கவில்லை, அவருடைய பிருந்தாவனத்தை யாவது சென்று தரிசித்து வரலாம் என்ற நோக்கத்துடன் கால்நடையாகவே மாஞ்சாளியை நோக்கி ஓடிவந்தார்.

அவர் மாஞ்சாளியை நெருங்கிக் கொண்டிருந்த சமயம், ஸ்ரீஇராகவேந்திர சுவாமிகளை புகழ்ந்து புனைக் கப்பட்ட சமஸ்கிருத செய்யுளை பாடியபடி வழிபாடு நடந்து கொண்டிருந்த அப்பண்ணுச்சாரியார் பிருந்தா வனத்தில் நுழைந்த போது அச்செய்யுளின் முப்பத்தி ஓராவது பத்தின் மூன்றுவது வழியை உச்சரித்த வண்ணம் இருந்தனர். அப்பண்ணாச்சாரியார் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் பிருந்தாவனத்தின் முன் வந்து நெடுஞ்சாடையாக விழுந்து வணங்கி மரியாதை யுடன் கையை மார்போடு கட்டியபடி எழுந்து நின்றார் கண்களிலிருந்து கண்ணீர் அருவியென பெருக்கெடுத் துக் கொண்டிருந்தது.

சிறிது நேரத்திற்குப் பிறகு தன்னைத் தானே தேற்றிக் கொண்டு ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் உருவத்தை தலை முதல் பாதம் வரை நினைத்து ஒரு மனதாக வழிப்பட்டார், அப்போது திடீரென்று அவருடைய மூலையில் இந்த வழிப்பாட்டில் முதலடி முதல் கடைசிவரையில் இப்போது நான் கூறி வழிபடும் அனைத்து விஷயங்களும் எந்த அளவிற்கு உண்மை யோ அல்லது ........... என்ற எண்ணம் தோன்றியது.

இந்த எண்ணம் எழுந்த அடுத்த விநாடியே பிருந்தாவனதினுள்ளிருந்து (சரக்ஷி ஹ்ய ஷோத்ராகி

அசரிநியின் குரல் அனைவருக்கும் கேட்கும் படியாக (கடவுள் ஹயவதன வழிப்பாட்டின் போது கூறப் பட்ட ஒவ்வொரு வார்த்தையின் உண்மைக்கும் நம்பத் தகுந்த சாட்சியாவார்) ஒலித்தது அந்த அடிதான் மூப் பத்தி ஓராவது பத்தியின் நான்காவது அடியாக அமைந்து விட்டது. மேலும் ஒரு பத்தியை பாடி மூப் பத்தியிரண்டு பத்திகள் கொண்டதாக அப்பண்ணாச் சாரியார் வழி பாட்டை முடித்தார்.

அன்று முதல் ஏன் இன்று கூட ஸ்ரீ அப்பண்ணு சாரியாரால் பாடப்பட்ட அந்த சமஸ்கிருத செய்யுள் வழிபாடு பலராலும் பாடப்பட்டு பிரசித்தி பெற்றதோடு மட்டுமல்லாமல் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளுடைய சிறப்பு வழிப்பாட்டிற்குரிய செய்யுளாகவும் அமைந்து இருக்கிறது.

இப்படியாக, ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் பிருந் தாவனத்தினுள் நுழைந்த போது. அப்பண்ணாச்சாரி யார் இல்லாத குறையை போக்க, அப்பண்ணாச்சாரி யரால் பாடப்பட்ட பாடலை பலரும் தொடர்ந்து பாடி வழிப்பட்டு அவருடைய பெயரை பலரும் நினைவு கூறும் படியாக அமைந்ததும் நன்மையே!

# 16. தோத்திரங்கள்

ஸ்ரீ இராகவேந்திர தீர்த்தர் இந்த பிறவியில் மட்டுமல்லாது முந்தய அவதாரங்களின் போது ஸ்ரீ ஹரி, வாயுக்களின் நிறைந்த வாழ்த்துக்களும் ஆசிகளும் பெற்றிருந்தார். ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளிடம் கொண்ட ஆழ்ந்த ஈடு பாட்டின் காரணமாக ஸ்ரீ ஹரியும், வாயுவும் அவர்களுடைய சன்னிதானங்களை ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளுடனேயே அமைத்துக் கொண்டனர். அதாவது மேலுலகிலிருந்து ஒரு வித அம்சமாக உருமாறி அவர்களாகவே பிருந்தாவனத்தில் நிலையாக வந்துதங்கியுள்ளனர். சர்வ வல்லமை பொருந்திய முதற் கடவுள் எப்போது எங்கு செல்லுகின்றாரோ அப்போது அவர் பின்னலேயே முதற் கடவுளுக்கு தொண்டு செய்தற் பொருட்டு மற்ற கடவுளர்களும் சென்றாகவேண்டுமில்லையா? எனவே எந்த வித நிர்பந்தமும் நிபந்தனையும் இன்றி கடவுள் பரிவாரங்கள் பிருந்தாவனத்திற்கு வந்து தங்கி தரவாரியாக முதற் கடவுளுக்கு உபாசனம் (ஜரத்மியா) செய்தேயாக வேண்டும் என்பதை இன்னும் தெளிவாக இங்கு விளக்கத் தேவையில்லை. இந்த செய்தி ஸ்ரீ கோபால தாஸர் அவருடைய நீண்ட கவிதையில் சிறப்பாகவே எடுத்துக் கூறியுள்ளார்.

அப்பண்ணாச்சாரியார் பிருந்தாவனத்தையாவது தரிசிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் வீட்டை விட்டு ஓடோடி பிருந்தாவனம் வந்து சேர்ந்த போது பிருந்தாவனத்தில் பலராலும் வழிப்பாட்டின் போது கூறப்பட்ட தோத்திரங்களின் ஒவ்வொரு வார்த்தையும் எந்த அளவிற்கு உண்மையோ என்ற சந்தேகம்

அப்பண்ணுச்சாரிக்கு எழுந்தது. அப்போது பிருந்தா வனத்திற்குள்ளிருந்து எழுந்த சத்தம் அதாவது, தோத்திரங்களில் கூறப்பட்ட ஒவ்வொரு வார்த்தை யின் உண்மைக்கும் கடவுள் ஹயவதனு சாட்சியாவார் என்ற வாசகம் அங்கு குழுமியிருந்த பலருக்கு கேட்டது. ஆனுல் யார்தான் அதை உரைத்திருக்க முடியும்? என்ற இந்த வினு இயற்கையாகவே அனை வருக்கும் எழக்கூடியது தான். ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் அவருக்காக அங்கு நடந்த வழிபாட்டினுல் பெரு மகிழ்ச்சி அடைந்தவராகக் கூறியிருக்கலாமோ! இருக்காது நிச்சயம் இருக்கமுடியாது. அவரைப்பற்றி சிறியதேனும் அறிந்தவர்கள் அப்படி கூறவே மாட்டார்கள். ஸ்ரீ இராகவேந்திர சுவாமிக ளின் மனுேபாவம் பலரும் அறிந்ததே; அவர் தன்ன லமற்றவர், வழிபடுதல் நிந்தித்தல், மகிழ்ச்சியடைதல் மகிழ்வின்னம் பெருந்தன்மை, பெருந்தன்மையின் மை புகழ்தல் இகழ்தல் போன்ற அனைத்து மனித குணங் களுக்கும் அப்பார்பட்டது அண்ட சராசரங்கள் பற்றி நன்கு அறிந்த வேதாந்தி இந்த உலகில் அடங்கிய எல்லா பொருள்களின் சர்வ வல்லமைகளை பற்றி அறிந்தவர் இவர் ஒருவரே. இப்படிபட்ட கடவுளின் மறு அவதாரமான இப்பெரிய மகான் புகழுக்காக ஆசைப்பட்டு அவ்வாறு கூறியிருக்கவே மாட்டார். ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளுக்கு மிகவும் பிடித்த சிஷ்யரான அப்பண்ணுச்சாரியார்; ஷஹஷி ஹயா ஷத்ராஹி என்று கூறியிருப்பது முட்டாள்தனமாகும் அதையே நாமும் தொடர்ந்து சொல்லி வருவது நம்மு டைய அறியாமையையே குறிக்கும்.

ஸ்ரீ வாயுவின் உபாசனக் கடவுளான கடவுள் ஹயவதனு மட்டுமே சிறந்த அறிவையும், ஆழ்ந்த பக்தியையும், தன்னலமின்மையையும் அளிக்க வல்லவர் ஆவார். ஒலி, ஒளி , காற்று போன்றவற்றின் மூல இயக்கமான அப்ஹறினுனி தேவதைதான் கடவுள் ஸ்ரீ வாயு ஆகும். இந்த கடவுள் வாயுதான் பிருந்தாவனத்தை எப்பொழுதும் சூழ்ந்துள்ளார். பிருந்தாவனத்தினுள்ளிருந்து எழுந்த அந்த ஷக்ஷி ஹயஸ்ரோத்ரா ஹி, என்ற ஒலி கடவுள் வாயுவால் ஏற்படுத்தபட்டதாகத்தான் இருக்கவேண்டும். நிச்சயம் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளே வேறு யாருமோ அல்லர்.

ஸ்ரீ அப்பண்ணாச்சாரியாரால் பாடப்பட்ட இம் முக்கிய வழிப்பாட்டுத் தோத்திரம் பலராலும், ஸ்ரீ இராகவேந்திர தோத்திரம் என்றே வழங்கப்படுகிறது ஒவ்வொரு பிராமணரும் குளித்து முடித்த பிறகு பிருந்தாவனத்திற்கு முன்னே அல்லது மகானின் புகைப் படத்திற்கு முன்னே அல்லது மந்திரிகா அடங்கிய சிமிழை கையில் வைத்துக்கொண்டோ பக்தி பரவசத்துடன் நூற்றிஎட்டு முறை முழுமனதுடன் உச்சரிப்பார்களேயானல் அவர்கள் எண்ணிய எண்ணம் நிறைவேறும் மனதை ஒரு நிலைப்படுத்தி இந்த தோத்திரங்களை நூற்றிஎட்டு முறை உச்சரிப்பார்களேயாயின் பிணிகள்' பேய், பிசாசு போண்ற துர் தேவதைகளினுல் எழுகிற பயம், இன்னும் தேவையில்லாத வேறு பல பயங்களெல்லாம் நீங்கப் பெற்று சுக வாழ்வு கிட்டும் இத்தோத்திரங்களை தொடர்ந்து உச்சறித்து வருவார்களேயானுல் எல்லா வகையிலும் பயனடைவது உறுதி. யார் ஒருவர் குளித்து முடித்த பிறகு ஆழ்ந்த பக்தி

பரவசத்துடன் 'ஓம் ஸ்ரீஇராகவேந்திராய நமக' என்று நூற்றிஎட்டு முறை தினமும் கூறுகிறார்களோ அவர்களுடைய விருப்பங்கள் யாவும் நிறைவு பெறும் என்று அப்பண்ணாச்சாரியார் வெளிப்படையாகவே கூறியுள்ளார். இதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

சுருங்கக் கூறின், இந்த தோத்திரங்களை ஜபம் செய்கின்ற ஒவ்வொரு பக்தனுக்கும் எல்லா தேவைகளும் கிடைக்கப் பெற்று மகிழ்சியடைவதோடு மட்டுமல்லாமல் மெல்ல மெல்ல தானகவே தோத்திரங்களை கற்று தேர்ந்து சர்வ வல்லமை பெறும் ஞானியாகவும் அடைகிறான்.

'ஸ்ரீ வாயுஸ்துதி', என்ற நாராயணபண்டித ஆச்சாரியார் இயற்றிய செய்யுளின் முதலிரண்டு பத்திகள் ஸ்ரீ லட்சுமி நரசிம்மாவைப் பற்றி கூறுகிறது. இது போலவே ஸ்ரீ அப்பண்ணாச்சாரியார் இயற்றிய ஸ்ரீ இராகவேந்திர தோத்திரத்தின் முதலிரண்டு பத்திகள் ஸ்ரீ வாயுவை பற்றி விளக்குகிதது.

இந்த தோத்திரங்கள் புண்ணியங்களை மலை மலையாக கொண்டு வந்து குவிப்பதால் பலரும் போற்றும் படியாக சிறப்புடன் நிகழ்கிறது. உத்திராதி மடத்தை சேர்ந்த ஸ்ரீ பீதாஸ்த சுவாமிகள் என்ற மகான் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் மீது மிகுந்த ஈடுபாடு பக்தியும், கொண்டதன் காரணமாக அவருடைய பிருந்தாவனத்தில் வழிப்பாட்டின் போது ஸ்ரீ இராகவேந்திர தோத்திரங்களை உச்சரிக்க வேண்டும் என்று ஸ்ரீ சத்யா தர்ம தீர்த்தருக்கு கட்டளையிட்டார். அவருடைய விருப்பம் இன்றும் நிறைவேற்றப்பட்டு வருகிறது.

ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளுக்கு பிறகு அவரது வழிவந்த எட்டாவது பீடாதிபதியான ஸ்ரீ தீரேந்திர தீர்த்தர் தார்வார் மாவட்டத்தில் ஹோசரித்தி என்ற கிராமத்தில் அமைந்துள்ள அவரது பிருந்தாவனத்திலும் ஸ்ரீ இராகவேந்திர தோத்திரங்கள் வழிபாட்டின் போது உச்சரிக்கப்பட்டு வருகிறது. இந்த தீரேந்திர தீர்த்தர் அவருடைய வாழ்நாளின் போது உயர்ந்த தியானங்கள் பல செய்து பேறு பெற்ற பெரிய மகான் ஆவார். புண்ணியங்களை மலைமலையாகக் குவித்தனர் இன்றும் அம்மோகம் இருந்துக் கொண்டு அவருடைய பிருந்தாவனத்தை நாடிவரும் பக்தர்களுக்கு அருளாசி வழங்கிக்கொண்டிருக்கிருர். இவர் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் மீது மிகுப்த நம்பிக்கை கொண்ட பக்தராவர். ஸ்ரீ தீரேந்திர சுவரமிகளின் பிருந்தாவனத்தில் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் ஒரு அம்சமாக வந்து தங்கியுள்ளார். ஹோஸ்ரத்திக்கு சேவை செய்ய செல்லும் பக்தர்களின் கனவுகளில் பிராமணர் வடிவில் இருவர் தோன்றி ஆசீர்வதிப்பதை அறியலாம். ஒருவர் மெல்லிய, வெண்மை நிறம் கொண்ட, நீண்ட உருவம் கொண்ட ஸ்ரீ தீரேந்திர தீர்த்தராவார். மற்றொருவர் கருமை நிறம் கொண்ட உடல் பருத்த நெட்டையான ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளாவார்.

மற்றொரு உத்திராதி மடத்தை சேர்ந்த சன்னியாசி ஸ்ரீ சத்யசந்த தீர்த்தர், சாந்தமே உருவாய் கொண்ட தூய மகானவர். ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் ஏகாந்த பக்தராவார். அவருடைய பிருந்தாவனம் பிஜபூருக்கு அருகில் உள்ளது.ஸ்ரீஇராகவேந்திர சுவாமிகள்

அவர் பிருந்தாவனத்தில் சில அம்சமாக தங்கியுள்ளார் ஸ்ரீ சத்தியசந்த் தீர்த்தருடைய பிருந்தாவனத்திலும் ஸ்ரீ இராகவேந்திர தோத்திரங்களை சொல்லி வழிபடும் வழக்கம் உள்ளது. இந்த பிருந்தாவனத்தின் சந்நிதானம் மிகவும் பிரசித்தி பெற்றது. ஸ்ரீ சத்தியசந்த தீர்த்தரை ஸ்ரீஇராகவேந்திர சுவாமி II என்றும் பலராலும் அழைக்கப்படுகிறது. ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் மறு அவதாரமே ஸ்ரீ சத்யசந்த தீர்த்தர் என உத்ராதி மடத்தை சேர்ந்த பல பக்தர்கள் நம்புகிறார்கள். (இது உண்மையாக இருக்கமுடியாது) இப்படியாக ஸ்ரீ இராகவேந்திர தோத்திரம் வைஷ்ணவ சன்னியாசிகளிடையே பரவி பெருமை பெற்றுத் திகழ்கிறது.

தற்போது ஸ்ரீ இராகவேந்திர தோத்திரம் முக்கிய மந்திரமாகிட்டது. இவ்வுலகில் கனவிலும் காண முடியாத நன்மைகள் பல இராகவேந்திர சுவாமிகளை வழிபடுவதின் மூலம் கிட்டுகிறது. ஆகவே ஒவ்வொரு ஆணும் பெண்ணும் இந்த தோத்திரங்களை உச்சரிப்பதன் மூலம் பயன் பெருவார்களாக இந்த தோத்திரங்களை உச்சரிப்பதன் மூலம் நம்முடைய முழு பக்தியையும் இராகவேந்திர சுவாமிகள் திருவடிகளுக்கு அர்ப்பணம் செய்வோமாக, சோதி மடத்தை சேர்ந்த ஸ்ரீ வாதிராஜா சுவாமிகளும் மாஞ்சாலியை சேர்ந்த இராகவேந்திர சுவாமிகளும் ஏனையோரைக்காட்டிலும் சக்தி வாய்ந்த மாபெரும் சன்னியாசிகளாவர். இவ்விருவர் மட்டுமே பிருந்தாவனத்திற்குள் உயிருடன் புகுந்து இன்றும அவர்களை நாடிவரும் பக்தர்களுக்கு பொது மக்களின் கண்களுக்கு தெரிந்த போது எப்படி

அருளாசி வழங்கினூர்களோ அதை போலவே அருளா சிகள் வழங்கியபடி வாழ்நதுவருகிருர்கள். பக்தர்களின் கனவுகளிலும் தோற்றமளிக்கிருர்கள். மெச்சத் தக்க தகுதி வாய்ந்த பக்தர்கள் அவர்களின் பிருந்தாவனத் திற்கு முன்னின்று பேசவும் செய்யலாம்.

ஸ்ரீ வாதிராஜ சுவாமிகள் கடவுள் வாயுவின் மறு அவதாரமாகும் அடுத்த கல்ப யுகத்தில் வாயுவின் பீடத்தில் அமர இருப்பவர். கடவுள் வாயு ஸ்ரீ இராக வேந்திர சுவாமிகளின் பிருந்தாவனத்திற்குள்ளும் வெளியிலும் நீக்கமின்றி சூழ்ந்திருக்கின்றருர். துவா தஷா ஷேத்ர சாலிகிராம கல் இன்னும் ஏழு நூறு வகைப்பட்ட சாலிகிராம கற்களை கொண்டு அமைக்கப் பட்ட கடவுளர்களின் தனித்தனி சிலைகளை பிருந்தா வனத்திற்குள் வைத்து மூடி முத்திரையிட்டுள்ளனர் முப்பத்து மூன்று கோடி தெய்வங்களும் வந்து ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் பிருந்தாவனத்தில் நிலை யாகத் தங்கியுள்ளனர். ஏனெனில் அவர்களுடைய பக்தரான ஸ்ரீஇராகவேந்திர சுவாமிகள் என்றும் இந்த பூமியில் வாழ்ந்து பலரும் போற்றும்படியான பெரிய மாகானகத் திகழவேண்டும் என்பதற்காகத்தான் (கோபால தாஸ்) ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் கர்மஜ தேவதையாக இருந்தாலுங்கூட தற்போது தாத்வீக தேவதையாக மாற்றிக் கொண்டிருத்கிருர். இவர் சர்வ வல்லமையுடையவர் மட்டுமல்ல, சர்வ வியாபியும் கூட. இந்த இருவகை சிறப்பையும் ஸ்ரீ ஹரி, வாயு மட்டுமே இவருக்கு தந்திருக்க முடியும். எப்போது மெச்சத்தக்க, தகுதியுடைய பக்தன் அவனுடைய

தேவைகளை கிட்டப் பெற்று நலமடைய விரும்பி ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளை நாடி தரிசிக்கின்றனே அப்போது அவனுடைய விருப்பங்கள் நிறைவேற ஸ்ரீ ஹரியும் வாயுமே பிருந்தாவனத்திற்கு முன் வந்து அருளிச் செய்கின்றனர். இதனுல் பக்தர்களுடைய விருப்பங்கள் நிறைவேறி, ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் தான் அவர்களுடைய விருப்பங்கள் பூர்த்தி செய்வதாக பலருடைய நம்பிக்கை தோன்றச்செய்கின்றனர். ஸ்ரீ இராகவேத்திர சுவாமிகள் சர்வ வல்லமையுடையவராக உலகின் கண்களுக்குத் தோன்றச் செய்கின்றனர். (சர்வதந்தர ஸ்வதாந்தர)

அப்பண்ணுச்சாரியார் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளை 'கற்பவிருக்ஷகம்' என விளிக்கிருர். ஏனெனில் மாஞ்சாளியிலுள்ள பிருந்தாவனத்திற்கு சென்று சேவை செய்யும் பக்தன் நிச்சயம் பயனடைகிருன். எங்கெல்லாம் காமதேனுவின் பக்தர்கள் இருக்கின்ருர்களோ அங்கெல்லாம் சென்று தேவையானதை அளிப்பதை போல ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளும் அவருடைய பக்தர்களின் குரலுக்கு செவிமடுத்து அவர்களிருக்கும் இடம் சென்று கேட்பதை தருவதால் அவரை காமதேனு என்றும் கூறலாம். மாஞ்சாலியிலுள்ள பிருந்தாவனத்திலிருந்து சிமிழில் ம்ராத்திகத்தை எடுத்துச்சென்று அமைக்கப்பட்ட பிருந்தாவனங்கள் இந்தியாவில் பல நகரங்களிலிலும் பரவலாக உள்ளன ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் அப்படி பட்ட பிருந்தாவனங்களில் சில அம்சமாக சென்று தங்கி அவருடை பக்தர்களுக்கு புண்ணியங்களையும் அருளாசியையும் வழங்கிக் கொண்டிருக்கிருர்.

மாஞ்சாளியிலிருந்து ம்ராத்திகத்தை சிறு சிமிழ்க ளில் எடுத்துச் சென்று வீடுகளில் வைத்து வணங்கி பயனடைபவர்களும் பலர். சுவாமிகளின் புகைப் படங்களையும், அச்சிடப்பட்ட அவருடைய உருவங் களையும் வீட்டில் வைத்து வழிப்படும் பக்தர்கள் வாழ் நாள் முழுவதும் அருளாசிகள் பெற்றபடியிருக்கிறார் கள். ஆகவே யாம் கூறுவது யாதெனில் ஸ்ரீ இராக வேந்திர சுவாமிகள் தாத்வீக தேவையாக எங்கும் நிறைந்த சர்வவியாபியாக திகழ்கிறார் என்பதாகும்.

# 17· தாமஸ் மன்ரோ

ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் பிருந்தாவனத்தில் நுழைந்தது முதல் நூற்று நாற்பது ஆண்டுகளுக்குள் இந்நாட்டில் பல மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன. மத மத வேறுபாட்டாலும், உட்பகை காரணமாகவும், பழி தீர்த்துக்கொள்ளுதற் பொருட்டும் கணக்கிலடங்கா குதிரை வீரர்கள் அவர்களுக்குள்ளேயே எப்போதும் போரிட்டபடியே இருந்தனர். நாட்டில் எங்கும் அமைதி குலைந்து, ஒவ்வொருவருடைய குடும்ப வாழ்க்கையும் சீர்குலைந்து இருந்தன.

வியாபாரத்தையே முக்கிய நோக்கமாகக் கொண்டு இந்தியாவிற்குள் புகுந்த ஆங்கிலேய வர்த்தகர்கள் ஒன்றிணைந்து கிழக்கிந்திய கம்பெனி என்ற ஒரு அமைப்பை உறுவாக்கிக் கொண்டு நாட்டையே அவர்களுடைய ஆதிக்கத்திற்குக் கீழ் கொண்டு வந்து ஆட்சிப்புரிய தலைப்பட்டனர். இந்த வியாபார கூட்டமைப்பு கம்பெனி அரசாங்கம் என்று பலரும் அறியும் படியாகி விட்டது. இந்த கம்பெனி அரசு சூழ்ச்சியால் மைசூர் திப்பு சுல்தானை கொன்ற பிறகு தென்னிந்தியாவில் அசைக்கமுடியாத வலுவான நிலையான அரசை அமைத்துக் கொண்டது. தக்காணத்தை சேர்ந்த பீஷ்வாக்களும், நிஜாம் மன்னர்களும் அந்த கம்பெனி அரசுக்கு அடங்கிய கைபொம்மைகளாக ஆட்சி செலுத்தினர்.

இந்த கம்பெனி அரசு இங்கிலாந்திலிருந்து இராணுவ அதிகாரிகளை வரவழைத்து அவர்களுக்கு

முழு சுதந்திரமும் அளித்து நாட்டை ஆட்சி செலுத் தினர். அவர்கள் சாதி சமைய சண்டைகளை அகற்றி குடும்பங்களில் அமைதி நிலவச் செய்தனர். கி.பி.1800 ஆம் ஆண்டில் இங்லாந்திலிருந்து மேஜர் தாமஸ் மன்ரோ என்ற இராணுவ அதிகாரியை வரவழைத்து பெல்லாரி மாவட்டத்தின் கலெக்டராக நியமனம் செய்து. ஆட்சி பொருப்பை ஒப்படைத்தனர். 'கி.பி. 1820 ஆம் ஆண்டு சென்னையின் கவர்னராக பதவி உயர்வு பெற்று கி.பி. 1827 ஆம் ஆண்டு சென்னை யிலேயே உயிர் நீர்த்தார்.

கி. பி. 1812 ஆம் ஆண்டு கம்பெனி அரசு இந்து முஸ்லீம்களின் ஆதிக்கத்தில் உள்ள சொத்துக்களை யும் நிலங்களையும் தேவையானது போக மீதுமுள்ள தை சட்டபடி கம்பெனி அரசுக்கு கொடுத்து விட வேண்டும் என்றும், அவைகளை ஏற்று நிர்வகிக்கும் பொருப்பு கம்பெனி அரசுக்கே உண்டு என்றும் ஒரு தீர்மாணத்தை நிறைவேற்றியது.

பெல்லாரி மாவட்ட ஆட்சியாளரான மேஜர் தாமஸ் மன்ரோ அந்த தீர்மானத்தை சட்டபடி அமு லாக்கும் பொருட்டு அனைத்து கிராமங்களுக்கும் சென்று அன்பளிப்பாக கொடுத்ததென்ரோ சன்மான மாகக்கொடுத்ததென்ரோ பாராமல்கண்மூடித்தனமாக சட்டத்தை நிறைவேற்றி பலருடைய சொத்துக்களை கம்பெனி அரிசின் பொருப்பில் ஒப்படைத்தார். இப்படி வரிசையாக வந்தபோது மாஞ்சாளிக்கும் வந்து அங்கு நான்கு நர்ட்கள் தங்கியதாகக் கூறப்படுகிறது. இது 1819 ஆம் ஆண்டின் கடைசி மாதமாமக அல்லது 1820 ஆம் ஆண்டின் முதல் மாதமாக

இருக்கக்கூடும். அவ்வூரில் ஒரு பிராமண சன்னியாசிக்கு சமாதி கட்டப்பட்டிருப்பதும் ஆண்டு முழுவதும் இரவு பகல் எந்நேரமும் நெய் விளக்கும், எண்ணெய் விளக்கும் ஏற்றப்பட்டு மத குருமார்களால் பராமரித்து வரப்படுவதாகவும், அந்த சமாதிக்கு மாஞ்சாளி கிராமம் முழுவதும் சொந்தமுடையது என்றும் அரசாங்க பத்திரங்களின் மூலம் அவருக்குத் தெரியவந்தது.

மந்திராலயம் கர்நாடக மாநிலத்தைச் சேர்ந்த பெல்லாரி மாவட்டத்தில் உள்ள அதோணி தாலுக்காவில் இருந்தது. இப்போது அரூர் தாலுக்காவில் சேர்க்கப்பட்டு ஆந்திர மாநிலத்திற்கு சொந்தமாகி விட்டது. மேஜர் தாமஸ் மன்ரோ உடனடியாக அத்வைணி தாலுக்காவின் நிர்வாகியை அழைத்து அச்சமாதியின் முன் விளக்குகள் ஏரிப்பதற்கும் அதை பராமரிப்பதற்கும் முழு கிராமத்தை அளிப்பதற்கு பதிலாக குறிப்பிட்ட தொகைக்கு அங்கீகாரம் அளிக்க ஏற்பாடு செய்யும்படி உத்திரவிட்டார். அத்வைணி தாலுக்காவின் நிர்வாகி சமயபற்று மிக்க பிராமணராதலால் ஸ்ரீஇராகவேந்திர சுவாமிகளுடைய மகத்துவத்தைப் பற்றியும் அவருடைய அபரிதமான சக்திவாய்ந்த அருளாசியைபற்றியும் உயிருடன் பிருந்தாவனத்தில் நுழைந்ததை பற்றியும் விளக்கிக்கூறினார். அதோடு ஆட்சியாளரிடம் ஒரு வேண்டுதலையும் கேட்டுக்கொண்டார். ஐயா தனிப்பட்ட முறையில் அணைத்தையும் அளித்து அத்வைணி அஸதுல்லா கானின் திவானுக விளங்கிய வெங்கண்ணு என்பவருடைய விருப்பப்படி இந்த முழு கிராமமும்

ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளுக்கு அஸதுல்லாகானின் ஒப்புதலுடன் உரிமையாக்கப்பட்டது. நம்முடைய குரு ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் இன்னும் பிருந்தா வனத்தில் வாழ்ந்துகொண்டுதானிருக்கிறார்.

அவர் கூற்றை உறுதிபடுத்துவதன் பொருட்டு அத்வைணியின் நிர்வாகி மாஞ்சாளியில் போரும் புக ழுடனும் வாழ்ந்துக் கொண்டிருந்த சிலரை ஆட்சியா ளரிடம் அழைத்து வந்து மந்திராலயத்திற்கு சொந்த மான எந்த சொத்தையும் கம்பெனி அரசுக்கு சொந்த மாக்கக் கூடாது, சொந்தமாக்கமுடியாது என்று எதிர்ப்பு தெரிவிக்க வைத்தார். மேஜர் தாமஸ் மன்ரோ பிறப்பில் ஆங்கிலேயராக இருந்தாலும், அவருடைய உடலில் ஓடும் இரத்தம் பிரிட்டிஷ் இரத்தமாக இருந் தாலும், அதிகாரத்தை பயன் படுத்துவதில் இராணுவ முறையை கடைபிடிப்பவராக இருந்நாலும் கெட்ட எண்ணம் கொண்டவரல்லர். ஆண்டவனிடம் பக்தி கொண்டவர். கடவுளுக்கு பயந்தவர். எனவே சிறிது நேரம் மௌனமாக அமர்ந்திருந்தார்.

பிறகு, நன்று நிர்வாகி, உங்களுடைய குரு இந்த சமாதியில் இன்னும் உயிருடன் வாழ்வதாக கூறுகின் றீர்கள்; அப்படி அவர் இச்சமாதியில் இருப்பதாக நீங்களெல்லாம் கூறுவதால் நாளை நான் அச்சமாதி யை பார்க்க விரும்புகிறேன். பிறகு இது பற்றி யோசிக் கலாம், என்று கூறி அவருடன் வாதிட்ட நிர்வாகக் குழுவை கலைந்து போகும்படி கூறினார்.

கலெக்டர் மடத்தை பார்க்க இருக்கிற' அந்த செய்தி உடனடியாக மாஞ்சாளி முழுவதும் பரவி

விட்டது. மறு நாள் அதிகாலே ஆண்களும், பெண்களும் குழந்தைகளுடன் கலெக்டர் மடத்தை பார்க்க வருவதை பார்க்க மிகுந்த ஆவலுடன் குழுமினர். மேஜர் தாமஸ் மன்ரோ அத்வைணி தாலுக்கா நிர்வாகியுடனும், வேறு பல அலுவலக அதிகாரிகளுடனும் குறித்த நேரப்படி மடத்திற்கு வந்து சேர்ந்தபோது மந்திராலய குருக்களால் அன்பாக வரவேற்கப்பட்டார் தலேயில் அணிந்திருந்த தொப்பியையும், காலணியையும் அகற்றிய பிறகு தாமஸ் மன்ரோ அலுவலக அதிகாரிகளுடன் மடத்தினுள் நுழைந்து பிருந்தாவனத்தின் முன் சென்று நின்ருர்.

இதுதான் உங்களுடைய குருவின் சமாதியா ?

ஆமாம் ஐயா, நிர்வாகி பதிலலித்தார்.

உடனடியாக ஸ்ரீ இராசவேந்திர சுவாமி பிருந்வனத்திலிருந்து வெளி வந்து மன்ரோவுடன் ஆங்கிலத்தில் பேசினுர். அவர்களுக்கிடையே நடந்த உரையாடல் மாஞ்சாளியையும் அதனே சார்ந்த சொத்துக்களையும் கம்பெனி அரசுடன் சேர்த்துக் கொள்வது பற்றியதாக இருந்தது மகான் மன்ருேவுடன் மாஞ்சாளி அவருக்குச் சொந்தமானதென்றும், அதன் மீது அவருக்குப் பிறப்புரிமை உண்டு என்றும் விவாதித்தார்.

ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் தாமஸ் மன்ரோவுக்கு காட்சி அளித்து. பேசினுரேயாயினும், அங்கு குழுமியிருந்தவர்கள் கண்களுக்கு அவர் காட்சி அளிக்கவில்லே. அவர்களுடைய உரையாடலேயும் கேட்டாரில்லே.

அவர்களுக்குள் உரையாடல் முடிந்ததும் உடன டியாக மகான் மறைந்து விட்டார். தாமஸ் மன்ரோ மிகுந்த ஆச்சிரியமும் அதிசியமும் அடைந்தார். பேஜர் மன்ரோ நிர்வாகியிடம் இவர்தானு அந்த பெருந்தன்மையானவர்! மஞ்சள் நிற ஆடையணிந்து கையில் ஒரு கோலும், சந்தன கட்டையாளான பாத ராட்சையும் உடையவராக இருந்தாரே அவர்தானு உங்கள் குரு ?

ஆம் ஐயா, எங்கே இருக்கிருர் அவர் ?

சற்று நேரத்திற்கு முன் என் முன் இருந்தாரே.... அவருக்கு பின்புறம் சமாதியின் பீடம் இருந்ததே அவரை நீங்கள் காணவில்லையா ? அவர் என்னுடன் பேசியதை நீங்கள் கேட்கவில்லையா ?

இல்லையே ஐயா, நாங்கள் அவரையும் காண வில்லை, அவருடைய பேச்சையும் கேட்கவில்லை நீங்கள் பேசிக் கொண்டிருந்ததை தான் எங்களால் கேட்கமுடிந்தது........

மேஜர் மன்ரோ நிர்வாகியின் பேச்சைக் கேட்டு திகைத்தோடு மட்டுமல்லாமல் மந்திரத்தால் கட்டுண் டவர் போலானுர். அவருள் புரிந்துக்கொள்ள முடியாத ஏதோ ஒரு மாற்றம் நிகழ்வதை உணர்ந்தார் அந்த சமாதி மீது அவரையும் மீறிய பக்தி எழுவதையும் அவரால் உணர்ந்துக்கொள்ள முடிந்தது. பிறகு முட் டிபோட்டவாறு ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளுக்கு வணக்கம் செய்து வழிபட்டார். மந்திராலய குருக்கள் சில மந்திராக்ஷத்தைத் தந்து கௌரவமுடன் வழி யனுப்பி வைத்தார். மன்ரோ மிகுந்த பணிவுடனும்

நம்பிக்கையுடனும் அவர்கள் தந்த மந்திராக்ஷத்தை பெற்றுக்கொண்டார்.

மேஜர் மன்ரோ அவருடைய பாசறைக்குச் சென்றதும் மாஞ்சாளி கிராமத்தை கம்பெனி அரசுக்கு சொந்தமாக்க முடியாது என்றும் அக்கிராமத்திற்கு உரிமையானவர் உண்மையிலேயே சக்தி வாய்ந்த மகான் என்றும், அவர் இன்னும் சமாதியில் வாழ்ந்து வருகிறார், என்றும் அவர் கடவுளின் அவதார புருஷர் என்றும், ஒரு நீண்ட அறிக்கையை தயாரித்து அரசு அனுமதிக்காக சென்னைக்கு அனுப்பி வைத்தார்.

அம்மடத்தை சார்ந்த பிராமணர்களுக்கிடையே மகானை பார்க்க முடியவில்லையே என்றும், அவருடன் பேச முடியவில்லையே என்றும் பெருங்கிளர்ச்சியே எழுந்தது. இதனால் வருத்தமும் கலக்கமும் கொண்டு அமைதியின்றி பிருந்தாவனத்தின் முன் அமர்ந்து உண்ணா நோன்பு இருக்கத் தலைப்பட்டனர்.

சுவாமி.... அந்த அதிகாரி பிராமணனும் அல்ல' இந்தும் அல்ல ஏன் இந்தியனே அல்ல. அவன் ஒரு ஆங்கிலேயன், அப்படிபட்டவனுக்கு தரிசனம் தந்து அவனுடன் பேசியிருக்கிறீர்கள், நாங்கள்........ உங்களுடைய பக்தர்கள், உங்கள் ஜாதியில் பிறந்தவர்கள். உங்கள் மதத்தைச் சார்ந்தவர்கள், இந்தியர்கள் எப்போதும் உங்களையே வழிப்பட்டு உங்களுக்காகவே சேவை செய்து வருகின்றோம். இருந்தாலும் உங்கள் தரிசனம் எங்களுக்குக் கிடைக்கவில்லை; எங்களுடன் நீங்கள் பேசவில்லை. இது என்ன அழகு? உங்களை கண்டு பேசும் வரை நாங்கள் எழுந்து உணவைருந்த போவதில்லை

அன்றிரவு ஒரு வாலிபனுடைய கனவில் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் தோன்றி, என்னுடைய பக்தர்களே, வருந்தற்க யாம் உங்களை மிகுந்த கருணையுடன் பார்த்து வருகிறேன். எனவே என்னை கண்டு பேச வேண்டுமென்று வற்புறுத்த வேண்டாம். இப்போது நீங்கள் கூறினீர்களே அயல் நாட்டவன் என்று அது ஒரு விதத்தில் உண்மை தான். இருந்தாலும் யாம் கூறுவதை கேளுங்கள் கிருத யுகத்தில் முடிவில் அனைவரும் ஸ்ரீமன் நாராயணனை முழு திருப்தியுடன் வழிப்பட்டனர். அதோடு அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்க ஸ்ரீ ஹரி அவர்களை கலியுகத்தில் மேஞ்சலர்களாக (அயல் நாட்டவர்களாக) பிறக்க அருளிற்செய்தார் இங்கே இப்போதுள்ள ஆங்கிலேயர்கள் அனைவரும் கிருதயுகத்து மக்களே ஆவர். தாமஸ் மன்ரோ கிருதயுகத்தில் மிகுந்த பக்தியுள்ள ஒருமாபெரும் அரசன். எனவே அவனுக்கு தரிசனம் தந்து பேசினோம். எனவே தவறான அபிப்ராயம் கொள்ளற்க.... என்று கூறி மறைந்தார். பிறகு தான் அந்த பிராமணர்கள் கொண்ட சபதத்தை மாற்றிக் கொண்டனர்.

அதே சமையத்தில் சென்னை கவர்னருடைய மனைவிக்கு கருவுற்று பிரசவிக்கும் நிலையில் இருந்தமையால் பிரசவத்திற்காக அவர் இங்கிலாந்து புறப்பட்ட போது கவர்னரும் நீண்ட நாட்கள் விடுமுறை எடுத்துக்கொண்ட உடன் செல்ல வேண்டியதாயிற்று எனவே காலியாக இருந்த கவர்னர் பதவியை ஏற்றுக் கொள்ளும்படி மேஜர் தாமஸ் மன்ரோவுக்கு கம்பெனியரசு உத்தரவு இட்டது. பெல்லாரி மாவட்டத்தின்

கலெக்டரான தாமஸ் மன்ரோ மாநில கவர்னராக உயர் பதவியை ஏற்றுக்கொண்டார்.

கவர்னர் பொறுப்புக்களை ஏற்றுக் கொண்டதும் கவர்னராக அவருடைய அலுவலகத்திற்குள் நுழைந்த முதல் நாளே அவருடைய மேஜையின் மீது மாஞ்சாளி கிராமம் பற்றி அவர் அனுப்பிய அறிக்கையிருப்பதை கண்டார். மாஞ்சாளி மயானின் தரிசனத்தால் தான் இந்த பதவி உயர்வு, வேறு யாது காரணமும் இல்லை என்று திட்டவட்டமாக ஒரு நம்பிக்கை உணர்வு அவர் நெஞ்சில் எழுந்தது. உடனே தலையிலணிந்தி ருந்த தொப்பியை கழற்றிவிட்டு ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் உருவத்தை கண்முன் நிறுத்தி பய பக்தியோடு வணங்கினர். அதோடு அநத அறிக்கை சரியானது என்று ஒப்புதல் அளித்தார்.

தாமஸ் மன்ரோ பெற்ற இந்த அனுபவம் பற்றி சென்னை சிறப்பிதழ் (Gazette) குறிப்பிடப்பட்டுள்து அதனுடைய ஒருபகுதி இதோ :-

சென்னை அரசு சிறப்பிதழ் :-

அத்தியாயம் XI பக்கம் 213 மாஞ்சாளி (அதோ ணி தாலுக்கா)

சென்னை அரசு சிறப்பிதழ் :-

பாடம் XI பக்கி 213. மாஞ்சாளி (அதோணி வட்டம்

ஆயிரத்து நூற்றுப் பன்னிரண்டு மக்கள் தொகை கொண்ட மாஞ்சாளி என்கிற சிறிய கிராமம் அதோ ணி தாலுக்காவின் வட பகுதியில் துங்கபத்திரை அமைந்துள்ளது, மாதவ சன்னியாசியாகிய ஸ்ரீ இராக வேந்திர சுவாமிகளின் சமாதி அங்கிருப்பது பலரும்

அறிந்ததே. ஒவ்வொரு ஆண்டும் ஆகஸ்டு மாதத்தில் அங்கு விழாக்கள் நடைபெறும். நிஜாமின் ஆதிக்கம் உள்ள இடங்களினின்றும், மைசூர் மாநிலங்களிலிருந்தும் ஏன் பம்பாயிலிருந்து லிங்கியர்கள் உட்பட கணக்கிலடங்கா யாத்திரீகர்கள் வந்து அவ்விழாவில் கலந்துகொள்கிறார்கள். இந்த பிருந்தாவனம் (சமாதி) எந்தவித தொல்பொருள் சிறப்பும் வாய்ந்ததல்ல. அந்த பிருந்தாவனத்திற்கு அதோணியின் கவர்னராக இருந்த அஸதுல்லாகானின் (கி.பி. 1662-1682) புகழ்பெற்ற திவான் வெங்கண்ணா பந்த் என்பவரால் ஏகபட்ட நிலங்கள் மானியமாக அளிக்கப்பட்டது என்று M.S.S. என்ற பட்டயம் கூறுகிறது.

அந்த இடம் பற்றி மன்ரோ ஒரு விநோதமான கதையை கூறியுள்ளார். பிருந்தாவனத்திற்கு அளிக்கப்பட்ட மானிய சொத்துக்களை கம்பெனி அரசுக்கு கொடுத்து விட வேண்டும் என்று அதிகாரத்தால் பயமுறுத்தினர். இது தொடர்பாக மன்ரோ மாஞ்சாளிக்கு விசாரணைக்கு :(சென்னை விமர்சன பத்திரிக்கை VII ) வந்தார். காலணியையும் தொப்பியையும் கழற்றியபின் சமாதி முன் சென்று நின்றார். மகான் சமாதியிலிருந்து வெளிப்பட்டு அவரை சந்தித்து பேசினார். அவர்களுக்குள் நடந்த உரையாடல் பிருந்தாவனத்திற்கு சொந்தமான மானிய சொத்துக்களை கம்பெனி அரசுடன் சேர்த்துக்கொள்வது பற்றியதாகும். மகான் மன்ரோவின் முன் தோன்றி பேசியதை அங்கு சூழ்ந்திருந்த மக்கள் எவருடைய கண்களுக்கும் அவர் தோன்றினாரில்லை. அவருடைய குரலை கேட்டாரில்லை

விவாதம் முடிந்ததும் மன்ரோ அவருடைய கூடாரத்திற்கு திரும்பி வந்து மான்யங்களை திரும்பப் பெறும் பிரேரணையை ரத்து செய்தார். மந்திராலயத்தில் அளிக்கப்பட்ட புண்ணிய அரிசியை பெற்று அதை அவருடைய அன்றைய உணவாக சமைக்கும் படி உத்தரவிட்டார்.

# 18. முடிவுரை

கற்றறிந்த அறிவுள்ள மக்கள் ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளுடைய புத்தகங்களை நம்பிக்கையோடும் பக்தியோடும் பயில்வார்களானுல் உலக பிடிப்புகளிலிருந்து விலகி ஸ்ரீ ஹரி, வாயு போன்ற தெய்வங்களை பற்றிய மெய்ஞானம் பெற்று முடிவில் முக்தி எய்துவார்கள். மகானுடைய திருவடிகளை பக்தி சிரத்தையோடு வழிபடுவார்களானுல் அனைத்து ஆசைகலும் நிறைவேறி வாழ்க்கையில் முழு பயனை எய்துவார்கள்

ஸ்ரீ ஹரியை தொடர்ந்து உபாசனம் செய்வார்களானுல் இந்திரனுடைய காமதேனு, கர்பக விருக்ஷம் போல ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் அவருடைய பக்தர்களுக்கு அதிசியக்கத்தக்க சக்திகளை தந்து குடும்பக் கஷ்டங்களிலிருந்து விடுவித்து தந்தையை போல காத்தருள்வார்.

பேய், பிசாசு போன்ற கெட்ட துர்தேவதைகளினுல் பிடிக்கப்பட்டு அவதியுருவதினின்றும், காமம் கிருதம், மதம் போன்ற கெட்ட எண்ணங்களின்றும் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் அருளாசி வழங்குவதன் மூலம் தம்மை விலகியிருக்க துணைபுரிந்து காத்தருகிருர்

ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் மெய்யறவு, ஆழ்ந்த பக்தி தன்னலமின்மை, தகுதிக்கு மீறிய திறமை, நல்ல உடல் வன்மை, எண்ண எழுச்சிகளை கட்டுப்படுத்தும் திறன் ஏன் அபராக்ஷ ஞாணத்தைக் கூட நமக்கு அருளிற் செய்கிருர்.

ஊமைகளுக்கு பேசும் ஆற்றலையும், காது கேளா தவர்களுக்கு ஆற்றலையும், பலவீனமானவர்களுக்கு கேட்கும் நடக்கும் சக்தியையும் கொடுக்கிறார். அவரு டைய பக்தர்களும் நட்சத்திரங்களால் ஏற்படும் கெட்ட பலனை நீக்கி மகிழ்ச்சியடையச் செய்கிறார். அவருடைய உண்மையான பக்தர்களுக்கு புண்ணி யங்களை குவியல் குவியலாகத் தந்து முக்தியை அடையும் வழியை கூட காட்டுகிறார்.

ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் மக்களுக்கு அருளு வதற்காக மட்டுமே இம்மண்ணில் அவதரித்தாரே தவிர சபிப்பதற்காக அல்ல. இம் மண்ணில் வாழும் எல்லா உயிரினங்களுக்கும் நல்வாழ்வு கொடுக்கும் படி அவர் ஆண்டவனை பிரார்த்திக்கின்றார். அவர் என்று யாருக்கும் துன்பம் தர மாட்டார். 'ஸ்ரீ இராகவேந்திராய நமக,' என்று தினமும் ஒருவன் ஜெபம்செய்வானானால் அவனுடைய வாழ்வில் முடியாத காரியங்கள் கூட நல்லபடியாக முடிந்து பலனளிக்கும்.

ஒருவன் பிருந்தாவனம் சென்று பிரதக்ஷிணைக ளும், வணக்கங்களும் செய்வானானால் அவனுடைய உடல் நலனுக்கு ஏற்றவாறு எல்லா வித புனித தலங் களையும் சென்று தரிசித்த பேறு பெறுவான். மகானு டைய ஜல அபிஷேக நீரை (பாதஉதகம்) ஒருவன் தலையில் தெளித்து கொள்வதால் கங்கை யமுனை போன்ற புனித ஆறுகளில் நீராடியது போன்ற பலனை அடைவார்.

ஸ்ரீ இராகவேந்திர சூத்திரங்களை தினமும் ஓது வார்களானால் மனிதர்களால் குணப்படுத்த முடியாத

நோய்கள் கூட குணமாககி விடும்.

தினமும் குளித்து முடித்த பிறகு பிருந்தாவன திருஉருவப் படத்திற்கு முன் விளக்கும் பக்தியையும் ஏற்றி யார் தொழுது வருகிறார்களோ அவர்களுக்கு பலராலும் மதிக்கத்தக்க ஸ்ரீ ஹரி, வாயு தெய்வங்களை பற்றி மெய்யறிவு பெற்று பெருமை பெறக்கூடிய ஆண் குழந்தை பெறும் பாக்கியம் பெறுவார்கள்.

சுருங்கக் கூறின், பகைவர்கள், கொடிய விளங்குகள். விஷஜந்துகள் முதலியவைகளினால் ஏற்படும் பயங்களிலிருந்து நம்மை காத்தருளும் சக்தி மகானுக்கு உண்டு சம்சார துன்பத்திலிருந்து எல்லோரையும் விடுவித்து நல்வாழ்வளிப்பார்.

இவ்வளவு சக்தி வாந்த கடவுளின் அவதார புருஷராகிய ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் நம் எல்லோருடைய நன்மைக்காகவே இங்கு இருக்கிறார். அவர் மீது நம்பிக்கையும் பக்தியும் கொண்டவர்கள் அவருக்கு தொண்டு செய்யட்டும் இல்லையேல் வேண்டாம். இந்நூலை நம்பிக்கையோடு படித்தவர்களுக்கும் இனி படிக்க இருப்பவர்களுககும் ஸ்ரீஹரி, வாயுமற்றும் ஸ்ரீ இராககவந்திர சுவாமிகளின் கிருபை கிடைக்கப்பெறுமாக.

  

# 1. ஸ்ரீ குரு இராகவேந்திர தோத்திரம்

ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் பக்தரும் சிஷ்யருமான ஸ்ரீ அப்பண்ணாச்சாரியார் தொகுத்த கிரந்தங்களுக்கு இராகவேந்திர தோத்திரம் என்று பெயர். இது முப்பத்தியிரண்டு பத்திகள் கொண்ட சமஸ்கிருத நூலாகும். மகான் குருவின் மனித சக்தியை மீறிய தெய்வசக்தியை இது விளக்குகிறது. அசைக்க முடியாத பக்தியுடன் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளை மனதில் நிறுத்தி இத்தோத்திரங்களை ஒப்பிப்போமானால் நம்முடைய விருப்பங்கள் பூர்ணமாக நிறைவேறும்.

ஆகையால், சமஸ்கிருதத்தில் உள்ள தோத்திரங்களில் பூஜிக்கத் தக்க முக்கிய புண்ணிய தோத்திரமாக இந்த இராகவேந்திர தோத்திரம் விளங்குகிறது. ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் புனித வார்த்தைகள் புனித கங்கையுடனும், மற்ற தகுதிகளுடனும், நல்லொழுக்கங்களுடனும் ஒப்பிட்டு முதல் பத்தியில் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் இரகசிய முறையில் புண்ணியங்களை பக்தர்களுக்கு அளிப்பதன் மூலம் மன வலிமையுடன் எதிரிகளை வாதத்தில் வெற்றி கொள்ளும் தகுதியையும் பக்தர்கள் என்றும் ஆர்வமும் சுருசுருப்பும் உள்ளவராகத் திகழவும் மலடிகளுக்குக் கூட மகப்பேறு அளித்து அதனால் ஆனந்தத்தையும் துர்தேவதைகளையும் அதனால் வரும் கேடுகளை நீக்கியும் அருள வல்லவர். மேலும் கடவுளுக்குறிய தெய்வீக விஷேஷ குணங்களனைத்தும் கொண்டவர் ஸ்ரீ குருராஜ் என அப்பண்ணாச்சாரியார் அவருடைய தன்மைகளை தன்மையாக விளக்குகிறார்.

சுருங்கக் கூறின், ஸ்ரீ மாதவருடைய கடல் போன்ற சித்தாந்தங்கள் பொங்கி வழிந்து பால் போன்ற வெண்மையை நிலவுக்கு அளிக்கிறது என்ற பொருள் கொண்ட, ஸ்ரீ சுவாமிகளே அவருடைய பக்தரான ஸ்ரீ அப்பண்ணாச்சாரியார் வாயிலாக புகழ்கிறார்.

மதிப்பு மிக்க புண்ணிய தோத்திரங்கள் விளக்கும் உண்மையின் முக்கிய துவத்தை பக்தர்கள் கிரகித்துக் கொள்ளும் வகையில் வரிசைகிரமமாக சமஸ்கிருத மூலத்தை தமிழில் மொழிபெயர்த்து கீழே தரப்பட்டுள்ளது,

தோத்திரங்கள் ; 1 & 2,

இந்த இரு தோத்திரங்களையும் இணைத்துப் படிக்க வேண்டும். இவ்வாரான இணைதோத்திரங்கள் சமஸ்கிருதத்தில் யுக்மாஸ் (Yugmas) என்றழைக்கப் படுகிறது. தான் எடுத்துக்கொண்ட வினை இடையில் ஊறுகள் இன்றி வெற்றிகரமாக முடிக்கப்படவேண்டும் என்பதற்காக ஸ்ரீ குருராஜ அவர்களின் புண்ணிய சொற்களை புனித கங்கையுடன் ஒப்பிட்டு மங்கலகர மாக ஸ்ரீ அப்பண்ணாச்சாரியார் தொடங்குகிறார்.

தோத்திரங்கள் : 1 & 2 மொழி பெயர்ப்பு விளக்கம்.

காமம், குரோதம் போன்ற உணர்ச்சிகள் பல வற்றையும் வேரறுத்த முற்றும் அறிந்த (பூர்ண போதம்) பேறு அளிக்கவல்ல, துவைத்த சாஸ்திரங் களில் குறைவின்றி பெற்ற அறிவுடைய தீர்க்க தரிசி யாகிய, யோகிகளால் (பரமஹம்சர்கள்) அவர்கள் இதயத்தில் தோன்றியதை இஷ்டபடி வாழ்த்திப்

பாடப்படுகின்ற ஞானம் எனும் மூன்றுவது கண்ணை பெற்றவரும், தாமரை மலர்போன்றபாதங்களை உடைய கடவுள் விஷ்ணுவிற்கு பூர்ண விசுவாசத்தை அர்பணித்தவரும் பூர்வம், உத்திரங்கள் அடங்கிய மாமிசைகளை இயற்றியவரும், பிரம்மாவாலும், சிறு கடவுளர்களாலும் அடைக்கலமாக ஏற்கபட்டவரும், மாயைகளை அகற்றி மத தத்துவங்களை ஆதரிக்கத் தக்க தகுதியை பெறும் படி செய்தவரும், உயிர்களின் பன்மை நிலையை தரவாரியாகப் பிரித்து விருத்தி செய்கிற அதி சக்தி வாய்ந்த உயர்ந்த ஸ்தானத்தை யுடைய கடவுள் ஸ்ரீ விஷ்ணுவின் பக்தரும், பல வேறு பட்ட உலக உண்மைக்கும், தனிப்பட்ட உயிர்களுக் கும் இடைப்பட்ட நிலைகளை படிப்படியாக விளக்கி வரும், நாடி வருகின்ற பக்தனை புனிதமடையச் செய் கிறவருமானவரும் ஆவார். ஸ்ரீ மாதவர் என்று விளக் கும் ஸ்ரீ குருராஜருடைய புனித மொழிகள் கடலின் கரை கண்டவை.

தோத்திரங்கள் : 1 & 3. விளக்கம் II

பிரம்மாவாலும், மற்றும் பல சிறு கடவுளர்கள் வண்டு உருவம் கொண்டு வழிப்பட்டு வணங்குகின்ற தாமரை மலர் போன்ற பாதங்களை உடைய கடவுள் விஷ்ணு கொன்ற பெரிய யானைகளையும் கடித்து கிழிக்வும், ஆடுகள் போன்ற சிறு விளங்குகளையும் விழுங்கவும் வல்ல அச்சமூட்டும் கோரை பற்களை கொண்ட தாடைகளை உடைய பெரு முதலைகளை உடையதுமானதும் மூன்றுவது கண்ணை கொண்டுள்ள கடவுள் சங்கரரில் தலையிலிருந்து தோன்றி கீழிறங்கி

பூமிக்கு வந்து தன் மனம்போன போக்கில் அலைந்து திரிவதும், கிழக்கேயும் வடக்கேயும் உக்கிரமாக எழும் கோப அலைகளை உடையதும் கடலில் பிரகாசமான நிலவு தோன்றுமிடத்தே சென்று கலப்பதுமான புனித கங்கை அவனுடைய புண்ணிய நீரால் பக்தர்களை புனிதமடையச் செய்கிருள்.

குறிப்பு :

ஸ்ரீ குருராஜருடைய புனித மொழிகளை புனித கங்கை ஒப்பிட்டு கங்கைக்குள்ள சக்திக்கு இணையான சக்தியும், சிறப்பும் அவருடைய மொழிகளுக்கு உண்டு என ஆசிரியர் அப்பண்ணுச்சாரியார் விளக்குகின்றுர். ஆசீர்வாதம் அளிக்கக்கூடிய பாட்டாக இவ்விரண்டையும் கொள்ளலாம்.

அடுத்த பாடல்களின் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் சக்திகளை (மகிமைகளை) ஆசிரியர் விளக்குகிருர்.

பாடல் 3

தாமரை மலர் போன்ற அவருடைய பாதங்களில் பக்தியை யார் அர்ப்பணம் செய்கிருர்களோ அந்த பக்தருடைய விருப்பப்படி வேண்டுவனவெல்லாம் தந்து, பெரு மலைகளை பிளக்க வல்ல வைரம் போன்ற தகுதிடைய கடவுள் இந்திரனைப் போல, பக்தர்களின் பாவ மலைகளை பிளந்து புனித குணமாகிய கருணை உள்ளம் கொண்டவரான ஸ்ரீ குருராஜ சுவாமிகள் எப்போதும் எவ்விடத்திலும் நம்மையெல்லாம் காத்தருளுகின்றுர்.

கடவுள் இந்திரர் அவருடைய பேரடிகளால் பேரு

மலைகளை பிளந்தெரிவது போல நம்முடைய பாவங்கள் எல்லாவற்றையும் ஸ்ரீ குருராஜ் களைத்தெரிந்தார் என ஆசிரியர் விளக்குகிறார்.

அடுத்த பாடலில், ஸ்ரீ விஷ்ணுவின் உயரிய பக்தனாக அவதாரமெடுத்த ஸ்ரீ பக்த பிரகலாதனை குறிப்பிட்டு ஸ்ரீ குருராஜ் புனித அறிவும், கடவுளின் விசேஷகுணங்களையும் கொண்டவரென அவருடைய பெருமைகளை ஆசிரியர் விளகிக் காட்டுகிறார்.

பாடல் 4

ஸ்ரீ குருராஜ் ஸ்ரீ ஹரியின் தாமரை பாதங்களுக்கு பக்திப் பரவசத்துடன் அர்ப்பணித்து செய்த தொண்டு காரணமாக தலைசிறந்த தெய்வீக ஆற்றல்களை பெற்றவர். அவருடைய பக்தர்களின் சிந்தையில் தோன்று கிற விருப்பங்கள் நிறைவேற கற்பகதருவை போல ஆசிகள் அளித்த வண்ணம் இருக்கிறார்.

உள்ளத்தாலும், உடலாலும் வலியை சிறிதும் பொருட்படுத்தாது ஸ்ரீ குருராஜ் அவர்களுக்கு யார் யார் தொண்டு செய்கிறார்களோ அவர்கள் எங்கும் நிறைந்துள்ள முற்றும் அறிந்த கடவுளின் கிருபையை பெறுவார்கள். இப்பாடலை பாராயணம் செய்வதன் மூலம் அவர்களுடைய விருப்பங்கள் நிறைவேறுவதோடு மட்டுமல்லாமல் ஆத்மீக அறிவும் பெறுவர் என்று ஆசிரியர் இப்பாடலின் பயனை விளக்குகின்றார்.

அடுத்த மூன்று பாடல்களில் ஆசிரியர் ஸ்ரீ குருராஜரின் நற்பெருமைகளை விளக்குகின்றார்.

பாடல் 5

மனிதனின் மன அமைதியை கெடுக்க வல்ல இன்ப துன்பங்களினாலும் ஆபத்துகளாலும் ஏற்படு கின்ற பாபங்களின் சேர்க்கையை நெருப்பிட்ட பஞ் சென எரித்துப் பொசுக்குகிற நல்நிமித்தங்களை பக்தர் களின் வாழ்வில் உண்டாக்குகிறார். எந்த விதமான வலியையும் சகித்து பொருத்துக்கொள்ளக் கூடிய மன வலிமையை தருவதோடு மட்டுமல்லாமல், பூதம், பேய் பிசாசு பொன்ற துர் உயிர்களை அடியோடு களைதற்கு வெற்றி பெற இயாலாத வேதனை கடலை கடக்க வல்ல ஆற்றலையும் வல்லவர்.

பாடல் 6

உணர்ச்சிகளை வேரறுத்தவர், மாசுமருவற்ற தூய்மானவர் போக்கிரித்தனமாக எதிர்ப்பவர்களையும் வாதத்தால் தோல்வியடையச் செய்கிற தகுதியுடை யவர், ஒளி பொருந்திய புனித வாழ்வை மேற்கொண் டவர், தெய்வீக குணாதிசயங்களை கொண்ட அவரு டைய தனை சிறந்த பேச்சுக்கு கடவுள் ஆதிசேடரும் தலைவணங்கக்கூடியவர்.

பாடல் 7

ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் மனித சக்திக்கு அப்பாற்பட்ட மகத்துவம் பெற்ற நற்குணங்களை கொண்டவர். பக்தர்கள் மகப்பேறு பெற்று சந்ததிகளு டன் வேறு பல செல்வங்களனைத்தையும் பெற்று வள மாக வாழவும், அவர்களுடைய உள்ளத்தில் உறுதி யான பக்தியையும், ஆழ்ந்த நல்லறிவும், உடல் நல னையும் அருளிற்செய்து பேணிக்காப்பவராகவும் திகழ்

கிறுர். அதோடு உடலிலும் உள்ளத்திலும் வியாதிகளின்றிக்காக்க வல்லவர்.

பக்தர்களின் உள்ளத்தில் திடமான பக்தி ஏற்படச் செய்தற் பொருட்டு ஸ்ரீ குருராஜருடைய முக்கியமான தெய்வீக குணங்களை ஆசிரியர் மேலே உள்ள மூன்று பாடல்களில் விளக்கம் தருகிறுர்.

இப்பாடல்களை பாராயணம் செய்வதால் கெட்ட செயல்களை நிகழாவண்ணம் அழிக்கப்பட்டு ஸ்ரீ குருராஜருடைய அருளால் பக்தர்களுடைய ஆசைகள் நிறைவேறப்படுகின்றன.

பாடல் 8

பூஜையின்போது பிருந்தாவனத்திற்கு அபிஷேகம் செய்து வழிந்து வந்த புனிதநீர்(பாதோதகம்) கங்கை, மற்றும் வேறு பல புனித நதிகளில் நீராடுவதால் கிடைக்கும் தூய்மையை விட அதிக தூய்மை அளிக்க வல்லது. அதோடு அதிப்ஹியுதிகா, அதிதவிஹா, அத்ஹயஸ்த்மிகா என்ற முப்பெரும்துயரங்கள் நீக்குகிறது. மலடிகளுக்கும் சந்ததிகள் அளிக்க வல்ல சக்தி வாய்ந்தது தாகினிகள், சங்கினிகள் போன்ற சிறு துர்தேவதைகளினுல் ஏற்படுகின்ற கேடுகளை வரும்முன்னே அழிக்க வல்லது. பாவங்களை வேறுடன் களைந்து பக்தனை புனிதப்படுத்துகிறது.

இந்த பாடலை பாராயணம் செய்து அதன் படி நடந்தால் புனித கங்கையில் நீராடுவதால் பாவங்கள் அடியோடு களையப்படுதல் போல பாவங்கள் நீக்கப்படும் என்பது குறிப்பு.

அடுத்த பாடலில் ஆசிரியர் ஸ்ரீ குருராஜருடைய பக்தர்களின் இயல்புகளை விளக்கி, அவர்கள் மகானுடன் தொடர்பு கொள்வதால் நல்கும் பயனை விளக்குகிறார்.

பாடல் 9

தாமரை மலர் போன்ற பாதங்களை உடைய ஸ்ரீ குருராஜரை அழகு பட அலங்கரித்து, அவருடைய திருவடிகளையே அடைக்கலமாக கொண்டு, எப்போதும் அவருடைய சக்தியின் பெருமைகளை பாடிக் கொண்டிருக்கும் அவருடைய பக்தருடைய தரிசனத்தை கண்ட பொழுதிலேயே கலகங்கள் உண்டாக்குகின்ற நம்முடைய பாவங்கள் அழியும்.

ஸ்ரீ குருராஜருடைய பக்தர்களை காணும் பொழுதிலேயே நம்முடைய பாவங்கள் அழிக்கப்படுகின்றன என்று ஆசிரியர் விளக்கம் தருகிறார்.

இந்த பாடலை மனனம் செய்தால் அனைத்து பாவங்களும் நீக்கப்படுகின்றன என்பது சுருக்கம். அடுத்து வரும் 10,11,12,13,14 ஆகிய ஐந்து பாடல்களிலும் ஸ்ரீ குருராஜருடைய நற்குணங்கள் தெளிவாக்கப்படுகின்றன.

பாடல் 10

ஸ்ரீ இராகேவந்திர சுவாமிகள் குருவின் உதவியின்றியே அனைத்து சாஸ்திரங்களையும் கற்றுத் தேர்ந்தவர், ஸ்ரீ மாதவருடைய சித்தாந்தங்களாகிய ஸ்ரீ விஷ்ணுவின் மேன்மை புகழ், உலக உண்மை, கடவுளுக்கும் தனிப்பட்ட உயிருக்கும் உள்ள வேறுபாடு போன்ற பலவற்றிற்கு விளக்கங்கள் தந்து

விமர்சித்துப் பரவ செய்தவர். ஸ்ரீ சுதீந்திர சுவாமிகள் கைகளால் உருவாக்கப்பட்டு, இணையில்லா கீர்த்தியை உடைய யோகி ஸ்ரீ விஜயயேந்திரா சுவாமிகளால் வளர்க்கப்பட்டவர்.

பாடல் 11

புனித அறிவு, நிலையான பக்தி, வம்சம் பெருக மகப்பேறு, நீண்ட ஆயுள், இம்மை புகழ், ஆத்மீகத்திலும் வாழ்க்கையிலும் சிறந்த செல்வத்தையும் அளித்து, அவர் மீது கொண்ட பக்தி காரணமாக பயங்களை போக்கி என்னை வாழ்த்தி அருள வல்ல ஸ்ரீ குருராஜ் ஒருவரே என்னுடைய ஆத்மீகத்தலைவர் ஆவார்.

இப்பாடலை பாராயணம் செய்து ஒப்பிவித்தால் புனித அறிவு; மகப்பேறு போன்ற பல செல்வங்களும் குறைவின்றி பெறலாம்

பாடல் 12

ஆழ்ந்த அறிவால் முக்கிய விஷயங்களனைத்தையும் கற்றுத் தேர்ந்து விவாதத்தால் எந்த எதிரியையும் வெற்றி கொள்ளும் தலைசிறந்த ஆத்மீகத் தலைவரான ஸ்ரீ குருராஜருக்கு இணையாக இம்மண்ணில் வேறிலர்.

குறிப்பு : ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் மட்டுமே மனித தன்மைக்கும் அப்பார் பட்ட மேலான குணங்கள் கொண்ட அவதார குரு என ஆசிரியர் அழுத்தம் திருத்தமாக கூறுகிறார்.

இப்பாடலை பாராயணம் செய்தால் அறிவும், விவாதிக்கும் ஆற்றலும் பெற ஏதுவாகும்.

பாடல் 13
கடவுளை யே காணவல்ல மாசு தருகின்ற உணர்ச்சிகளை நீக்கமறப் பெற்ற தகுதியுடைய பக்தர்களின் விருப்பங் களை நிறைவேற்றிக் காத்தருளும் ஸ்ரீ குருராஜுக்கு இணையாக இம்மண்ணில் வேறிலர்.

பாடல் 14

அவதியுறும் மனித உயிர்கள் மீது கருணையும், இரக்கமும் காட்டக்கூடிய துறவு கொண்டு பிரார்த் தனை மூலம் ஆண்டவனின் உள்ளத்துடன் இணைந்த தரும், சாதாரண உணர்ச்சிகளை வென்றவரும், விவா தத்தில் மனித சக்தியையும் மீறிய சக்தி கொண்டவ ரும், வாழ்த்தி ஆசீர்வதிக்கவோ அல்லது சபிக்கவோ வல்ல இனிய குணம் கொண்ட ஸ்ரீ குரு ராஜருக்கு இணையாக இம்மண்ணில் யாருமில்லை.

குறிப்பு : தூய குணங்களை பெற்ற ஸ்ரீ குருராஜ் யோகம் செய்த படி பிருந்தாவனத்திற்குள் உயிருடன் வாழ்ந்த படியே பக்தர்களை வாழ்த்தி அருளிற் செய்த வண்ணம் இருக்கிறார்.

நான்கு மூர்த்திகளான ஸ்ரீ இரரமர், நரகரி, கிருஷ் ணன், வேதவியாசர் ஆகியோர் ஸ்ரீ குருராஜருடைய இதய சிம்மாசனத்தில் அமர்ந்திருந்து பக்தர்களுக்கு ஆசிகள் வழங்கியபடி இருக்கின்றனர். ஸ்ரீ இராமர் இம்மை வாழ்க்கைக்கு வேண்டியசக்திகளை அருளிற் செய்கிறார். ஸ்ரீ நரகரி துர்தேவதைகளால் எழும் கெடு தல்களையும் ஆபத்துக்களையும் வேறு பல துன்பங்க ளையும் ஆசீர்வதிப்பதன் மூலம் அழித்து வருகிறார். ஸ்ரீ கிருஷ்ணர் வம்சம் வளர மகப்பேறு செல்வங்கள்,

மண்ணீய சக்திகள் யாவையும் வழங்கிக்கொண்டிருக்கிருர். ஸ்ரீ வேதவியாசர் ஆழ்ந்ல!அறிவை அளிக்கிருர்.

அடுத்த பாடலில் ஆசிரியர் உடல் நோய்களை ஸ்ரீ குருராஜர் அவருடைய கிருபையால் களைவதுபற்றி விவரிக்கிருர்.

பாடல் 15

அறியாமை, மறதி தன்மை, ஐயம், தகுதி புரிந்து கொள்ளும் ஆற்றலின்மை, மந்த நிலை; பேசுவதில் குறைபாடு, திக்கிப் பேசுதல் போன்ற வேறு பல உடற்குறைபாடுகள் ஸ்ரீ குருராஜருடைய கிருபையால் நீங்குகின்றன.

இப்பாடலை பாராயணம் செய்வதால் நோய்களின்று காக்கப்படுகின்ருேம். அடுத்த பாடலில் அஸ்த ஹஸர மந்திர மாகிய 'ஓம் ஸ்ரீ இராகவேந்திராய நமக', என்னும் ஸ்ரீ இராகவேந்திரருடைய தலைவணக்மச் சொல்லை உச்சரிப்பதன் மூலம் கிட்டும் பயனை விளக்குகிருர். ஆசிரியர்.

பாடல் 16

எட்டு வார்த்தை கொண்ட மந்திரமான ஓம் ஸ்ரீ இராகவேந்திராய நமக, என்னும் நாமத்தை பக்தியுடன் உச்சரிப்பாயேயானல் உன்னுடையவிருப்பங்கள் யாவும் நிறைவேறும் என்பது நிச்சயம்.

நெறி தவாருமல் தினமும் காலை, மதியம் மாலை ஆகிய மூன்று வேளைகளிலும் ஸ்ரீ குருராஜரை இதய பூர்வமாக வழிப்பட்டு வருவோமானல் நினைப்பது நிறைவேறும் என அடுத்துவரும் 17 & 18 பாடல்களில் ஆசிரியர் விளக்குகிருர்.

பாடல் 17

ஸ்ரீ குருராஜ் புனித அறிவை பெற அருளிற் செய்கிறார். நாம் உடலாலும், உள்ளத்தாலும், சொல்லாலும் செய்கிற பாவங்கள் அனைத்தையும்அழிக்கிறார் நான்கு வகை கர்மங்களான புருஷார்த்தம், அர்த்தம் காமம் மோட்சம் ஆகியவற்றை அளிக்கவல்லவர்.

பாடல் 18

யார் ஒருவர் ஸ்ரீ குருராஜருக்கு ஐயமேதுமின்றி எப்போதும் மனதால் எண்ணி வழிப்பட்டு வருகிறார்களோ அவர்களுக்கு இவ்வுலகிலும், அடுத்து வரும் உலகிலும் இன்பங்களே கிட்டும்.

இந்த பாடலின் நோக்கம் யாதெனின் ஸ்ரீ குருராஜ புருஷார்த்தங்களடங்கிய நான்கு வித கர்மங்களை அருளிச்செய்து பணிவும், பக்தியும் தந்து நம்மை எப்போதும் காத்தருளுகிறார் என்பதாகும்.

ஆசிரியர் அடுத்து வரும் பாடலில் ஸ்ரீ குருராஜ் அளவிடற்கறிய ஆழம் கொண்ட பக்திகளை யுடையவர் என்றுரைக்கிறார்.

பாடல் 19

ஆழம் காணற்கரிய தெய்வீக சக்தியும், அளவிற்கு மிஞ்சிய அறிவும் கொண்டு, சாஸ்திரங்களில் இணையில்லா அறிஞருமாக ஸ்ரீ இராகவேந்திர சுவாமி விளங்குகிறார்.

ஸ்ரீகுருராஜ் பாவங்களின் கேடுகளுக்கு அப்பாற்பட்டவர் ஸ்ரீ மாதவருடைய சித்தாந்தக்கடல் பொங்கியெழ பால்போல் காயும் நிலவே காரணம். அப்படிப்பட்ட தத்துவங்களை கற்ற ஸ்ரீகுருவே என்னை காப்பாய்

குறிப்பு :

ஸ்ரீ குருராஜர் முன்னதாகவே, ஸ்ரீ ஜெயதீர்த்த சுவாமிகளின் 33 நூல் தொகுதிகளில் ஒன்ருன துவை ததத்துவங்களை அமைத்த ஸ்ரீ மாதவரால் தொகுக்கப் பெற்ற ஸ்ரீ நியாய சுதாவை, மூல நூலிலிருந்து படித்து எளிமையான விளக்கம் தந்து எழுதிய 'பரிமளம்' என்கிற விமர்சனத்தின் காரணமாக, பரிமளாச்சாரி யார் என்னும் பட்டப் பெயரைப் பெற்றவர். தத்துவ மாணவனொருவன் ஒளிபொருந்திய இந்த பரிமளத்தில் உதவியில்லாமல் ஸ்ரீ நியாயசுதாவை படித்து புரிந்து கொள்ளுதல் கடினம், ஆகவே ஸ்ரீ குருராஜருக்கு, ஸ்ரீமாதவமத துஹதபதி பந்தரம, என சிறப்பு பெய ரிட்டு அழைப்பது பொருந்தும்.

இந்த 18ம் 19 வது பாடல்களும் இம்மை பயன் ஆத்மீக ஆசிகளை வழங்குவன.

அடுத்து வரும் 20,21 வது பாடல்களில் பிருந்தா வனத்திற்கு செய்யும் பிரதக்ஷ்ணம் நபஸ்காரம் ஆகியவைகளினல் எழும் பயனை நல்குவான்.

பாடல் 20ம் 21ம்

அனைத்து சாஸ்திரங்களும் கூறும் பயனை பெற வும் புண்ணிய தலங்களுக்கு யாத்திரைசெய்து பெறும் பயனை விட பெரும் பயன் பெறும் பொருட்டும் குரு தேவருடைய பிருந்தாவனத்தை எத்தனை முறை வலம் வர முடியுமோ அத்தனை முறைவலம் வருவேன் பிருந்தர்வனத்திலிருந்து வழிந்து வரும் அபிஷேக நீரை, என் சிந்தையில் எழுகிற விருப்பங்கள் நிரை வேறும் பொருட்டு உடல் மீது தெளித்துக் கொள்வேன்

அவருடைய திருநாமத்தை உளமாற வாயால் உச்ச சரித்துக் கொண்டே இருப்பேன்.

குறிப்பு :

இந்த பாடல்களின் மூலம் ஆசிரியரின் ஆழ்ந்த பக்தி வெளிப்படுகிறது. 1. பிருந்தாவனத்தை வழிப டுதல், 2. அபிஷேக நீரை உடல் மீது தெளித்துக் கொள்ளுதல், 3) ஸ்ரீ குருராஜருடைய பாதங்களுக்கு பணிவான வணக்கங்களை சமர்ப்பித்தல், 4. நான்கு கர்மங்களை பூர்வமாக அடைதற்பொருட்டு அவரு டைய நாமகானத்தை சொல்லுதல். இந்நான்கையும் முறை தவருது செய்வோமானல் 1. புண்ணிய தலங்களை தரிசித்தவன் பலனையும், 2. கங்கை போன்ற புனித நதிகளில் நீராடிப் பெறும் புண்ணிய மும், 3. ஆழ்ந்த ;தத்துவ அறிவும், 4. நாம் எண் ணிய எண்ணங்கள் பூர்ணமாக நிறைவேறியும் பலன் கள் கிடைக்கப் பெறும் என்கிருர் ஆசிரியர்.

இப்பாடலை பாராயணம் செய்வதன் மூலம் மேற் கூறிய அனைத்து நலன்களும் குறைவறப் பெறுகிறோம்

அடுத்த பாடலில் ஆசிரியர் சம்சாரக் கடலி லிருந்து கரையேறும் வழியை விளக்குகிருர்.

பாடல் 22

காதல், ஆசை, கோபம் போன்ற குடும்பம் எனும் குட்டையில் எழும் நீர் குழலாகிய சம்சாரக் கடலிலி ருந்து ஓ.... குருதேவா என்னை காத்தருள்வாயாக. நீர் குமிழ்போன்ற போலி இன்பங்கள் தரும் வேதனை நிறைந்த கொல்லும் தன்மையுடைய குணங்களின்றும் பலதரப்பட்ட வேறு வேதனைகளினின்றும் என்னை காத்தருள்வாயாக.

ஸ்ரீ குருராஜை சிந்தையில் நிறுத்தி எந்த பக்தன் இந்த பாடலை பராயணம் செய்கிருனோ அவன் சம்சாரக் கடலிலிருந்து மீறும் ஆற்றலை பெறத்தக்கவனுவான்

23 பாடல் முதலாக 32 பாடல்கள் வரையில் தோத்திரங்களை பாடுவதன் மூலம் கிட்டும் 'பாலருத்தி என்கிற பெறுமையை ஆசிரியர் விளக்குகிருர்.

பாடல் 23

ஆழ்ந்த பக்தியுடன் யார் ஒருவன் ஸ்ரீகுருராஜரை பூஜிக்கிருர்களோ அவர்களை தொழு நோய் போன்ற கொடிய தொற்று நோய்கள் நாடாவண்ணம் மகான் காத்தருள்வார்.

இந்த பாடல் தொழுநோய் போன்ற தொற்று நோய்களை அழிக்கும் கொண்டது.

பாடல் 24

இத் தோத்திரத்தை பாராயணம் செய்வதன் மூலம் அறியாமையில் மூழ்கிக் கிடக்கும் மனிதன் அறிவாகிய பார்வையையும், பிறக்கும் போதே ஊமையாய் பிறந்தோர் பேசும் ஆற்றலையும். சிறந்த செல்வங்கள் பெற்று நூருண்டுகள் வாழவும் ஆசி கிடைக்கிறது.

இப்பாடலை பாராயணம் செய்வதன் மூலம நீண்ட ஆயுளும் சிறந்த செல்வமும் கிடைக்கும் என்பதே இதன் சுருக்கம்.

பார்டல் 25

இந்த தோத்திரத்தை பக்தி சிரத்தையுடன் சொல்லி ஸ்ரீ குருதேவருடைய அபிஷேக நீரை யார் ஒருவர் குடிக்கிருர்களோ அவர்கள் எந்தவித வயிற்று

நோய்களும் இன்றி சுகவாழ்வு பெறுவர்.

பாடல் 26

இதயபூர்வமான உறுதியுடன் ஸ்ரீகுருதேவருடைய பாதங்களுக்கு பக்தியை அர்ப்பணிக்கும் மூடவன் ஸ்ரீ குரு தேவரின் கிருபையால் கால்கள் பெற்று விரைவாக நடக்கும் ஆற்றலையும் பெறுகிருன்.

பாடல் 27, 28

சூரிய, சந்திர கிரஹணங்களின் போது இந்த புண்ணிய தோத்திரங்களை உச்சரிக்கும் பக்தர்கள் பூதம், பேய், பிசாசு போன்ற துர்தேவதைகளால் நிகழும் தீமைகளை நீங்கப் பெற்று சுகவாழ்வு பெருவார் கள்.

இப்பாடல் தரும் சுருக்கம் பக்தர்கள் துரதேவதை களினின்று காக்கப்படுவர் என்பதாம்

பாடல் 29

பிருந்தாவனத்திற்கு நெய்விளக்கேற்றி தீபாரா தனை செய்து இந்ததோத்திரத்தை பக்தி பரவசத்து டன் வழிபடுகிருர்களோ அவர்கள் ஆழ்ந்த அறிவும் வாரிசும் கிடைக்கப் பெறுவார்கள்,

இப்பாடலின் பொருள் மகப்பேறு பெறுவோம் என்பதாகும்.

பாடல் 30

இந்த தோத்திரத்தை சொல்வதன் மூலம் ஸ்ரீ குருராஜருடைய கிருபையால் கடவுளை பற்றிய உயர்ந்த அறிவும் கடவுளின் ஆழ்ந்த பக்திஏற்படவும் எதிரிகளை விவாதத்தால் வெல்லக்கூடிய ஆற்றலும் சந்தேகமின்றி கிடைக்ப் பெற்று நிறைவு கிட்டுகிறது.

இந்த பாடல் வாதத்தினால் எதிரிகளை தோற்கடிக்க வல்ல அறிவும், அதோடு எல்லாவிருப்பங்களும் கிடைக்க அருளுவார் என உரைக்கிறது.

பாடல் 31

இந்த தோத்திரத்தை உச்சரிப்பதன் மூலம் அதிகாரிகளாலும் திருடர்களாலும், புலி நாகம், முதலை போன்ற கொடிய விலங்குகளாலும் எழும் பயங்கள் நீக்கப்படுகின்றன என்பது விளம்புகிறது.

இப்பாடல் அனைத்து பயங்களும் நீங்கி துணிவு கிடைக்கிறது என விளம்புகிறது.

தோத்திரங்களை பாராயணம் செய்து பணிவுடன் ஸ்ரீ குருதேவரை வணங்கும் பக்தனுக்கு இந்த உலகிலும் எப்போதும் மகிழ்ச்சி கிடைக்கும் என உறுதியாக கூறுகிறார் அப்பண்ணாச்சாரியார் அடுத்து வரும் பாடலில், இப்பாடலின் கடைசிவரியாக, ஸ்ரீ குருராஜர் அப்போது வணங்கிய ஸ்ரீ கடவுள் ஹயவதனனே உண்மை தத்துவங்களின் சாட்சியாக உள்ளார் என பிருந்தாவனத்தில் இருந்தபோது ஆசிரியர் அப்பண்ணாச்சாரியார் சொல்லியதை அமைக்கப்பட்டுள்ளது,

பாடல் 32. யார் ஒருவர் ஸ்ரீ குருராஜரின் புண்ணிய பாதங்களுக்கு இத்தோத்திரங்களை சொல்லிபக்தியை அர்பணிக்கிறார்களோ அவர்களை எந்தவித ஆபத்தும் துர் அதிர்ஷ்டமும் சூழாவண்ணம் தடுத்து. எப்போதும், மகிழ்ச்சியாகவே இருக்கவும் அவருடைய பெயர் பலவிடங்களிலும் பரவி (புகழுடன்) நற் செல்வமும் பெற்று வாழவும் ஸ்ரீ கடவுள் நாராயணன் கிருபையயளிக்கிறார்.

ஸ்ரீஅப்பண்ணாச்சாரியார் ஒன்று முதல் கடைசிவரை பக்தியின் போது மிகையான பக்திகாரணமாக பிருந்தாவனத்தின் முன் ஏதும் சொல்ல வார்த்தை வராமையால் நின்று விட்டார் அப்போது ஸ்ரீ குருராஜ் கடைசி பத்தியின் கடைசி வரியை இணைத்தார். கடவுள் ஹயவதன அப்பண்ணாச்சாரியாரின் நெஞ்சில் இருந்து கொண்டு அவ்வரியின் உண்மைக்கு சாட்சியாக அமைந்தார். குருராஜ தோத்திரத்தை அமைத்த ஸ்ரீ அப்பண்ணாச்சாரியாரைப் பற்றி எடை போடவோ விளக்கவோ வேறு வார்த்தைகளே இல்லை. அந்த அளவிற்கு உயர்வாக அந்த தோத்திரங்களை அமைத்துள்ளார். ஆயிரக்கணக்கான பக்தர்கள் அவர்களுடைய ஆசைகளை நிறைவேற்றிக் கொண்டிருக்கின்றனர். இப்போதும் கணக்கிலடங்கா பலதரப்பட்ட பக்தர்கள் பம்பாயிலிருந்தும் வந்து நூற்றெட்டு முறை தோத்திரங்களை சொல்லி மந்திராலய சுவாமிகளுக்கு தொண்டு செய்து பிருந்தாவனத்தை வலம் வந்து பயனடைகிறார்கள்.

கடைசியாக இத்தோத்திரங்களை அமைத்தவரை மற்றி கடைசி தோத்திரங்கள் கூறுகின்றன.

பாடல் 33 இந்த புண்ணிய தோத்திரங்களை ஸ்ரீராகவேந்திர சுவாமிகளின் ஆசியால் நன்கு கற்றுதேர்ந்த ஸ்ரீ அப்பண்ணாச்சாரியார் தொகுத்தார்.

பாடல் 34 கருணை உள்ளம் கொண்ட எப்போதும் உண்மைக்கும் மதத்திக்கும் வளர்ந்து கொடுக்கவல்ல இராகவேந்திர குருவை வழிபடுவோமானால் பக்தர்களுக்கு கற்பக தருவை போலவும் அவர்கள் விரும்பியது கிடைக்கும்படியாக சுவாமிகள் அருளிற்செய்வார்.

ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளை வழிப்படுவதால் கிட்டும் பயனையே மேற்கூறிய தோத்திரங்களில் சுருக்கமாகக் கூறியுள்ளார் ஆசிரியர்.

கடைசியில் உள்ள மூன்று பாடல்களும் தோத்திரங்களுடன் சேர்க்கப்பட்டதல்ல, ஸ்ரீ குருராஜரை சென்று வழி பட சக்தர்களுக்கு அளிக்கப்பட்ட தோத்திரங்களின் ஒரு பகுதியாகக் கொள்ளப்பட்ட சுருக்கமாகும் ஆகவே இந்த மூன்று பாடல்களையும் தோத்திரங்களின் முடிவில் அமைக்க அவசியமாயிற்று, இந்த இராகவேந்திர தோத்திரங்களை தொகுத்தவர் அப்பண்ணாச்சாரியார் என்பது அனைவருக்கும் தெரிந்ததே.

# 2. ஸ்ரீ இரகவேந்திர மடத்தை

சார்ந்த பரம்பரை குருக்கள்



| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ மாதவ ஆச்சாரியார் | கி.பி | 1238-1307 |
| 2. | ,, பத்மநாப தீர்த்தர் | ,, | 1307-13 4 |
| 3. | ,, நரகரி தீர்த்தர் | ,, | 1314-1323 |
| 4. | ,, மாதவ தீர்த்தர் | ,, | 1323-1340 |
| 5. | ,, அக்லோபய தீர்த்தர் | ,, | 1340-1355 |
| 6. | ,, ஜெய தீர்த்தர் | ,, | 1355-1388 |
| 7. | ,, வித்தயாதி தீரத்தர் | ,, | 1388-1392 |
| 8. | ,, கவீந்திர தீர்த்தர் | ,, | 1392-1399 |
| 9. | ,, வ.கேஷ தீர்த்தர் | ,, | 1399-1407 |
| 10 | ,, இராமச்சந்திர தீர்த்தர் | ,, | 1407-1436 |
| 11 | ,, விபுதீந்திர தீர்த்தர் | ,, | 1436-1586 |
| 12. | ,, ஜெய்மித்திரர் | ,, | 1486-1498 |
| 13. | ,, ரகுநாத தீர்த்தர் | ,, | 1498-1533 |
| 14. | ,, சுரேந்திர தீர்த்தர் | ,, | 1533-1539 |
| 15. | ,, விஜயேந்திர தீர்த்தர் | ,, | 1539-1595 |
| 16. | ,, சுதீந்திர தீர்த்தர் | ,, | 1595-1623 |
| 17. | ,, இராகவேந்திர தீர்த்தர் | ,, | 1623-1671 |
| 18. | ,, யோகேந்திர தீர்த்தர் | ,; | 1671-1688 |

| | | | |
|---|---|---|---|
| 19. | ,, | சுரேந்திர தீர்த்தர் | 1688-1692 |
| 20. | ,, | சுமதீந்திர தீர்த்தர் | 1692-1725 |
| 21. | ,, | உபேந்திர தீர்த்தர் | 1725-1728 |
| 22. | ,, | வதிந்திர தீர்த்தர் | 1728-1750 |
| 23. | ,, | வசுதீந்திர தீர்த்தர் | 1751-1785 |
| 24. | ,, | வரந்திநர தீர்த்தர் | 1761-1785 |
| 25. | ,, | திரேந்திர தீர்த்தர் | 1785 |
| 26. | ,, | புவனேந்திர தீர்த்தர் | 1785-1799 |
| 27. | ,, | சுபோதீந்திர தீர்த்தர் | 1799-1835 |
| 28. | ,, | சுஜனேந்திர தீர்த்தர் | 1835-1861 |
| 29. | ,, | சுதர்மேந்திர தீர்த்தர் | 1861-1872 |
| 30. | ,, | சுகுநேந்திர தீர்த்தர் | 1872-1884 |
| 31. | ,, | சுப்ரத்மநந்திர தீர்த்தர் | 1884-1903 |
| 32. | ,, | சுக்ரதிந்தர தீர்த்தர் | 1903-1212 |
| 33. | ,, | சுசிலேந்திர தீர்த்தர் | 1912-1926 |
| 34. | ,, | சுவ்ரதிந்திர தீர்த்தர் | 1926-1933 |
| 35. | ,, | சுயமித்ர தீர்த்தர் | 1933-1962 |
| 36. | ,, | சுஜயேந்திர தீர்த்தர் | 1963 லிருந்து |

# 3. ஸ்ரீ குருமூல ராமர் வரலாறு

ஸ்ரீ இராமரின் உருவச்சிலையை ஸ்ரீ மூல ராமர் என்று அழைப்பதன் காரணத்தையும் மந்திராலய பிருந்தாவனத்து மதகுருவாகிய ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளுக்கு முன்னால் ஸ்ரீ மாதவாச்சாரியார் முதற் கொண்டு ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் வரையிலும், அவருக்கு பின்னால் வந்து கொண்டிருந்த ஏனைய மதகுருமார்க மார்களும் வழிவழியாக வழிப்பட்டு வருவதன் சிறப்பும் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் பக்தர்களுக்கு தெரிந்ததே.

இது தொடர்பாக பலரும் அறிந்த வரலாற்று தொடர்பு மிக்க கதை ஒன்று வழங்கப்பட்டு வருகிறது. வைவஸ்வத மநுவின் மகனாகிய இக்ஷ்வாகு என்பவர் பிரம்மாவை நோக்கி கடும் தவமிருந்தார். இதனால் பெருமகிழ்ச்சியடைந்த பிரம்மா இக்ஷ்வாகு வழிபடு தற்பொருட்டு ஸ்ரீ ராமரின் உருவச்சிலை ஒன்றை தந்தருளினார். இந்த விஹ்ரகம் இக்ஷ்வாகுவிற்குப் பிறகு வழிவழியாக அவருடைய குடும்பத்தாரால் வழிப் பட்டு கடைசியில் கஜபதி மன்னரின் கருவூலகத்திற்கு ஏப்படியோ வந்து சேர்ந்து விட்டது. இந்த சமையத் தில் கஜ்பதி அரசையாண்ட அரசர் இறந்துவிடவே அவருடைய மகன் சிறுவயதானனாகையால் அரச பொருப்பை ஏற்கமுடியாமல் போய் விட்டது. இதனால் பெரிதும் குழப்பம் அடைந்த அரசவை பிரதானிகள் ஏகமனதாக முடிவெடுத்து பட்டத்து யானையிடம் ஒரு நீர் நிறைந்த குடத்தையும் ஒரு பூமாலையையும் தந்து நகரில் செல்ல விட்டனர். நகர மக்கள் யாவரும்

பெருநடையிட்டு வந்த களிறு கண்டு வீதியோரம் ஒதுங்கி நின்றனர். பொதுமக்களை போலவே ஸ்ரீ நரகரி தீர்த்தரும் ஒரு புறம் ஒதுங்கி நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார். பட்டத்து யானையோ அவரிடம் நெருங்கி குடத்து நீரை அவர் மீது ஊற்றி பூமாலையையும் போட்டு முதுகின் மீது ஏற்றி கொண்டு அரண்மனை வந்து சேர்ந்தது இந்த நரகரி தீர்த்தர் தான் கஜபதி அரசை நேர்மையுடன் திறம்படவும் பன்னிரண்டு ஆண்டுகள் ஆட்சி செய்த பின் அரச பொறுப்பிற்கு உரியவனாக வளர்ந்த மன்னர் மகனிடம் அரசை ஒப்படைத்து கருவூலத்திலிருந்த ஸ்ரீ மூல இராமரின் விஹரகத்தை மட்டும் அவருடன் எடுத்துக் கொண்டு வெளியேறினார் அதற்கு பிறகு அந்த விஹ்ரகத்தை ஸ்ரீ மாதவாச்சாரியாருக்கு தந்தார்

மேலும் கூறப்பட்ட உண்மைக்கு சான்று பகர ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் சகோதரி மகனாகிய மகா கவி நாராயண ஆச்சாரியார் இயற்றிய இராகவேந்திர விஜயம் என்ற செய்யுளின் தோந்திரத்திலிருந்து எடுத்துக் காட்டு கூறலாம் காண்டம் ; 11 தோத்திரம் 7

பத்மனாப தீர்த்தரின் மகனாகிய நரகரி தீர்த்தர் குருவின் கட்டளைப்படி மூலராம விஹரகத்தை மாதவரிடம் வழிபடுதல் பொருட்டு ஒப்படைத்தார்.

மூலராம விஹரகத்தை வழிபடுதலினால் விளையக்கூடிய நன்மைகள் பற்றி தோத்திரம் 8 காண்டம் 11ல் விளக்கியுள்ளார்.

எங்கே இந்த விஹரகத்தை பூஜித்து வழி படுகிறார்களோ அங்கே வாழ்க்கையில் ஏற்படக்கூடிய

நான்கு வகை செயல்களினின்று விடுவிக்கப்பட்டு தூய்மை அடைகின்றோம்.

இவ்வாறு ஸ்ரீமாதவாச்சாரியாரின் குரு ஸ்ரீ நரகரி திர்த்தர் கூறி (அக்ஷோபய திர்த்தர்) தொடர்ந்து வழி மட்றி பேறு பெறும்படி கூறியருளினார்.

தொடர்ந்து மகாகவி நாராயண ஆச்சாரியார் தோத்திரம் 18, காண்டம் 11லும் தோத்திரம் 73, காண்டம் VI லும் ஸ்ரீ இரமருடைய உருவச்சிலை ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் கைக்கு வந்த முறையை விளக்குகிறார்.

தோத்திரம் 18, காண்டம் 11

மாதவ சித்தாந்தங்கள் பரவுவதற்கு காரணமாயிருந்த ஸ்ரீ மூல ராம விஹரகம் அக்ஷோபயா ர்தீத்தரிடமிருந்து வித்தியரராஜ தீர்த்தரிடமும், அவரிடமிருந்து கவீந்திர தீர்த்தரிடமிருந்த ஸ்ரீ வகேஷ் தீர்த்தரிடமும், பின் இராமச்சந்திர தீர்த்தரிடமும் வந்து சேர்ந்தது.

தோத்திரம் 73 காண்டம் VI

கடைசியாக தோத்திரம் 73 இல் ஸ்ரீ நாராயண ஆச்சாரியார் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தரிடம் ஒப்படைத்து பீடாதிபதியாக்கிய போது மூல ராமரையும் தந்து அதனை வழிபடுவதற்குரிய உரிமையையும் தந்து வாழ்த்தியருளியதோடுமட்டுமல்லாமல் வியாசருடைய இரு விஹரகங்களையும் சாத்திரங்களை விளக்குகின்ற புத்தகங்களையும், மைஸிரகால் செய்யப்பட்ட இரு விசிறிகளையும், ஒரு வெண்ணிற குடையையும் தங்கத்தாலான பல்லக்கு ஒன்றையும், காஞ்சி தமதி

மத்தளம், காளி போன்ற இசைக்கருவிகளையும் தந்தருளினர்.

ஸ்ரீ மூல ராமருடைய வழிபாடுகளனைத்தையும் நிறைவேற்றக் கூடிய முழு உரிமையையும் மந்திராலய ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் மடத்தை சார்ந்த பிரதிகளின் பிரதான பீடாதிபதியையே சாரும். மந்திராலயத்தை விட்டு வெளியே செல்லும்போது கூட மதகுரு அதனை மிகுந்த பாதுகாப்புடன் உடன் எடுத்துச் செல்வது வழக்கம்.

ஸ்ரீ மூல ராமருடைய புனித சிலைக்கு எப்படி பூஜை செய்கிறார்கள் என்பதை இங்கே தெளிவாக கூறவிரும்பாவிடினும், சுருக்கமாகவும் வரிசைகிரமமாகவும் வழிபாட்டு முறையை (விதானம்) பக்தர்கள் அவர்களுடைய அறிவுக்கு ஏற்ப புரிந்து கொள்ளும்படியாக கீழே தரப்பட்டுள்ளது.

### ஷோடஸோபசார பூஜை

### பதினாறு வகைபட்ட பூஜைகள்

1. த்யாநம் சமர்பயாமி :— பூஜை செய்யப் போகிற தேவதையை மனக்கண்முன் நிறுத்தி தியானம் செய்தல்

2. ஆவாஹநம் சமர்பயாமி :— பூஜை செய்யப் போகும் தேவதையை அதற்கு பிரதிநிதியாக வைத்திருக்கும் விக்ரஹம், படம், கலசம், முதலியகளின் மீது புஷ்பம் அக்ஷதை இவைகளை சேர்த்து அந்த தேவதை தங்கும்படி பிரார்த்திப்பதாகும்.

3. ஆஸநம் சமர்பயாமி :— ஆஸநத்தில் அமர்த்திய தேவதைக்கு, புஷ்பங்கள் கையில் எடுத்துக்

கொண்டு சுலோகம் சொல்லி மூர்த்தி மீது சேர்த்து ஆஸநத்தில் அமர்த்தியதாக பாவனை செய்தல்,

4. பாத்யம் சமர்பயாமி :— தேவதையின் திருவடிகளை அலம்புதல்.

5. அர்கியம் சமர்பயாமி :— உத்திரிணியில் தீர்த்தம் எடுத்து தேவதையின் இருகைகளிலும் அளிப்பது போல பாவனை செய்து வேறு பாத்திரத்தில் சேர்ப்பது.

6. ஆசமநீயம் சமர்பயாமி ;— உத்திரிணியில் தீர்த்தம் எடுத்து தேவதையின் வாய்க்கு நேராகக் மூன்று முறை காட்டி வேறு பாத்திரத்தில் சேர்த்தல்.

7. மதுபர்க்கம் சமர்பயாமி :— தயிர், பால், தேன் நெய் இவைகளை சமமாகக் கலந்து மதுபர்க்ப்ம் இதை பகவானுடைய முகத்தெதிரே காண்பிக்க வேண்டும்.

8. பஞ்சாம்ருதம் சமர்பயாமி :— தேன், நெய், சர்க்கரை, தயிர், பால் இவை ஐந்தையும் சேர்த்து பஞ்சாமிர்தம் (வாழைப் பழமும் சேர்ப்பதுதுண்டு), விக்ரகமானல் இதனல் அபிஷேகம் செய்யலாம் படமானல் புஷ்பத்தால் துனியெடுத்து புரோக்ஷிங்கவேண்டும்.

9. சுத்தோதக ஸ்நாநம சமர்பயாமி :— சுத்தமான தீர்த்தத்தால் அபிஷேகம் செய்தல் படமானல் புஷ்பத்தால் துளியெடுத்து புரோகிக்ஷிக்க வேண்டும்,

10. வஸ்த்ரம் சமர்பயாமி :— வசதியுள்ளவர்கள் தேவதைக்கு இரண்டு வஸ்திரங்கள் சமர்ப்பிக்கலாம். வஸதிரத்ரத்திற்குப் பிரதிநிதியாக இலைம்

பஞ்சை மாலைப் போல நீட்டி, நடுநடுவே குங்கும தீர்த்தால் நெருடி மாலை போல சமர்ப்பிக்கலாம்.

11. உபவீதம் சமர்பயாமி :— பூணூல் அணிவிப்பது. அல்லது முன்போல பஞ்சினால் செய்த மாலை அணிவிப்பது, அதுவும் இயலாவிடில் அக்ஷதை சேர்க்கலாம்.

12. ஆபரணம் சமர்பயாமி :— நகைகளை பூட்டி மகிழ்தல்.

13. கந்தம் சமர்பயாமி :— அரைத்த சந்தனத்தை மார்பிலும் சிரசிலும் அளித்தல்.

14. அக்ஷதை சமர்பயாமி :— மஞ்சள் அல்லது குங்குமம் கலந்த அக்ஷதையை சமர்ப்பித்தல்.

15. புஷ்பம் சமர்பயாமி :— பலவகை புஷ்பங்கள் மாலை இவைகளை சிரசு, கழுத்து தோள் திருவடி இவைகள் மீது சமர்ப்பித்தல்.

16. தீபம் சமர்பயாமி:— பலவகை தீபங்களை ஏற்றி அதை பகவானுடைய முகத்திலிருந்து பாதம் வரை பிரதக்ஷிணமாக பல முறை சுற்றுதல்.

மேலே கூறியதை தொடர்ந்து கீழே குறிப்பிட்டுள்ளதையும் செய்தல் வேண்டும்.

1. நைவேதியம் :— அன்னம், பாயாசம், பக்ஷயம் முதலிய சமைத்த பொருள்களை பகவானுக்கு நிவேத்தியமாக அளித்தல்.

2. ஹஸ்த பிரக்ஷணம் சமர்பயாமி :— தெய்வீகத்தில் கைகால்களை அலம்புதல்.

3. தாம்பூலம் சமர்பயாமி :— வெற்றிலை பாக்கு தாம்பூலம் அளித்தல்.

4. சுவர்ண புஷ்பம் சமர்பயாமி :— பொற்காசுகளையும் புஷ்பங்களையும் தட்சணமாக அளித்தல்.

5. மந்தர புஷ்பம் சமர்பயாமி :— எல்லோருடைய கைகளிலும் மலர்களை அளித்து சேர்ந்தார் போல கடவுளுக்கு அளித்தல்.

6. நீலாஞ்சணம் சமர்பயாமி :— கற்பூர ஆரத்தி செய்தல்.

7. பிரதக்ஷண சமர்பயாமி :— தெய்வத்தை வலம் வந்து வணங்குதல்,

பூஜை முடித்தலின் போது செய்யவேண்டியன :—

1. ச்சத்ரம சமர்மயாமி :— குடையளித்தல்.
2. சாமாரம் சமர்பயாமி :— சாமரத்தால் வீசுதல்
3. வ்யஜநம் சமர்பயாமி : — விசிறியால் வீசுதல்
4. கீதம் சமர்பயாமி :— பாட்டு பாடுதல்.
5. ந்ருத்யம் சமர்பயாமி :— நடனம் புரிதல்.
6. வாத்யம் கோஷ்யாமி :— வாத்தியம் வாசித்தல்.
7. ஆந்தோளி காம்சமர்பயாமி :— ஊஞ்சலில் ஆட்டுதல்.

ஸமஸ்த ரர்ஜோபசாராந் சமர்பயாமி :—

8. கிருஷ்ணர்பணம் :— கடைசிமுறையாக வணங்குதல்.

அனைத்து பூஜைகளும் முடிந்த பிறகு தலைமை மதகுருவால் தெய்வத்தை கையிலெடுத்து வந்து தரிசணத்திற்காக பக்தர்களுக்கு முன் காண்பிப்பார்

தோத்திரம் 28. காண்டம் VIII

ஸ்ரீ இராகவேந்திர தோத்திரத்தின் 28 வது தோத்திரம் காண்டம் VIII த்தை படிக்கும் போது நம் உடல் பக்தி பரவசத்தால் புல்லரிக்கச் செய்கிறது. ஸ்ரீ ராமநவமி தினத்தன்று ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் அவருடைய அபிமான கடவுளாகிய ஸ்ரீ மூலராம விஹரகத்திற்கு பால் தயிர், நெய், தேன் வாழைபழம் ஆகியவைகள் கலந்து பஞ்சாமிர்தத்தை அபிஷேகம் செய்தார்.

